# காலந்தோறும் பறம்புமலை

அழகப்பா பல்கலைக்கழகத்தில் தமிழில் முனைவர் (Ph.D)
பட்டத்திற்காகப் பகுதிநிறைவாக அளிக்கப் பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்

**சொ. அருணன்**

பதிவு எண்: 0940 (2013-14)

ஆய்வு நெறியாளர்

முனைவர் **மு.பழனியப்பன்**

தமிழ்த்துறைத் தலைவர்,

**மன்னர் துரைசிங்கம் அரசு கலைக் கல்லூரி, சிவகங்கை.**




**அழகப்பா பல்கலைக்கழகம்**

தேசிய தர நிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்றுத் தரமதிப்பீட்டில் A+(CGPA3.64) தகுதி பெற்றது.

**காரைக்குடி.**

**ஜனவரி 2018**

முனைவர் **மு.பழனியப்பன்** எம்.ஏ., எம்ஃபில்., பிஎச்.டி.,
தமிழ்த்துறைத் தலைவர்,
மன்னர் துரைசிங்கம் அரசு கலைக் கல்லூரி,
சிவகங்கை.

# நெறியாளர் சான்றிதழ்

**"காலந்தோறும் பறம்புமலை"** என்னும் தலைப்பில் திரு. **சொ.அருணன்** அவர்கள் செய்துள்ள இவ்வாய்வேடு அவர் சிவகங்கை மன்னர் துரைசிங்கம் அரசு கலைக் கல்லூரித் தமிழ்த்துறையில் பகுதிநேர முனைவர் (Ph.D) பட்ட ஆய்வாளராக இருந்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும், இந்த ஆய்வு வேறு எந்தப் பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

**(மு.பழனியப்பன்)**
நெறியாளர்

நாள் :
இடம் : சிவகங்கை

தமிழ்த்துறைத் தலைவர் முதல்வர்

**சொ.அருணன்,**
(பதிவு எண்: 0940/2013-14)
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழாய்வுத்துறை,
மன்னர் துரைசிங்கம் அரசு கலைக் கல்லூரி,
சிவகங்கை.

# ஆய்வாளர் உறுதிமொழி

**“காலந்தோறும் பறம்புமலை”** என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காகச் செய்யப் பெற்ற இந்த ஆய்வேடு, நான் சிவகங்கை மன்னர் துரைசிங்கம் அரசு கலைக் கல்லூரித் தமிழ்த்துறையில் பகுதிநேர முனைவர் (Ph.D) பட்ட ஆய்வாளராக இருந்த காலத்தில் என்னால் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும், இந்த ஆய்வு வேறு எந்தப் பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்

ஆய்வாளர் கையொப்பம்

**(சொ.அருணன்)**

நாள் :
இடம் : சிவகங்கை

உறுதிக் கையொப்பம்
**(முனைவர் மு.பழனியப்பன்)**

# நன்றியுரை

**“காலந்தோறும் பறம்புமலை”** என்னும் தலைப்பில் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்கு ஆய்வு மேற்கொள்வதற்கு அனுமதி அளித்த சிவகங்கை மன்னர் துரைசிங்கம் கலை மற்றும் அறிவியல் கல்லூரி, தமிழாய்வுத் துறைக்கு எனது நன்றி.

என் ஆய்விற்கு மேற்பார்வையாளராக இருந்து என்னை நன்னெறிப்படுத்தி, அறிவுரைகள் பல வழங்கி என் முயற்சி தளர்வுறா வண்ணம் ஊக்கப்படுத்தி இவ்வாய்வேடு செம்மையுற அமையத் துணையாக இருந்த முனைவர் மு.பழனியப்பன் ஐயா அவர்களுக்கு எனது பணிவார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது ஆய்வுக்குத் தூண்டுகோலாக அமைந்து நல்வழி காட்டிய குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனகர்த்தர் தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் அவர்களின் திருவடிகளுக்கு எனது நன்றி மலர்கள் என்றும் உரித்து. எனது முன்னேற்றத்திற்கு எப்போதும் தனது அருளாசிகளைத் தொடர்ந்து வழங்கி வரும் மயிலம் பொம்மபுர ஆதீனகர்த்தர் 20ஆம் பட்டம் சிவஞானபாலய சுவாமிகளின் திருவடிகளுக்கு எனது நன்றி மலர்கள் என்றும் உரித்து.

இவ் ஆய்வின் முன்னோடியாக விளங்கிய அவ்ஆதீனத்தின் புலவர் மரு. பரமகுரு ஐயா அவர்களுக்கும், மலேசிய மருத்துவர், ஆய்வாளர், அமரர் ஜெயபாரதி ஐயா அவர்களுக்கும் எனது நன்றி.

ஞானபீட விருதாளர் ஜெயகாந்தன், கவிஞர் சிற்பி பாலசுப்பிரமணியம், எழுத்தாளர் சந்திரகாந்தன், அமரர் நவபாரதி, ஸ்ரீசெண்பகா பதிப்பகம் ஆர்.எஸ். சண்முகம் உள்ளிட்ட தொடரும் குழுவினர் அனைவருக்கும் மனமார்ந்த நன்றியை உரித்தாக்கிக் கொள்ளுகிறேன்.

மேலைச்சிவபுரி சன்மார்க்க சங்கத்தின் கணேசர் செந்தமிழ்க் கல்லூரியில் பணியாற்றிய காலத்தில் எனக்குத் தமிழுணர்வு தந்து வழிநடத்திய தமிழாகரர் முனைவர் பழ. முத்தப்பன் ஐயா, அழகம்மை ஆச்சி அவர்களுக்கும் எனது நன்றி உரியதாகும்.

காரைக்குடி இராமசாமி தமிழ்க் கல்லூரியின் மேனாள் முதல்வர் தமிழாகரர் தெ. முருகசாமி ஐயா அவர்களுக்கும், ஆரோவில் தமிழ் மரபு மைய நிர்வாக இயக்குநர், கவிஞர் இரா. மீனாட்சி அக்கா அவர்களுக்கும் ஆய்வுக் காலத்தின் எனக்குத் தேவையான நூல்களை உள்ளன்போடு அளித்து உதவிய பேராசிரியர் தி.இராசகோபாலன் ஐயா அவர்களுக்கும் எனது நன்றி உரியதாகும்.

சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்து மேனாள் தமிழியற்புல முதன்மையர் பேராசிரியர் பழ. முத்துவீரப்பன் அவர்களுக்கும் புதுவைப் பல்கலைக்கழகம் சுப்பிரமணிய பாரதியார் தமிழியற்புல மேனாள் முதன்மையர் அமரர் பேராசிரியர் அ.அறிவுநம்பி அவர்களுக்கும் எனது நன்றி உரியதாகும்.

ஆய்வுக்காலத்தில் களப்பணியில் உதவிய அன்பர்கள் பிரான்மலை திரு. ஜெயபாரதி, திரு. கலியாணம், திரு. பசுபதி, திரு. விஜயகுமார், புகைப்படக் கலைஞர் திரு. பாலமுருகன் ஆகியோருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது ஆய்வுக்குத் தேவையான நூல்கள், ஆய்வேடுகள் பலவற்றையும் தந்துதவிய குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீன நூலகம், மயிலம் ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் தமிழ் மற்றும் கலை அறிவியல் கல்லூரி நூலகம், காரைக்குடி இராமசாமி தமிழ்க் கல்லூரி நூலகம், புதுவயல் ஸ்ரீசரசுவதி சங்க நூலகம், புதுக்கோட்டை ஞானாலயா நூலகம் ஆகிய நிறுவனங்களுக்கு நன்றியைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

எல்லா நிலைகளிலும் எனக்கு உதவிய எனது தாயார் திருமதி சொ. சௌந்திரம் ஆச்சி அவர்களுக்கும் எனது சகோதரர் முனைவர் சொ. சேதுபதி அவர்களுக்கும், எனது துணைவியார் திருமதி அ. உஷா, மழலைச் செல்வங்கள் அ. ஆதித்தன், அ. ஆதவி ஆகியோருக்கும் நன்றி கூறுவது எனது கடமையாகும்.

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| இ.ப. | - | இரண்டாம்பதிப்பு |
| உ.ஆ | - | உரை ஆசிரியர் |
| தொ.ஆ . | - | தொகுப்பு ஆசிரியர் |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| ப.ஆ. | - | பதிப்பு ஆசிரியர் |
| பா.எ | - | பாடல் எண் |
| ம.ப. | - | மறுபதிப்பு |
| மு.ப. | - | முதற்பதிப்பு. |
| மு.ப.ஆ. | - | முதன்மைப் பதிப்பு ஆசிரியர் |
| மேலது. | - | மேற்குறிப்பிட்ட நூல் |
| மொ.பெ.ஆ. | - | மொழிபெயர்ப்பு ஆசிரியர் |
| P. | - | Page |
| pp. | - | Pages |

| | தலைப்பு | ப.எண் |
|---|---|---|
| | முன்னுரை | 1-7 |
| இயல்:1 | சங்க இலக்கியக் காலத்தில் பறம்புமலை | 08-90 |
| இயல்:2 | பக்தி இலக்கியக் காலத்தில் பறம்புமலை | 91-171 |
| இயல்:3 | விடுதலைப் போராட்டக் காலத்தில் பறம்புமலை | 172-219 |
| இயல்:4 | தற்காலத்தில் பறம்புமலை | 220-252 |
| | முடிவுரை | 253-257 |
| | துணைநூற்பட்டியல் | 258-280 |
| | பின்னிணைப்புகள் | 281-311 |

# முன்னுரை

இயற்கையோடு இயைந்த பெருமையுடையது தமிழ் மரபு. ஐம்பூதங்கள், தாவரங்கள், விலங்குகள், உயிரிகள், உயிரல் பொருட்கள் என யாவற்றையும் தன்னுள் அடக்கி வாழ்வியலை முதன்மைப்படுத்தின தமிழ் இலக்கியங்கள்.

இலக்கணமும் இலக்கியமும் இயற்கையைப் போற்றியிருந்தன. நிலமும், பொழுதுமாகப் பகுபடும் அதன் வகைமையில் மலையும் மலைசார்ந்த இடமுமாகிய குறிஞ்சி நிறைந்து விளங்கும் பெருமையுடையது தமிழ்கூறும் நல்லுலகம்.

**'வடவேங்கடம்'**[1] எனத் தொல்காப்பியம் குறிப்பிடும் எல்லையாகவும், **'பொருப்பிலே பிறந்து'**[2] என்று தமிழ் தோன்றிய இடமாகவும், **'மலையத்திருந்தவன்'**[3] என அகத்தியருக்குப் பெயர் தந்ததாகவும் காலத்தால் நிலைத்து விளங்குவன மலைகளே!

**அளக்கலாகா அளவும் பொருளும்**

**துளக்கலாகா நிலையும் தோற்றமும்**[4]

என்று ஆசிரியனுடைய நிலைப்புக்குச் சான்றாக மலையை நன்னூலார் சுட்டுகிறார்.

**நிலையின் திரியாது அடங்கி**[5]யவன் தோற்றத்தை மலையினும் பெரிதாக்கிக் கூறுகிறது திருக்குறள்.

தமிழ் இலக்கண இலக்கிய மரபில், மலையைப் பற்றி மட்டும் ஓங்கல், வரை, அடுக்கல், குன்றம், குன்று என 42 வகையான பெயர்கள் சங்க இலக்கியத்தில் வழங்கப்பட்டிருக்கின்றன.

இவ்வாறாகத் தமிழர் வாழ்வின் தனித்த பதிவாகத் திகழ்ந்து இன்றும் நிலைத்து நிற்பது மலையாகும். இன்றைய காலத்தில் வரலாற்றுக் களங்களாகவும், ஆன்மிகத் தலங்களாகவும், சுற்றுலா மையங்களாகவும்

விளங்கும் மலைகள் தமிழ் இலக்கிய வரலாற்றிலும் நீங்கா இடம் பிடித்த பெருமைக்குரியன.

அத்தகைய மலைகளுள் அஃறிணைப் பொருளாக மட்டுமின்றி மனிதர்களோடும் உயிர்களோடும் கலந்த உறவாலும், இலக்கியப் பதிவுகளாலும் தன்னை நிலைநிறுத்திக் கொண்டது பறம்புமலை ஆகும். பறம்பு என்றதும் பறம்பிற்கோமான், கடையெழு வள்ளல்களில் ஒருவனாகிய பாரியும், பாரியைப் புகழ்ந்தேத்தியதோடு குறிஞ்சிக்குரிய புலவன் எனப் பெயர் விளங்கிய கபிலரும், கபிலரையும் பாரியையும் இணைத்த இணைப்புப் பாலமாகிய முல்லைக்கொடியும் தேரும் உடன் நினைவுக்கு வருவர்.

சங்க இலக்கிய காலம் தொட்டு, பறம்புமலையின் இலக்கியப் பதிவுகள் தொடர்ந்து இன்றும் விளங்கி வருவது அதன் பெருமைக்கும் வளமைக்கும் உரிய சான்றாகும். காலந்தோறும் நிலைத்திருந்து தமிழ் மரபை, பண்பாட்டை, வரலாற்றை உணர்த்தும் பறம்புமலை இலக்கியப் பதிவுகளின் வழி ஆய்வுப் பொருளாகிறது.

## ஆய்வுத் தலைப்பு

காலந்தோறும் நிலைக்கும் அஃறிணைப் பொருளாக விளங்கியபோதும், இலக்கியங்களின் வழி அழியாத நிலையைப் பெற்று வரலாற்றை உணர்த்தும் உயிர்ப்புடைய அடையாளச் சின்னமாக விளங்குவதால், அதன் பதிவுகளையும், சான்றுகளையும் உணர்த்தும் விதமாக **‘காலந்தோறும் பறம்புமலை’** என்னும் தலைப்பில் இவ்வாய்வு எழுகிறது. பல்வேறு வகைப்பட்ட காலங்களில் வாழ்ந்த புலவர்களின் பார்வையில் பறம்புமலையின் தோற்றமும் ஆங்கு நிகழ்ந்த நிகழ்வுகளும் உரிய சான்றுகளாகின்றன.

## ஆய்வு நோக்கம்

சங்ககாலத்தில் **பறம்புமலை** எனவும் பக்தி இலக்கியக் காலத்தில் **திருக்கொடுங்குன்றம், திணிநெடுங்குன்றம்** எனவும், தற்காலத்தில் **பிரான்மலை** எனவும் இம்மலை வழங்கப்படுகிறது. சங்ககாலத்திலிருந்து இன்றளவும்

நிலைபெற்றும், வரலாற்றை உணர்த்தியும் வருகிற இம்மலையின் பதிவுகள், குறிப்பாக இலக்கியப் பதிவுகள் தொகுக்கப்பட வேண்டும் என்பதாகவும், தமிழர் வாழ்வியலுக்கும் தமிழ்மொழியின் வளமைக்கும் சான்றாக விளங்கும் அம்மலையின் பெருமை உலக அளவில் நிலைநிறுத்தப்பட வேண்டும் என்னும் நோக்கத்தோடு இவ்வாய்வு மேற்கொள்ளப் பெறுகிறது.

## ஆய்வு எல்லை

சங்ககாலம் தொடங்கிச் சமகாலம் வரையிலான இலக்கியங்களில் உள்ள பதிவுகளின் வழி இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகிறது. நீண்ட கால எல்லை என்னும்போதும் பறம்பின் பதிவுகள் குறிப்பிடத்தக்கவையே ஆகும். அதனோடு சங்க இலக்கியப் பாவகையிலும், பக்தி இலக்கியப் பண் அமைப்பிலும், ஆலயக் கல்வெட்டுகளிலும் பதினெட்டாம் நூற்றாண்டுகளில் வழங்கப்பட்ட உரைநடை, நாவல், வரலாற்றுப் பதிவுகள், ஆய்வாளர் குறிப்புகள், நாட்டுப்புற வழக்காறுகள் ஆகிய இலக்கியத்தின் பன்முகப் பார்வையிலும் இவ்வாய்வு எழுகிறது.

## ஆய்வுச் சிக்கல்

இவ்வாய்விற்கு முன்எழுகிற ஐயவினா பாரியும் கபிலரும் இருந்த பறம்புமலை என்பது இன்றைய பிரான்மலைதானா என்பதாகும். இவ்வாறு ஒரு கருத்து ஆய்வாளர்களிடத்தும், அறிஞர்களிடத்தும் நிலவி வருகிறது. பல்வேறு காரணங்களாலும், பல்வேறு தரவுகளாலும் பல்வேறு மலைகளை அவர்கள் சுட்டி வருகிறார்கள். இதுவரையும் முடிந்த முடிபாக இதுதான் பறம்புமலை என நிறுவ இயலாத சூழல் ஏற்பட்டுள்ளது.

ஆதலால், இவ்வாய்வு அதனையே ஆய்வுச் சிக்கலாகக் கருதி, அதற்கான முடிவுகளை வெளிப்படுத்தும் வண்ணமாக அமைகிறது. பெறப்படும் அக, புறச் சான்றாதாரங்களைத் தொகுப்பதோடு களஆய்வும் மேற்கொண்டு பல புதிய செய்திகளையும் திரட்டுவதற்கு இவ்வாய்வு வழிவகுக்கும்.

## கருதுகோள்

*காலந்தோறும் இலக்கியத்திலும் வரலாற்றிலும் பதியப் பெற்று வரும் பறம்புமலை குறித்த தகவல்களை ஒன்று திரட்டிப் பறம்புமலையே பிரான்மலை என நிறுவுவதையும் அதன் இயற்கை, பக்தி, வரலாற்று வளங்களை வெளிப்படுத்துவதையும் கருதுகோளாகக் கொண்டு இவ்வாய்வு செய்யப்படுகிறது.*

## சான்றாதாரங்கள்

*சங்க இலக்கியங்களில் பறம்பு குறித்த பாடல்கள், பக்தி இலக்கியக் காலத்தில் பக்தர்களால் பாடப்பெற்ற பக்திப் பனுவல்கள், பிற்காலத்தில் பதியப்பட்ட ஆய்வாளர் குறிப்புகள், நாட்டுப்புறப் பாடல்கள், கல்வெட்டுப் பதிவுகள் ஆகியவை இவ்வாய்வின் முதன்மைச் சான்றுகளாகக் கொள்ளப் பெறுகின்றன.*

## முன்ஆய்வுகள்

*குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனப் புலவர் மரு.பரமகுரு எழுதிய பறம்புமலை திருக்கொடுங்குன்ற வரலாறு நூலும், கல்வெட்டு ஆய்வாளர் மலேசியாவைச் சேர்ந்த டாக்டர் ஜெயபாரதி கண்டறிந்த ஆய்வுச் செய்திகளும் இவ்வாய்வுக்கு முன்ஆய்வுகளாக விளங்குகின்றன.*

## ஆய்வு அணுகுமுறைகள்

*இவ்வாய்வு, வரலாற்று அடிப்படையில் இலக்கியச் சான்றுகளை வகை தொகை செய்வதாக அமைகிறது. மேலும், பகுப்பாய்வு, ஒப்பாய்வு, ஆகிய அணுகுமுறைகளும் இவ்வாய்விற்குக் கொள்ளப்பட்டுள்ளன.*

## ஆய்வுப் பகுப்புகள்

*இவ் ஆய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களைக் கொண்டு எழுகிறது.*

1. ***சங்க இலக்கியக் காலத்தில் பறம்புமலை***
2. ***பக்தி இலக்கியக் காலத்தில் பறம்புமலை***
3. ***விடுதலைப் போராட்டக் காலத்தில் பறம்புமலை***
4. ***தற்காலத்தில் பறம்புமலை***

*எனும் நான்கு இயல்களைக் கொண்டு அமைகிறது.*

இயல்களின் விளக்கங்கள்

### ***இயல் - 1 : சங்க இலக்கியக் காலத்தில் பறம்புமலை***

*இலக்கியங்களின்வழி பறம்பின் அமைவிடம், பாரி ஆண்ட பதிவுகள், பறம்புமலை- கலைஞர்களின் மகிழ்விடம், இலக்கியங்களின்வழி பறம்பின் வளம், பறம்பு பாடிய புலவர்கள், பாரிக்கும் மூவேந்தருக்கும் நிகழ்ந்த போர், பாரியின் மரணம் ஆகியவற்றைக் குறித்து இவ்வியல் உரிய சான்றுகளோடு எடுத்தியம்புகிறது.*

### ***இயல் - 2 : பக்தி இலக்கியக் காலத்தில் பறம்புமலை***

*கோயில் எழுந்த வரலாறு, கோயில் அமைப்பு, பாடல் தலமாதல், திருஞானசம்பந்தர் தேவாரத்தில் திருக்கொடுங்குன்றம், திருக்கொடுங்குன்றத்தைப் பாடிய பிற அருளாளர்கள், புராணங்கள் கூறும் கதைகள், கல்வெட்டு ஆதாரங்கள் ஆகியவற்றை உரிய சான்றுகளோடு இவ்வியல் எடுத்துக் காட்டுகிறது.*

### ***இயல் - 3 : விடுதலைப் போராட்டக் காலத்தில் பறம்புமலை***

*விடுதலைப் போராட்டக் காலத்து அரண், விடுதலைப் போராட்ட வீரர்களின் மறைவிடம், ஆங்கிலேயர் குறிப்புகளின்வழி, விடுதலைப் போராட்ட இரகசியக் கூட்டங்கள் அமைந்த இடம், இம்மலையில் தங்கியிருந்த விடுதலைப் போராட்ட வீரர்கள், இம்மலையில் அமைந்த குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத் திருமடத்தின் வரலாறு, பாரிவிழாவின் நோக்கம், அமைப்பு ஆகியவை குறித்த சான்றுகளை இவ்வியல் எடுத்துக் காட்டுகிறது.*

## இயல் - 4 : தற்காலத்தில் பறம்புமலை

*பிரான்மலை குறித்த தற்காலப் பதிவுகள், பிரான்மலைத் திருவிழாக்கள், பிரான்மலை குறித்த சார்பு மற்றும் மறுப்புக் கருத்துகள், அவை தோன்றிய விதங்கள், களஆய்வுச் செய்திகள் ஆகியவற்றை அடிப்படையாக வைத்து உரிய சான்றுகளோடு இவ்வியல் எடுத்துக் காட்டுகிறது.*

*இவ்வாறாக ஆய்வுப் பகுப்புகள் அமைகின்றன.*

*முடிவுரையில், இவ்வாய்வின்வழி கண்ட உண்மைகள் தொகுத்துத் தரப்பெறுகின்றன. மேலும், எதிர்கால ஆய்வுக்குரிய கூறுகளும் எடுத்துரைக்கப் பெறுகின்றன.*

*ஆய்வேட்டின் இறுதியில், துணைநூற்பட்டியல், பின்னிணைப்புகள் தரப்பெறுகின்றன.*

# முன்னுரை

## சான்றெண் விளக்கம்

1. தொல்காப்பியர், தொல்காப்பியம், பனம்பாரனாரின் சிறப்புப் பாயிரம்.
2. வில்லிபுத்தூராழ்வார், வில்லிபாரதம், சிறப்புப் பாயிரம்.
3. அமிர்தசாகரர், யாப்பருங்கலக் காரிகை, அவையடக்கப்பாடல்
4. நன்னூல்: மலையின் மாண்பு: நூற்பா 28
5. திருவள்ளுவர், திருக்குறள் எண். 124

# இயல் ஒன்று
# சங்க இலக்கியக் காலத்தில் பறம்புமலை

வரலாறு என்பது எழுதப்படாத இலக்கியம். இலக்கியம் என்பது எழுதப்பட்ட வரலாறு. இலக்கியமும் வரலாறும் புனைவிற்கும் மெய்ம்மைக்குமான வேறுபாட்டளவில் இயங்குகின்றன. என்றாலும், இலக்கியங்கள்வழி வரலாற்றைப் பெற முடிகிறது. வரலாற்றின் அடிச்சுவட்டில் இலக்கியங்களைப் படைத்துக் கொள்ள முடிகிறது. இவை இரண்டும் மெய்ம்மை என்ற புள்ளியில் சந்திக்கின்றன. தமிழிலக்கியப் பரப்பில் சங்ககாலம் என்ற காலப்பகுதி இலக்கியப் பதிவு பெற்ற வரலாற்றின் தொடக்கப் பகுதியாகும். இக்கால இயல்புகளை அறிந்து கொள்ள இலக்கியங்களே இன்றியமையாச் சான்றுகளாகின்றன. முதற்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என்ற முப்பகுப்பு அமைப்புகளில் சங்ககால வாழ்வியலை, சமுதாய வரலாற்றை வகுத்துக் கொள்ள முடிகிறது.

சங்ககாலத்தில் பறம்புமலை என்ற பகுதி ஒரு குறுநில அரசின் ஆட்சிப்பகுதியாக விளங்கியது. அதன் அரசியல், சமுதாயத் தன்மை ஆகியவை பற்றிய செய்திகளை இவ்வியல் தொகுத்து வழங்குகிறது.

### சங்ககாலமும், தமிழகமும்

**சங்ககாலம் என்பதை வரலாற்றாசிரியர்கள் கி.மு1660க்கும் கி.பி250க்கும் இடைப்பட்ட பகுதியாகக் குறிப்பிடுவர்.**[1] சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த காரணத்தினால் இக்காலம் சங்ககாலம் எனவும், அக்காலத்தே தோன்றிய இலக்கியங்கள் சங்க இலக்கியங்கள் எனவும் வழங்கப்படுகின்றன. இதனை முதற்சங்க இலக்கியங்கள், இடைச்சங்க இலக்கியங்கள், கடைச்சங்க இலக்கியங்கள் என்று வகைப்படுத்திக் கொள்ளலாம். இவற்றில் தற்போது எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்ற இரு கடைச்சங்கத் தொகுப்புகள் மட்டுமே கிடைக்கப் பெற்றுள்ளன. இவற்றின் வழியாகத் தமிழகத்தின் சங்ககால வரலாற்றை வருவித்துக் கொள்ள முடிகிறது.

தமிழகம் என்ற சொல் கடைச்சங்ககால இலக்கியமான புறநானூற்றில் இடம்பெற்றுள்ளது.

**வையக வரைப்பில் தமிழகம் கேட்ப**
**பொய்யாச் செந்நா நெளிய ஏத்திப்**
**பாடுப என்ப பரிசிலர்**[2]

இப்பாடலடிகளில் கருவூர்க் கதப்பிள்ளை என்ற புலவர் **'தமிழகம்'** என்ற சொல்லைக் கையாண்டுள்ளார். மேலும் அச்சொல் தமிழகம் என்ற இடப்பெயராகவே அமைந்திருப்பது எண்ணத்தக்கது.

## தமிழக எல்லைகள்

தமிழகம் என்று குறிக்கப்பட்ட இப்பகுதி முழுவதுமாக தமிழ்மொழி பேசும் மக்கள் வாழும் பகுதி என்பதில் மறுப்பேதுமில்லை. **தமிழகம் என்று சுட்டப்பெற்ற அக்காலப்பகுதி தற்கால நிலையில் தென்னிந்தியா சார்ந்த பகுதிகள் முழுவதையும் குறிப்பதாகக் கொள்ள வேண்டும்.**[3] தென்னிந்தியா என்று அழைக்கப்படும் இப்பகுதியைச் சங்ககாலத்தில் பல்வேறு அரசர்கள் ஆண்டு வந்துள்ளனர்.

## சங்ககால அரசுகளும் அவற்றின் எல்லைகளும்

சங்ககாலத்தில் ஆண்ட அரசுகளின் எல்லைகள் வரையறுக்கப் பட்டதாக விளங்குகின்றன. இருப்பினும் அந்த எல்லைகள் அடிக்கடி மாறிக்கொண்டேயிருந்தன. இவற்றுடன் எல்லைப் பிரச்சனைகளும் அடிக்கடி எழுந்து கொண்டேயிருந்தன.

சேரநாடு, சோழநாடு, பாண்டியநாடு என்பவை பழங்காலப் பகுப்பில் அடங்கிய மூன்று நாடுகளாகும். இவற்றுள் **சேரநாடு என்பது இன்றைய கொச்சி- திருவாங்கூர் நாடுகளுடன் மலையாள மாவட்டமும் சேர்ந்த நிலப்பகுதியாகும். சோழநாடு என்பது, சிதம்பரத்திற்கு வடக்கேயுள்ள வெள்ளாற்றை வட எல்லையாகவும் புதுக்கோட்டைக்கு அருகேயுள்ள தென் வெள்ளாற்றைத் தெற்கெல்லையாகவும் கொண்டுள்ள நிலப்பகுதியாகும்.**

**அஃதாவது, இன்றைய தஞ்சாவூர், திருச்சி மாவட்டங்களிலும் தென் ஆற்காடு மாவட்டத்தின் தென்பகுதியிலும் உள்ள நிலப்பகுதியாகும். பாண்டிய நாடு என்பது, இன்றுள்ள மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்ட எல்லைகளைக் கொண்ட நிலப்பகுதியாகும்**[4] என்று அன்றைய தமிழகப் பகுதிகளையும் இன்றைய தமிழகப் பகுதிகளையும் இணைத்து தமிழக நில இயல்பை மா. இராசமாணிக்கனார் அறிவிக்கிறார்.

மூவேந்தர்கள் எனப்படும் பேரரசுகளுக்கு இடையில் சிற்றரசர்களான குறுநில மன்னர்களும் வள்ளல்களும் ஆட்சி புரிந்திருக்கின்றனர் என்பதைக் குறித்தும் பல குறிப்புகள் கிடைக்கின்றன.

**சோழநாட்டுக்கு வடக்கே திருக்கோவலூரைத் தலைநகராகக் கொண்டு 'மலையமான்கள்' ஒரு சிறு நிலப்பகுதியை ஆண்டு வந்தனர். தகடூரைத் தலைநகராகக் கொண்டு கொங்கு நாட்டின் ஒரு பகுதியை 'அதியமான்கள்' ஆண்டு வந்தனர். இவ்வாறே கொங்குநாட்டில் ஓரி, குமணன் முதலிய சிற்றரசர்கள் சிறு நிலப்பகுதிகளை ஆண்டு வந்தனர். பறம்புமலைநாட்டைப் 'பாரி' ஆண்டு வந்தான். பழநிமலைப் பகுதியை 'வேள் ஆவி' ஆண்டு வந்தான். பொதியமலை நாட்டை 'வேள் ஆய்' ஆண்டு வந்தான். இவ்வாறு தமிழகத்திலிருந்த சிற்றரசர்கள் பலராவர். இவர்கள் முடியரசர்க்கு அடங்காமல் வாழ்ந்த காலமும் உண்டு; அடங்கி வாழ்ந்த காலமும் உண்டு**[5] என்னும் சிற்றரசர்கள் ஆண்டு வந்த நாடுகள் பற்றிய குறிப்புகளும் கிடைக்கின்றன.

இதன்மூலம் பறம்புநாட்டைப் பாரி மன்னன் ஆண்டுவந்தான் என்பதை உணர்ந்து கொள்ள முடிகிறது. இன்றைய காலத்தில் பாரி மன்னன் ஆண்ட பறம்புமலை எங்குள்ளது என்பதை ஆராய வேண்டியுள்ளது. அதற்கான அடையாளங்களோ, எச்சங்களோ ஏதுமில்லாத நிலையில் இந்த வினாவிற்கு விடைகாணச் சங்க இலக்கியச் சான்றுகள் பல கிடைக்கின்றன.

### பறம்புமலையும் பறம்புநாடும்

பறம்புநாடு கோட்டை உடையதாக விளங்கியிருந்திருக்கிறது.

மூவேந்தர் முற்றுகையிட்டபோதும் வெல்ல முடியாத அளவுக்கு உயர்ந்த குன்றத்தின்மீது அரண்போல அமைந்திருந்தது பாரியின் பறம்பு அமைவிடம். இதனை,

**செங்குத்தாக எழுந்த மலைகளைச் சிறந்த இயற்கை அரணாகக் கொண்டனர் பண்டைக் குறுநில மன்னர். குன்றுகளிற் கோட்டை கட்டி அவர் ஆட்சி புரிந்தனர். பாண்டி நாட்டிலே பறம்புக் கோட்டை; கொங்கு நாட்டில் கொல்லிக் கோட்டை... இவை முற்காலத்தில் சிறந்து விளங்கின**[6] என்னும் குறிப்பினால் உறுதி செய்து கொள்ளலாம்.

சங்ககாலத்தில் மூவேந்தர்களுக்கு இணையாகவும் அவர்களை விடப் புகழ் மிக்கவர்களாகவும் புலவர்களும், சிற்றரசர்களாகிய வள்ளல்களும் விளங்கியிருக்கின்றனர். அவ்வள்ளல்களுள், வேள்பாரி குறிப்பிடத் தகுந்தவன். சங்கப் பாடல்களில் அவனைப் பற்றிய பல பதிவுகள், பல புலவர்களால் வரையப் பெற்றுள்ளமையே ஆகும்.

பாரி ஆட்சி செய்த நாடு பறம்புநாடு எனவும், அந்நாட்டிற்குத் தலைமையிடமாக விளங்கியது பறம்புமலை எனவும் அறிந்து கொள்ள முடிகிறது. இச்செய்தி,

**இவன் கடையெழு வள்ளல்களிலொருவன்; முந்நூறு ஊரையுடைய பறம்பு நாட்டிற்கும் பறம்புமலைக்கும் தலைவன்**[7] என்னும் குறிப்பின்மூலம் உறுதியாகிறது.

பறம்புநாடு முந்நூறு ஊர்களைக் கொண்ட நாடாக விளங்கி-யிருக்கிறது. இதனை **முந்நூறு ஊர்த்தே தண்பறம்பு நன்னாடு**[8] என்ற கபிலரின் பாடற்குறிப்பு வழி அறிந்து கொள்ள முடிகிறது.

இப்பறம்புமலையும் அதுசார்ந்த பறம்புநாடும் தமிழகத்தின் எப்பகுதியில் உள்ளது என்பது ஆராய்வதற்கு உரியது. தமிழறிஞர்கள், வரலாற்று அறிஞர்கள், பறம்புமலையின் இருப்பிடம் குறித்துப் பல்வேறு நிலைகளில் சான்றுகளைத் தந்துள்ளனர். அவற்றின் வன்மை, மென்மைகள் ஆராய்ந்து அறியத்தக்கன.

பறம்புநாடு பாண்டிமண்டலம் சார்ந்தது

வரலாற்று அறிஞர்கள், தமிழறிஞர்களில் ஒரு பிரிவினர் பறம்புமலை என்பது பாண்டி மண்டலத்தில் உள்ளது என்று கருதுகின்றனர். மேலும் இதற்கான சான்றுகளையும் அவர்கள் முன்வைக்கின்றனர்.

பல்வேறு மண்டலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்த தமிழகத்தின் பிரிவுகளைப் பற்றிய செய்திகளைத் தரும் சதகச் செய்யுள்கள் தத்தம் பகுதியிலுள்ள புகழ்பெற்ற இடங்களையும் குறிப்பிடுகின்றன. அவ்வகையில், பாண்டி மண்டலச் சதகச் செய்யுள் பறம்புநாடு பாண்டி மண்டலத்தைச் சேர்ந்தது என்று குறிப்பிடுகிறது.

**புரிசைப் புறத்தினிற் சேரனுஞ் சோழனும் போர்புரிய**
**இரியச் சயங்கொண்ட போழ்தினில் யாமினி யீங்கிவனைப்**
**பரிசுக்கு நல்ல கவிபாடி னால்வரும் பாக்ய மென்றே**
**வரிசைத் தமிழ்புனை பாரியும் பாண்டியன் மண்டலமே**[9]

என்னும் பாண்டிமண்டலச் சதகச் செய்யுள் அடிகளால் பறம்புமலை பாண்டி மண்டலத்தைச் சேர்ந்தது என்பதை உறுதியாகக் கூறலாம்.

இந்தச் சான்றையே முன்னிறுத்தி கே.கே. பிள்ளை அவர்களும் **பறம்புநாடு பாண்டி மண்டலத்தைச் சேர்ந்ததே** என்றும் **பெரும் புகழ் பெற்ற இம்மூன்று மரபில் தோன்றிய மன்னரே அன்றி, தமிழ்நாட்டில் பல்வேறு பகுதிகளை ஆண்ட குறுநில மன்னர் பலரும், சங்க நூல்களில் கூறப் பெற்றுள்ளனர். அவர்களில் ஆய்அண்டிரனும், பாரியும் குறிப்பிடத்தக்கார். இருவரும் வீரத்திலும் கொடையிலும் புகழ் சிறந்தவர்**[10] என்று தெளிவுபட மொழிகிறார். இச்சான்றுகளின்வழி, பறம்புநாடு பாண்டிநாடு சார்ந்தது என்பது உறுதியாகின்றது. இனி பறம்புநாட்டில் அமைந்திருந்த பறம்புமலை பற்றிய சான்றுகள் பின்வருமாறு தொகுக்கப் பெறுகின்றன.

பறம்புமலையே பிரான்மலை -

மு.இராகவையங்கார் கருத்து

*மு. இராகவையங்கார், பறம்புமலையின் இருப்பிடத்தையும் அதன் தொடர்பான வரலாற்றையும் முழுமையாக ஆராய்ந்தவர். அவர், பறம்புமலை பாண்டிமண்டலத்தைச் சேர்ந்தது என்பதோடு பறம்பு நாடு பின்னாளில் புறமலைநாடு என்று வழங்கப்பட்டதையும் விளக்கி, பிரமநாடு எனப் பெயர் பெற்றதையும் குறிப்பிட்டுத் தற்போதுள்ள பிரான்மலையே சங்ககாலப் பறம்புமலை என்று உறுதிப்படுத்துகிறார்.*

*மேலும் கொடுங்குன்றம் எனப் பெயர் பெற்றதையும் அங்குள்ள பாரீசுவரம் கோயில் கல்வெட்டுச் செய்திகளையும் பின்வருமாறு அவர் விளக்குகிறார்.*

***மதுரையிலுள்ள பழைய சிறைக்கூடத்து வடபுறச் சுவரிலுள்ள கல்லெழுத்திலும், (இக்கற்கள் வேறோர் இடத்திலிருந்து பெயர்த்துக் கட்டப்பட்டவையாதலால், அதன் சாஸனங்கள் பிறழ்ந்து அங்கங்கே காணப்படுகின்றன.) இப்பறம்பு நாட்டைப் பற்றிக் கூறப்பட்டிருக்கின்றது. இனி பாண்டி நாட்டுத் திருப்புத்தூர்ச் சிவன்கோயிற்தென்மதிலிற் பொறிக்கப்பட்டுள்ள பாண்டியன் - குலசேகரன் சாஸனங்களில் (இவை இன்றும் வாசிக்கும் நிலையில் உள்ளன) "புறமலை நாட்டுப் பொன்னமராவதியுடையான் திருக்கொடுங்குன்றூருடையான்" என வருதலால், புறமலை நாடு என்பதொன்று பாண்டி நாட்டின்கண் இருந்த செய்தியோடு, பொன்னமராவதி, கொடுங்குன்று (இவ்வூர்கள், திருப்புத்தூர்ப் பக்கத்து உள்ளவை. கொடுங்குன்றம்- பிரான்மலை) எனும் ஊர்கள் அதனுள் அடங்கியிருந்தமையும் தெளியலாம்.***

**இப்புறமலை நாடு, பாரியின் பறமலைநாடு எனப்படுவதின் மரூஉப்போலும், இதற்கேற்ப, அப்பக்கத்துக் கொட்டாம்பட்டி மலைப்பகுதியைச் சேர்ந்த கூற்றம், "பிரமநாடு" என இன்றும் வழங்குகிறது. இதுவும் ஒருகால் பறம்புநாடு என்பதன் திரிபு போலும்.**

*பாரியின் பறம்பு அல்லது பறமலை, கொட்டாம்பட்டி, திருப்புத்தூர்ப் பக்கங்களில் உள்ளதொரு மலையாகவே கொள்ளத் தக்கதாம்; ஆயின், இப்போது "பிரான்மலை" என வழங்குவதையே பாரிமலையாகக் கோடல் பெரிதும் பொருத்தமாமென்க. ஒருதலையாகக் கூறுமிடத்து, இப்பிரான்மலையே பறமலையாகச் சொல்லத் தடையுமில்லையாம். என்னெனில், பாண்டிநாட்டுத் தேவாரம் பெற்ற தலங்களுள் கொடுங்குன்றமென வழங்கும் இம்மலையிற் திருக்கோயில் கொண்ட சிவபிரானுக்குப் பாரீசுவரமுடையார் என்றொரு திருநாமம் பழைய சாஸன மொன்றில் உள்ளதென்று தெரிகிறது. (இச்செய்தியை எனக்கு அன்புடனறிவித்தவர் திருவனந்தபுரம் சிவாசாஸன அத்யக்ஷரும் என்னன்பருமான ஸ்ரீமாந்- து. அ.கோபிநாதராயர் எம்.ஏ. இவர்கள் அச்சாஸனமுள்ள இடத்தையும் குறித்தனுப்புவதாகத் தெரிவித்துள்ளார்கள்.) இதனால் அத்திருப்பதிக்குப் பாரீசுவரம் என்ற பெயரும் முன்னாளில் வழங்கி வந்தமை விளங்கும். ஆகவே, பாரியின் பறம்புமலை இன்னதென்பது இப்போது வெள்ளிடை மலையாயிற்றாம். இப்பறம்புமலை "பிரான்மலை" என இக்காலத்து வழங்குவதாயினும், அதன் பழைய பெயர் கொடுங்குன்றம் என்பதாகவே தெரிகின்றது. இதனால், "பாரிமலை" அல்லது "பறமலை" என்பதையே, (சிவபிரான்மலை எனப்பொருள் கொண்ட) பிரான்மலை எனப் பிற்காலத்தார் வழங்கினரோ எனவும் கொள்ளக் கிடக்கின்றது.... இதற்கேற்ப பிரான்மலையிலும் அதனையடுத்த சில இடங்களிலும் வேளாள வகுப்பினரில் "வேளார்" என்னும் குடிப்பெயர் பெற்ற சிறு கூட்டத்தார் இன்றும் வசித்து வருதல் கவனிக்கற்பாலது. இவற்றால், பாரியது நாடும் மலையும் நன்கு விளங்குமாறு கண்டு கொள்க*[11] என்று சங்ககாலப் பறம்புமலை இப்போதுள்ள பிரான்மலையே என்று தெளிவுபட உணர்த்துகிறார்.

ரா.இராகவையங்கார் கருத்து

*பறம்பு நாடு என்பது பறம்புமலையைத் தலைமையிடமாகக் கொண்ட நாடு என்பதாம். பாண்டி நாட்டு, இப்பறம்புமலை யாண்டையதென்று ஆராயப்புகின், இந்நாட்டுக் கொடுங் குன்றமென்ற பிரான்மலையே இஃதென்று பல காரணங்களாற் துணியப்படுவது. இம்மலை மங்கைநாதர் கோயிவில் அறுகால் மண்டபத்துக் கல்வெட்டில் "இந்நாட்டு அறுநூற்றுவ*

***னேரிப் பற்றிற் பாரீச்சுவரமும்" என்று பொறிக்கப்பட்டிருப்பது ஓர் முக்கியக் காரணமாகும்***[12] *என்று தனது பாரிகாதை நூலில் குறிப்பிடுகிறார்.*

*மேலும், இன்றும் பறம்புமலையாகிய பிரான்மலை வளம் குன்றாது திகழ்வதையும் சான்றுகளோடு பின்வருமாறு எடுத்துக் காட்டுகிறார்.*

***'திணிநெடுங் குன்றந் தேன்சொரி யும்மே' (புறம்-109) என்ற கபிலர் பாட்டிற் கண்டவாறு இன்றுமிம்மலை தேன் சொரிவது காணலாம். நக்கீரனார், "பாரி தீம்பெரும் பைஞ்சுனை" (அகம்-78) என்று கூறியவாறு தேன்சுனையுடைமையுந் தெரியலாம். இம்மலையிற் றோன்றி யோடும் நதி தேனாறு எனப் பெயர் சிறப்பதும் இதற்கேற்ப துணரலாம். இம்மலையில் 'பாரி பலவுறு குன்றம்' (நற்றிணை -253) என்றபடி பலாப்பழம் மிகவுண்டு. மூங்கில் இப்போது மில இல்லையேனும் ஆளுடைய பிள்ளையார் இக்கொடுங்குன்றத் திருப்பதிகத்து இம்மலையை வேய்களுடையதாகப் பாடுதல் காணலாம். மற்றுக் கபிலர் கூறியவாறு வள்ளிக் கிழங்கும், தினையும், அவரையும், வரகும், எள்ளும், பிறவும் இம்மலையில் உண்டாவனவாதல் காண்க***[13] *எனவும் பறம்புமலை பிரான்மலையே என்று தெளிவுறக் காட்டுகிறார்.*

கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் கருத்து

***பாரி என்பவன் கபிலர் என்ற புலவரின் வாழ்நாள் நண்பன். பாரியும் வேள் சிற்றரச மரபைச் சேர்ந்தவன். வீரத்திலும் கொடையிலும் பாரி புகழ்பெற்றவன். கொடுங்குன்றம் அல்லது பிரான்மலை என்று அழைக்கப்படும் குன்றை அடுத்த பாண்டி நாட்டுப் பிரதேசத்தைப் பாரி ஆண்டு வந்தான். பாரியினுடைய ஆணையின்கீழ் 300 கிராமங்கள் இருந்தன. ஒரு மலையரணை மத்தியாகக் கொண்டு சிற்றரசு நிறுவப்பட்டிருந்தது. பாரியின் நாட்டு வளமும், அரணின் வலியும், அரசனின் வாரி வழங்கும் தன்மையும் கபிலரால் மாத்திரம் அன்றிப் பிற கவிஞர்களாலும் புகழ்ந்து பாடப் பெற்றிருக்கின்றன***[14] *என்று பறம்புமலையே பிரான்மலை எனக் குறிப்பிடுகிறார் கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி. மேலும்,*

**பாரி ஆண்ட சிறுகோட்டம் காடுகள் அடர்ந்து விளங்கியது. மூங்கில் அரிசி, பலாப்பழம், வள்ளிக்கிழங்கு, தேன் ஆகியன பெருந்தொகையாகப் பாரியின் நாட்டில் கிடைத்தன. கிராமங்கள்தோறும் இராகியும், கரும்பும் விளைவிக்கப்பட்டன. கிராமங்களில் கருப்பஞ்சாற்றிலிருந்து சர்க்கரை செய்தல், தானியங்களை அறுவடை செய்து உலரவிடுதல் ஆகிய தொழில்கள் நடைபெற்றனவென்று சங்ககாலப் புலவர்கள் மிகத் தெளிவாகவும் யதார்த்தமாகவும் பாடியுள்ளனர்**[15] என்று பறம்புநாட்டின் வளத்தையும் அவர் தொடர்ந்து காட்டுகிறார். இக்கருத்து முன்னோர் இருவரின் முடிவுகளையும் ஒத்ததாக அமைகிறது.

கி.வா.ஜகந்நாதன் கருத்து

'எழுபெரு வள்ளல்கள்' எனும் நூலில், **இராமநாதபுரம் மாவட்டத்தில் திருப்புத்தூர் என்ற ஊர் இருக்கிறது. அங்கிருந்து சில மைல் தூரத்தில் பிரான்மலை என்ற மலையும் அந்தப் பெயரோடு ஓர் ஊரும் உள்ளன. சங்ககாலத்தில் அந்த மலைக்குப் பறம்புமலை என்ற பெயர் வழங்கி வந்தது. அங்கேதான் பாரி என்னும் வள்ளல் வாழ்ந்து வந்தான்**[16] என்று பிரான்மலையே பறம்புமலை எனக் கி.வா.ஜ. குறிப்பிடுகிறார்.

மேலும் தனது மற்றொரு நூலாகிய 'பாரிவேள்' என்னும் நூலிலும், முன்னுரையில், **ஏழுவள்ளல்களிலும் தலைசிறந்தவன் பாரிவேள். இன்று பிரான்மலை என்று வழங்கும் பறம்புமலையில் வாழ்ந்தவன் அவன். புலவர் பெருமக்களிற் சிறந்த கபிலரும் பாரியும் ஆருயிர் நண்பர்கள், கபிலருடைய பாட்டுகளால்தான் பாரி இன்றும் வாழ்கிறான்**[17] என்றும், **பாண்டி நாட்டில் இன்று பிரான்மலை என்ற பெயரோடு விளங்கும் மலையே பாரி வாழ்ந்திருந்த மலை. சேரநாட்டிலிருந்தும், சோழ நாட்டிலிருந்தும், பாண்டி நாட்டிலிருந்தும் பல புலவர்கள் ஆறு கடலை நோக்கி வந்து கொண்டே இருப்பார்கள்**[18] எனவும் குறிப்பிடுகிறார்.

ஔவை. துரைசாமிபிள்ளை கருத்து

*'சேரர் வரலாறு' இயற்றிய ஔவை. துரைசாமிபிள்ளை,* **முடிவேந்தர்க்கு மகட்கொடை வழங்கும் முறைமை தமிழகத்தே வேளிர்பால் இருந்தமையின் அவ்வேளிர்களைத் தங்கள் நாட்டையடுத்துள்ள பகுதிகளில் இருந்து வருமாறு செய்வது பண்டை மரபு**[19] *எனக் குறிப்பிட்டு,* **பாண்டிநாட்டை அடுத்துள்ள பறம்புநாட்டிலும், சோழநாட்டை அடுத்துள்ள கொல்லி நாட்டிலும், தொண்டை நாட்டை அடுத்துள்ள மலையமான் நாட்டிலும், பிறவிடங்களிலும் வேளிர்கள் இருந்து வந்தமை சங்க இலக்கியம் பயில்வோர் நன்கறிந்தது**[20] *எனப் பறம்புநாடு, பாண்டிய நாட்டின் எல்லையாக விளங்கியதைத் தெளிவாகக் குறிப்பிடுகிறார்.*

*மேலும்,* **பாண்டி நாட்டின் வடக்கிலுள்ள வெள்ளாறு பாயும் பகுதிக்குப் பண்டை நாளில் கோனாடு என்று பெயர் வழங்கிற்று. இவ்வெள்ளாற்றின் வடகரையில் புதுக்கோட்டையிருக்கிறது. இந்த நாட்டு உறத்தூர் கூற்றத்து உறத்தூர்ப் பகுதியில் பொருந்திலர் என்பார் வாழ்ந்து வந்தனர். அவர்கட்கு எவ்வியென்னும் வேளிர் தலைவன் காவலனாக விளங்கினான். அக்கோனாட்டின் தென்னெல்லையாகப் பறம்பு நாடு இருக்கிறது**[21] *எனவும் பறம்பின் எல்லையைச் சுட்டுகிறார்.*

**அக்காலத்தே பாண்டி நாட்டின் வடபகுதியில் உற்ற பறம்புநாட்டின் தலைவனான வேள்பாரிக்கு உற்ற தோழராக விளங்கிய கபிலர் என்னும் சான்றோர்**[22] *எனக் கபிலரைப் பறம்போடும் பாரியோடும் இணைத்து அறிமுகப்படுத்துவதையும், அப்பறம்பு நாடு பாண்டி நாட்டு வடவெல்லையாக இருந்ததைக் குறிப்பிடுவதையும் இங்கு நோக்கலாம்.*

*இதுவரை பறம்புநாடும் பறம்புமலையும் இதுவெனத் தெளிய மொழியாத ஔவை. துரைசாமிபிள்ளை தனது புறநானூற்று விளக்கவுரை இரண்டாம் பாகத்தில், 105ஆம் பாடல் விளக்கத்தின் முதல் வரியிலேயே* **வேள் பாரி பாண்டிநாட்டுப் பறம்புமலையைச் சூழ்ந்த நாட்டை யுடையன்; இப்பறம்பு நாடு முந்நூறு ஊர்களையுடையது; பறம்புமலை இப்போது**

**பிரான்மலையென வழங்குகிறது; புதுக்கோட்டை நாட்டைச் சார்ந்திருக்கிறது**[23] எனத் தெளிவாகக் குறிப்பிடுவது இங்கு நோக்கத்தக்கதாகும்.

### கந்தசாமி கருத்து

வள்ளல்களையும் அவர்கள் ஆட்சிபுரிந்த இடங்களையும் பற்றி விரிவாகக் கூறும் கந்தசாமி, **சேர, சோழ, பாண்டிய மன்னர்களுக்குப் பெரும்பாலும் கட்டுப்படாமலும், சில வேளைகளில் கட்டுப்பட்டும் பல சிற்றரசர்கள் சங்ககாலத்தில் தமிழகத்தில் ஆட்சி புரிந்தனர். இவர்களில் கடை ஏழு வள்ளல்கள் புகழ் பெற்றோர் ஆவர். பாரி, காரி, ஓரி, நள்ளி, எழினி, ஆய், அதியமான் ஆகியோர் அக்கடை ஏழு வள்ளல்கள் ஆவர். குமணன் என்ற பிறிதொரு வள்ளலும் குறிப்பிடத்தக்கவர். தென்னார்க்காடு மாவட்டத்தின் ஒரு பகுதியை மலையமான்களும், மற்றொரு பகுதியை ஓய்மான்களும் ஆட்சி புரிந்தனர். தொண்டை நாட்டை (செங்கற்பட்டு, வடஆர்காடு மாவட்டங்களடங்கியது) திரையர் என்பவர்கள் ஆட்சி புரிந்தனர். பழனிமலை நாட்டை வேள் ஆய் மரபினரும், பறம்புமலை (பிரான்மலை) நாட்டைப் பாரியும் அவரது மரபினரும் ஆட்சி புரிந்தனர். தர்மபுரி மாவட்டப் பகுதியைக் கொண்ட தகடூர் நாட்டை அதியமான்கள் ஆட்சி புரிந்தனர்**[24] எனக் குறிப்பிடுவதன் மூலம் பாரியாண்ட பறம்புமலை தற்போதுள்ள பிரான்மலையே எனத் தெளியலாம்.

### கோவிந்தன் கருத்து

பறம்புநாடு புதுக்கோட்டைக்கு அருகில் அமைந்திருந்தது எனும் படியாக, **பாண்டிய நாட்டில் பறம்பு என்ற மலையொன்றுண்டு. அது இப்போது பிரான்மலை என வழங்குகிறது. அப்பறம்புமலையைச் சூழ முந்நூறு ஊர்களைக் கொண்ட ஒரு சிறு நாடும் இருந்தது. அம்மலையின் பெயரே அந்நாட்டிற்கும் பெயராய் அமைந்தது. புதுக்கோட்டை என இப்பொழுது வழங்கும் நாடே அக்காலத்தில் பறம்பு நாடு எனப் பெயர் பெற்றிருந்தது. அந்நாட்டை வேளிர் குலத்தலைவனாகிய பாரி என்பவன்**

***ஆண்டு வந்தான்***[25] எனப் புலவர் கோவிந்தன் என்பார் குறித்துள்ளமையும் இங்கு எண்ணத்தக்கததாகும்.

## ம.ரா.போ. குருசாமி தரும் சான்று

***பல வள்ளல்களை அறிந்து பழகியவர் கபிலர். எனினும் பறம்புமலை பாரிக்கு அவர் நெஞ்சக் கோவிலில் கொடுத்த இடம் வேறு எவர்க்கும் கிடைக்கவில்லை***[26] என்று குறிப்பிடும் ம.ரா.போ. குருசாமி தமது கபிலம் நூலில் இன்றைய பிரான்மலையின் புகைப்படத்தைத் தந்து வள்ளல் பாரி மன்னனுடன் கபிலர் வாழ்ந்த பறம்புமலை என்று குறிப்பிட்டுள்ளது இங்கு நோக்கத்தக்கதாகும்.

இவற்றின்வழியாக, பறம்புமலையே இன்றைய பிரான்மலை என்பது உறுதியாகின்றது. இனி பாரிமன்னன் ஆண்ட பகுதிகள் பற்றிய செய்திகளைத் தொகுத்துக் காணலாம்.

## பாரி ஆண்ட பதிவுகள்

பாண்டி நாட்டில் அமைந்த பறம்புமலை இன்றைக்குப் பிரான்மலை என வழங்கப்பெறுகிறது. இம்மலையைப் பாரிமன்னன் ஆண்டதற்கான பல சான்றுகள் சங்க இலக்கியங்களின்வழி கிடைக்கின்றன. இச்சான்றுகளைக் கொண்டு வரலாற்று அறிஞர்கள் பாரி ஆண்ட பகுதி குறித்த பதிவுகளைத் தொடர்ந்து விளக்கி வருகிறார்கள்.

பாரி வேளிர் குலத்து எவ்வி குடியைச் சார்ந்தவன். வேளிர் குலம் - எவ்வி குடி பற்றிய செய்திகள் - பாரி பற்றிய பதிவுகள் ஆகியன இலக்கியச் சான்றுகள்வழி வரலாற்று அறிஞர்களால் எடுத்துரைக்கப் பெற்றுள்ளன.

## மிழலைக் கூற்றமும் பறம்புநாடும்

பறம்புமலையை முன்பு ஆண்டவர்கள் யார் எனத் தெரியாத நிலையில், வேள் எவ்வி குடியைச் சேர்ந்தவனாகிய பாரியே பறம்பு நாட்டை உருவாக்கியிருக்க வேண்டும் என்னும் கருத்துக்கு மேற்காணும் குறிப்பு உதவியாக உள்ளது.

*இதனை மேலும் உறுதிப்படுத்துவதாக, புறநானூறு 24 ஆம் பாடலில்,*

***முந்நீ ருண்டு முந்நீர்ப் பாயும்***

***தாங்கா வுறையு ணல்லூர் கெழீஇய***

***ஓம்பா வீகை மாவேள் எவ்வி***

***புனலம் புதவின் மிழலை***

***என வரும் அடிகள் எவ்வி குடியினரின் நாடாக மிழலைக் கூற்றம் இருந்ததைப் புலப்படுத்துகிறது. இம்மிழலைக் கூற்றத்தின் தலைநகராக விளங்கியது நீடூர் என்பதும் இதனை அடுத்த நகரம் உறத்தூர் எனவும் யாழிசை மறுகி னீடூர் கிழவோன் வாய்வா ளெவ்வி..... உறத்தூர் என்னும் அகப்பாட்டடிகளால் குறிக்கின்றன. இம்மிழலைக் கூற்றம் பாண்டி நாட்டின் சில பகுதிகளையும் முன்பு கொண்டிருந்தது[27]*** *எனவும் குறிப்புகள் விளக்குகின்றன.*

*இம்மிழலைக் கூற்றமே பக்தி இலக்கியக்காலத்தில் தேவாரப் பாடல் பெற்ற சோணாட்டுத் திருத்தலங்களுள் திருநீடூர் என்னும் பெயரோடு வழங்கி வருதாயிற்று. இதனை,* ***மிழலைக் கூற்றத்தே மிழலை எனப் பெயர் வாய்ந்த தனியூர் ஒன்றுண்டென்பதும், அது சிவஸ்தலமென்பதும் மிழலை நாட்டு மிழலையே வெண்ணி நாட்டு மிழலையே என வரும் ஸ்ரீசுந்தரமூர்த்திகள் தேவாரப் பகுதியால் வெளியாம்[28]*** *என்பார் அறிஞர்.*

*மேலும்* ***இம்மிழலைக் கூற்றம் பாண்டி நாட்டின் சில பகுதிகளையும் கொண்டிருந்தது என்பதும் திருவாலவாயுடையார் புராணத்தில் திருப்பெருந்துறையைச் சார்ந்த பிரதேசம் மிழலைக் கூற்றத்தைச் சார்ந்திருந்ததாகக் கூறப்பட்டிருத்தலால் வெளியாகின்றது[29]*** *என்பதும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.*

*மிழலைக் கூற்றம் தமிழகத்தின் எப்பகுதி என்பதை ஆராயப் புகின்,* ***மிழலைக் கூற்றத்தைச் சேர்ந்த புகழ்சான்ற தலைவன் மாவேள் எவ்வி. அவன் வேளாளன் மரபினன். அவன் குடிமரபு ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட அந்நாளில் கூடப் பழமை சான்றது என்று கருதப்பட்டது. (புறம்***

**209) அவன் ஆட்சிப் பகுதி காவிரியாற்றின் தென்பகுதியிலிருந்தது. அது நெல்லும் கரும்பும் விரிவாகப் பயிராகிய வளமிக்க கழனிகள் நிரம்பிய நாடு[30]** என்னும் சான்று இங்கு நோக்கத்தக்கதாகும்.

இவற்றின் மூலம் வேள் எவ்வியின் உறவினனாகிய அதே குடியைச் சேர்ந்த பாரி மிழலைக் கூற்றத்துக்கு அருகில் இருந்த பகுதியைத் தனதாக்கிக் கொண்டு ஆட்சி புரிந்தான் என்பதும் அப்பகுதி மிழலைக் கூற்றத்துக்கும் பாண்டிய நாட்டுக்கும் இடைப்பட்ட பகுதி என்பதும் தெளிவாகப் புலனாகிறது.

எல்லைச் சிக்கல்கள்

புறநானூறு குறிப்பிடும் வரலாற்றின்வழி, தமிழகம் பாண்டியநாடு, சேரநாடு, சோழநாடு என மூன்று நாடுகளாகச் சங்ககாலத்தில் அமைந்திருந் தாலும் அதைக் குறித்த பதிவுகள் முடிந்த முடிபாக இல்லை என்பதை,

**அரசுகளுக்கிடையே எல்லைக் கோடுகள் தெளிவாகவோ, உறுதியாகவோ, அல்லது அவ்வாறு ஏற்றுக் கொள்ளப்பட்டதாகவோ இருந்திருக்க முடியாது. மன்னர் ஆண்ட பரப்புகளின் சரியான வரையறை அவர்களுக்கே தெரியாது. எல்லைத் தகராறுகள் தொடர்ந்து இருந்தன. அரசின் மிகத் தொலைவான எல்லைகளில் இருந்த சட்டத்திற்குப் புறம்பான சில சமுதாய சக்திகளுக்கு அவை பயன் தருவனவாயுமிருந்தன. போக்குவரத்துக் குறைபாட்டால் அக்கால மன்னர்களால் தற்கால முறையில் சட்டத்தின் ஒழுங்கை நிலைநாட்ட இயலவில்லை. ஒழுங்கை நாட்ட விரும்பிய மன்னர்கள் எப்போதும் ஒறுத்தற்போர்களைப் புரிந்த வண்ணமிருக்க வேண்டியதாயிற்று. நாட்டின் ஒரு சில பகுதிகளில் இருந்த சிற்றரசர்கள் எல்லைப்புறக் காவலர்களாகவும் இருந்தனர். வேறு சிலர் அடங்காப்பிடாரிகளாகவும் இருந்தனர். சங்ககால ஆட்சிமுறை மூன்று முடிமன்னராட்சியும், பல சிற்றரசர் ஆட்சியும் அடங்கியது. இச்சிற்றரசர்கள் தங்களை அடக்குவர் இன்றேல் சுதந்திரம் பெற முயன்றவாறு இருந்தனர்''[31]** என்பது வரலாற்று ஆய்வாளர்களின் கருத்தாகும். இதனைச் சங்ககால அரசியல் நிலையாகக் கொள்ளலாம்.

மேலாதிக்க உணர்வு

*மூவேந்தர்களும் அரசுரிமையைப் பாத்தியமாக அடையினும் ஒவ்வொருவரும் தமது தோள் வலியால் அவ்வரசைப் பெருக்கிக் கொள்வதிலேயே கண்ணுங் கருத்துமாயிருந்தனர்.* ***இடங் குறுகியுள்ள இந்தத் தமிழ்நாட்டில் சிற்சில பேரரசர்கள் காலம் தவிர, ஏனைய மன்னர்கள் காலத்தில் பல சிறு அரசுகள் நிலைபெற்றிருந்தன. இதுவே அடிக்கடி சண்டை செய்யக் காரணமாயிருந்தது. குறுநில மன்னர்களும் பிறர்க்கு அடங்கி வாழ்வதை இழிவானதெனக் கருதினர். இவர்களே இவ்வாறாயின் சேர, சோழ, பாண்டியரைப் பற்றிக் கேட்க வேண்டுவதில்லை. ஒருசில காலந்தவிர இவர்கள் மூவரும் ஒற்றுமையாய் இருந்ததே இல்லை***[32] *என்று அக்கால மன்னர்தம் ஆட்சிமுறை, எல்லைச்சிக்கல்கள் குறிக்கப்பெறுகின்றன.*

பாரியின் குலம்

*பாரியின் குலம் பற்றி ஆராயப் பெருவாரியான சான்றுகள் உள்ளன. அவை பின்வருமாறு.*

வேளிர்கள்

***பண்டைக்காலச்சூழலில் மூவேந்தர்கள் போர் வெற்றிகளில் புகழ் பெற்றிருக்கத் தமது கொடைத்திறத்தால் புகழ்பெற்றிருந்தவர்கள் வேளிர்கள் ஆவர். செந்தமிழ் வளர்த்த பெருமையிற் சேர, சோழ, பாண்டியர்க்கு எவ்வளவு பாகமுண்டோ அதற்கு அதிகமில்லாமற் போயினும், அவரளவு சமபாகம் பெற்றுநின்ற ஒரு பெருங்கூட்டத்தார் முற்காலத்தே தமிழ்நாட்டில் விளங்கி-யிருந்தனர்***[33] *என வேளிர்களை அறிமுகப்படுத்துகிறார் மு.இராகவையங்கார்.*

*'பண்கெழு வேந்தரும் வேளிரும்' எனப் புறநானூற்றிலும், 'இருபெரு வேந்தரொடு வேளிர்' என மதுரைக்காஞ்சியிலும், 'வேந்தரும் வேளிரும்' எனப் பதிற்றுப்பத்திற் பலவிடங்களிலும் வருதலால் சங்ககாலத்தில் விளங்கிய வேளிரின் மதிப்பினை நன்கு அறியலாம்.*

மேலும், **தொன்முதிர் வேளிர் (அகம்-258) நாற்பத்தொன்பது வழிமுறை வந்த வேளிர் (புறம்-201) இருங்கோவேள் மருங்கு (பட்டினப்பாலை எவ்வி தொல்குடி (புறம் - 202) என இலக்கியங்கள் உரைப்பதன் மூலம் மூவேந்தர்களை அடுத்தும் அவர்களுக்கு இணையாகவும் வைத்துக் காணப்பட்டவர் வேளிர்**[34] என்பது விளங்கும்.

வேளிர் - விளக்கம்

இலக்கண உரையாசிரியர், நச்சினார்க்கினியர் தொல்காப்பிய உரையில் வேளிர்களைக் குறித்து, **வேளாளர் இருவகையர்; உழுதுண்போரும், உழுவித்துண்போரும் என. இவருள் உழுவித்துண்போர் மண்டிலமாக்களுந் தண்டத் தலைவருமாய்ச் சோழநாட்டுப் பிடவூரும், அழுந்தும், நங்கூரும், நாவூரும், ஆலஞ்சேரியும், பெருஞ்சிக்கலும், வல்லமும், கிழாரும் முதலிய பதியிற் றோன்றி, "வேள்" எனவும், "அரசு" எனவும் உரிமையெய்தினோரும், பாண்டிய நாட்டுக் "காவிதிப்" பட்டமெய்தினோரும், குறுமுடிகுடிப்பிறந்தோர் முதலியோருமாய் முடியுடை வேந்தர்க்கு மகட்கொடைக்குரிய வேளாளராம். உருவப் பஃறேர் இளஞ்சேட்சென்னி அழுந்தூர் வேளிடை மகட்கோடலும், அவன் மகனாகிய கரிகால் பெருவளத்தான் நாங்கூர் வேளிடை மகட்கோடலும் கூறுவர் எனவும், "வேளாளர் பகைவர் மேலும், நாடுகாத்தான் மேலும் சந்துசெய்வித்தன் மேலும் அரசரேவற்படி செல்லுதற்குரியர்"**[35] என்றும் குறிப்பிட்டுள்ளமை இங்கு நோக்கத்தக்கதாகும்.

சங்ககால வேளிர்நிலை

வேளிர்களிலும் பலவகைக் குடிகள் இருந்தார்கள் என்பதையும், அவர்கள் மூவேந்தர்களுள் யாருக்கேனும் ஒருவர்க்குக் கட்டுப்பட்டு வாழ்ந்தார்கள் என்பதையும் சிலர் தனியுரிமையுடன் ஆட்சி செய்திருக்கிறார்கள் என்பதையும் கீழ்க்காணும் குறிப்பின்மூலம் உணரலாம்.

**பல நூற்றாண்டுகளாக முடியுடை வேந்தர்களாய்த் தமிழகத்தில் சேர, சோழ, பாண்டியர் என்ற அரசர்கள் மட்டுமே இருந்து வந்தனர். இதன் பயனாகவே அவர்கள் ஒருதொகைப்பட மூவேந்தர்கள் என்று**

**அழைக்கப்பட்டனர். ஆயினும் தமிழகத்தில் மிகப் பரந்த பகுதிகளை ஆண்ட பல்வேறு வேளிரும் குடிமன்னரும் இருந்தனர். அவர்கள் பெரும்பாலும் மூவரசருள் யாரேனும் ஒருவருக்குக் குடியுரிமைப்பட்டவராகவே விளங்கினர். அவர்களில் சிலர் தங்கள் மேலாட்சியைத் தூக்கி எறிந்து விட்டுத் தனியுரிமையில் மன்னராக முயன்றதுண்டு.[36]**

மூவேந்தரை அணுகியோ அல்லது தனித்தோ இயங்கிய வேளிர்கள் தங்களுக்கெனச் சிற்றரசுகளை ஆட்சிப் பரப்பாகக் கொண்டிருந்தனர். அவை பலவகைப் பெயர்களில் வழங்கப்பெற்றன. இதை,

**வேளிரால் ஆதியிற் சிற்றரசுகள் தாபிக்கப்பட்டு வந்த காலங்களில், இவர்க்கும் சேர,சோழ, பாண்டியர்க்கும் அடுத்தடுத்துப் போர் நிகழ்ந்து வந்ததாக அறியப்படுகிறது. அங்ஙனம் தாபிக்கப் பெற்ற பழைய வேளிர் நாடுகள் - கொண்கானம், ஒளிநாடு, முத்தூற்றுக் கூற்றம், பொதிகைநாடு, மிழலைக் கூற்றம், குண்டூர்க் கூற்றம், வீரை, துளுநாடு முதலியன[37]** என மூவர்க்கும் மாறாக வேளிர்கள் தோற்றுவித்து ஆண்ட நாடுகளைக் குறித்த பதிவினால் அறிய முடிகிறது.

எவ்வி குடியினர்

மிழலைக் கூற்றத்தை ஆண்டுவந்தவர்கள் எவ்வி குடியைச் சேர்ந்தவர்களாகச் சுட்டப் பெறுகின்றனர். வேள்பாரியும் எவ்வி குடியைச் சேர்ந்தவனாவான். இதை,

**வேள் எவ்வி குடியில் பிறந்தவன் வேள்பாரி. உறத்தூர்வேள் எவ்வி காலத்தில் மிழலைக் கூற்றத்தின் மேற்கே அமைந்திருந்தது. அப்பகுதியில் வேள் எவ்வியின் "ஏவல் மேவார்'' இருந்தமையால் வேள் எவ்வி குடியினனான வேள்பாரி தன் குடியினரின் ஆட்சிக்குட்பட்டிருந்தும், அடிக்கடி ஏவல் மேவாரின் தொல்லை நிகழ்ந்து கொண்டிருந்ததுமான உறத்தூர்ப் பகுதியை வேள் எவ்வியின் விருப்பத்தின் வண்ணம் தன் பறம்பு நாட்டோடு இணைத்துக் கொண்டான்[38]** என்னும் கருத்தோடு ஒத்துக் காண இயலும்.

மேற்கண்ட செய்திகளின்வழியாக, பாரி வேள் எவ்வி குடியினன் என்பது உறுதியாகிறது.

## எவ்வியும் பாரியும்

எவ்வியை நேரில் கண்டு பாடிய புலவர் வெள்ளெருக்கிலையார். கபிலர், குடவாயிற் கீரத்தனார், நக்கீரர், பரணர், மாங்குடி கிழார், மாமூலனார் போன்ற பிற புலவர்களும் இவனைத் தம் பாடல்களில் குறிப்பிட்டுள்ளனர். இவர்களுள் கபிலர், நக்கீரர், பரணர் போன்றோர் பாரியின் காலத்தோர் என்பதும் இங்கு நோக்கத்தக்கதாகும்.

இந்த எவ்வியைக் குறித்த மற்றொரு சான்றும் மேற்காணும் பாடலிலேயே காணக்கிடைக்கின்றது. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியநெடுஞ்செழியன் எவ்வியின்மீது படையெடுத்துச் சென்று, எவ்வியின் நாடாகிய மிழலைக் கூற்றத்தையும் அதன் அருகிலுள்ள முத்தூற்றுக் கூற்றத்தையும் ஒருசேர அழித்தான் என்னும் செய்தியை, மாங்குடி மருதனார் புலப்படுத்துகிறார்.

## பறம்புநாடு அமைவு

ஆதலால் வேள் எவ்வியின் மறைவுக்கு முன்னரோ அல்லது பிறகோ பாரி தனது நாடாக முந்நூறு ஊர்களைக் கொண்ட பறம்பு நாட்டைப் புதிதாகவே நிறுவிக்கொண்டான் எனக் கருத இடமுண்டு. இப்பறம்பு நாடு காவிரிக்கரைக்குத் தென்பாலுள்ள மிழலைக்கூற்றத்துக்கு அருகில் இருந்ததும் உணரப்படுகிறது. இது சேர, சோழ, பாண்டிய நாடுகளின் எல்லைப் பகுதியாகத் தனித்து விளங்குவதும் இங்கு எண்ணத்தக்கதாகும். ஆதலால் தற்காலத்து விளங்கும் பிரான்மலையே பறம்புமலை என்பதும் உறுதியாகிறது.

இதனை, **எவ்வியின் உறவினனான வேள்பாரி பறம்பு என்ற ஒரு சிறுநிலப்பகுதியின் தலைவன். ஆனால் புலவர்களுக்கு ஆதரவளித்த மாபெரும் புரவலன் என்ற முறையில் தமிழ்மொழியுள்ளளவும் அவன் பெயர் தமிழர் நினைவில் மங்காமல் நிலைபெறத்தக்கது. எவ்வியின் வீழ்ச்சிக்குப் பின் பாரி உயர்ந்த பறம்புமலையையும் அதனைச் சூழ்ந்த நிலங்களையும் கைக்கொண்டு**

**மூவரசர்களில் எவரையும் மேலாளராக ஏற்காமல் தனியாட்சியாளனாக நடக்கத் தொடங்கினான்**[39] என்னும் சான்றினால் மெய்ப்பிக்க முடிகிறது.

பறம்பு நாடு முந்நூறு ஊர்களைக் கொண்டது என்பதனைக் கபிலர் வாய்மொழி மூலமாகவே அறியமுடிகிறது. இதனை, **முந்நூறு ஊர்த்தே தண்பறம்பு நன்னாடு** என கபிலர் மூவேந்தரிடம் அறிவிக்கும் புறநானூற்றுப் பாடல்வழி உணரலாம். பறம்பு நாட்டின் தலைமையிடமாகப் பறம்புமலை விளங்கியதெனவும், **குன்றம், குன்று, வரை, திணிநெடுங்குன்றம், நெடியோன் குன்று, இனியோன் குன்று, அண்ணல் நெடுவரை** என்னும் குறிப்புச் சொற்களால் பறம்புமலை சுட்டப் பெற்றிருப்பதும் புறநானூற்றுப் பாடல்களின் வழியே புலனாகிறது.

## பாரியின் காலம்

வேள்பாரி கடைச்சங்ககாலத்தில் வாழ்ந்திருக்க வேண்டும் என்பது வரலாற்று அறிஞர்கள் பெரும்பான்மையோர் கருத்தாகும்.

பாரியின் காலத்தைச் சரிவர அறிந்து கொள்ள அவன் காலத்திற்கு முந்தைய - பிந்தைய வரலாறுகளைப் பதிவு செய்துள்ள சங்க அகச்சான்றுகள் துணையாக அமைகின்றன. அவ்வகையில் பின்வரும் சான்றுகள் கொள்ளத்தக்கன.

### தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்

பாரியின் காலத்துக்குச் சற்று முந்தியோ, பிந்தியோ தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் மிழலைக் கூற்றத்துப் படையெடுப்பு நிகழ்ந்திருக்கிறது. இதற்கான காரணமாக,

**தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் சிறுவனாக இருந்த காரணத்தால் இவனுடைய அரசாட்சியை ஏற்க மறுத்த சோழர் படை மதுரை வரை முன்னேறியது எனவும், ஆயினும் பாண்டியர் படைத்தலைவனான பழையன்மாறன் ஒரு முதல்தரமான வெற்றியை அடைந்து, படையெடுத்தவர்களைத் தன் நாட்டுக்கே ஓட்டினான் என்றும்**

**இப்போரில் இளையோனான பாண்டியனும் உடனிருந்தான்[40]** என்றும் குறிப்பிடுவார் அறிஞர் கனகசபை.

ஆதலால் முன்கூறிய கருத்துக்கேற்பவே, **தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் படையெடுப்பாளர்களைத் திருப்பி ஓட்டியதுடன் மனநிறைவு அடையாமல் சோழநாட்டின்மீது படை யெடுத்து அதன் தென் மாகாணமாகிய மிழலைக் கூற்றத்தினுள் புகுந்து, அதன் தலைவன் பழைய வேளாளர் மரபினைச் சார்ந்த எவ்வியை முறியடித்து மிழலைக் கூற்றத்தைத் தன் ஆட்சியுடன் சேர்த்துக் கொண்டான். மேலும் சேரநாட்டின் கீழ்ப்புற மாகாணமான முத்தூற்றுக் கூற்றத்தையும் வென்று கைக்கொண்டான்[41]** என்பதையும் அறியமுடிகிறது.

பாரியின் காலத்தவனாகிய வேள் எவ்வியின் மிழலைக் கூற்றத்தையும் அருகிருந்த முத்தூற்றுக் கூற்றத்தையும் வெற்றி கொண்டு அழித்தவன் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியன் என்னும் செய்தியைக் கொண்டு காணின், பாரி அதே காலத்தைச் சேர்ந்தவனாகவோ அல்லது அதன்பின் வந்தவனாகவோ இருத்தல் வேண்டும். இதிலும் மாற்று உண்டு. காலவரிசை ஒத்து இசையவில்லை.

பாரியோடு கூடிய பாண்டிய மன்னர்களின் காலம்

**ஆரியப் படைகடந்த நெடுஞ்செழியனின் காலம் கி.பி.50-75 வரையாகும். அவனுக்குப் பின் வந்த தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் காலம் கி.பி. 90 - 128 ஆகும். இவர்கள் இருவருக்கும் இடையில் வெற்றிவேற் செழியன் என்னும் பாண்டியன் கி.பி.75-90வரை ஆட்சி புரிந்திருக்கிறான். இவனுடைய ஆட்சிச் செய்திகள் எதும் உறுதி செய்யப்படாத நிலையில் உள்ளன. ஆயினும், இவன் கொற்கை மண்டலத் தலைவனாய் இருந்தான் என்றும், ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனின் மறைவு கேட்டு, மதுரைக்கு வந்து அரசிருக்கை ஏறினான்[41]** எனவும் கருத்துகள் கூறுகின்றன. இச்செய்தியைச் சிலப்பதிகாரமும் உறுதிப்படுத்துகிறது.

பாரியே முந்தையவன்

*பிற்காலத்தில் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் வையையாற்றின் வடபகுதியிலிருந்த முத்தூற்றுக் கூற்றத்தையும் மிழலைக் கூற்றத்தையும் வென்று, தன் ஆட்சியோடு இணைத்துக் கொண்டான் என்னும் செய்தியினை 24ஆம் புறப்பாட்டால் அறிய முடிகிறது.* ***ஆயினும் இவனால் வையைக்கு வடக்கேயிருந்த பறம்புநாடு இணைத்துக் கொள்ளப்பட்டதாகச் சங்ககால இலக்கியங்களில் சான்று கிடைக்கவில்லை. ஆதலால், தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் காலத்துக்கு முற்பட்டவன் வள்ளல் பாரி***[43] *என்பார் மரு.பரமகுரு.*

பாரியின் காலம்

***பாரி பறம்பு நாட்டை ஆண்டிருந்த காலத்தை, கி.பி இரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் ஆண்டவன் வேளிர் குலத் தலைவனான வேள்பாரி***[44] *என வரையறுக்கிறார் மரு. பரமகுரு.*

*பாரியின் மறைவுக்குப்பின் கபிலர் சென்று வாழ்த்திப் பாடிய செல்வக்கடுங்கோ வாழியாதனின் காலம் கி.பி. 55 - 90 வரையாகும். ஆதலால் பாரியின் ஆட்சிக் காலம் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் காலத்துக்கு முன்னும், கொற்கைச் செழியன் மற்றும் செல்வக்கடுங்கோவாழியாதன் காலத்தை ஒட்டியும் அமைந்திருக்க வேண்டும் என்பது மேற்கோள் அடிப்படையில் உறுதிப்படுத்தப் பெறுகிறது.*

பறம்பு நாட்டு எல்லை

*பறம்புநாட்டின் நான்கு திசைகளின் எல்லைகளும் வரையறுக்கத் தக்கனவாக உள்ளன. இன்றும் அது குறித்த பதிவுகள் காணக் கிடைக்கின்றன. அவற்றைக் கீழ்வருமாறு காணலாம்.*

*முத்தூற்றுக் கூற்றத்தின் ஒரு பகுதியாக விளங்கியது பறம்புநாடாகும். பாரியாலேயே இந்நாடு ஏற்படுத்தப் பெற்றது என்பதை வரலாற்றின்வழி உணர முடிகிறது.*

பறம்புமலையைத் தலைமையிடமாகக் கொண்டு விளங்கிய பறம்பு நாட்டினுடைய எல்லைகள் எவை என்பதை மரு. பரமகுரு மாதிரி வரைபடமாகக் குறித்துள்ளார், அச்சான்று இங்கு எண்ணத்தக்கது.

**மூவேந்தர்களாலும் சிற்றரசர்களாலும் ஆளப்பெற்ற சங்ககாலத் தமிழகத்தில் பாண்டிய நாடு காவிரியாற்றிற்குத் தெற்கேயும் ஆனைமலைத் தொடருக்குக் கிழக்கே கிழக்குக் கடற்கரை வரையிலும் தெற்கே குமரிமுனை வரையிலும் பரந்திருந்தது**[45] என்பர் வரலாற்றறிஞர். இக்கருத்து ஏற்புடையதெனலாம்.

**ஆயினும் வையையாற்றுக்கும் வடக்கேயிருந்த பாண்டிய நாட்டு நிலப்பகுதியை, பாண்டியர்களின் ஆட்சிக்கு உட்பட்டோ, உட்படாமலோ குறுநில மன்னர் பலர் அக்காலத்தில் ஆட்சி புரிந்திருந்தனர் என்பதே வரலாற்றுண்மையாகும்**[46] என்பார் மரு. பரமகுரு.

பறம்புநாட்டின் இருபிரிவுகள்

திசைகளைக் கொண்டு பறம்புநாடு **வடபறம்பு நாடு** எனவும், **தென்பறம்பு நாடு** எனவும் பிரிக்கப்பட்டிருந்தது.

இதில் தென்பறம்பு நாட்டின் குறிப்பிடத் தகுந்த எல்லையாகத் திருமோகூர் இருந்துள்ளது தெரியவருகிறது. இத்திருமோகூரையே பழையன்மாறன் என்னும் மன்னன் ஆண்டு வந்தான் என்னும் செய்தியும் இங்கு எண்ணத்தக்கது.

**தமிழகத்தில் குடிபுகுந்தவருள் கடைசியானவர் கோசலர்கள் என்றும் அவர்கள் பழையன் மாறன் தலைநகரான மோகூரைத் தாக்கினார்கள் என்றும், பாண்டியர் ஆட்சியில் அவர்கள் பழையன்மாறன் ஒருவனுக்கே அடுத்தவரான தலைசிறந்த குடிமையுரிமையுடையவராக மதிக்கப்பட்டிருந்தனர்**[47] என்னும் சான்று திருமோகூரை ஆண்டவன் பழையன் மாறன் என்னும் உண்மையை உணர்த்துகிறது.

பறம்பு நாட்டுத் தென்னெல்லை:

திருமோகூர்

*திருமோகூர் மதுரைக்கு வடகிழக்கில் ஏறத்தாழ 15கி.மீ. தொலைவில் உள்ளது. அங்குள்ள வைணவத் திருக்கோயிலின் கல்வெட்டு ஒன்று* **தென்பறம்பு நாட்டுத் திருமோகூர்** (329 of 1918) *என்று அவ்வூரைக் குறிக்கிறது.* **திருமோகூருக்குக் கிழக்கே 6 கி.மீ. தொலைவில் உள்ளது திருவாதவூர். இதனைத் தென்பறம்புநாட்டுத் திருவாதவூர்**[48] *என்று ஒரு கல்வெட்டு கூறுகிறது.*

திருவாதவூர்

*திருவாதவூர், சங்கப்புலவர் கபிலரும் சமயச் சிறப்பு வாய்ந்த சைவசமயக் குரவர்களில் ஒருவரான மாணிக்கவாசகரும் பிறந்த தலமாகும். இங்கு ஈராயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழ் - பிராமி கல்வெட்டுகளைக் கொண்ட சமணர் குகைத்தலமுள்ள குன்று ஒன்றுள்ளது. திருவாதவூர் திருமறைநாதசுவாமி கோயிலிலும், மடைவளாக வீதியிலும், பாசன ஏரியிலும் பிற்காலப்பாண்டியர், நாயக்கர், ஆங்கிலேயர் காலக் கல்வெட்டுகள் உள்ளன. இவற்றில் பழமையானது கி.பி.12ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த வீரபாண்டியக் கல்வெட்டாகும். இவன் நெட்டூர் மூன்றாம் குலோத்துங்க சோழனால் முறியடிக்கப்பட்டவன்.* **பூமருவிய திருமாதும் என்று தொடங்கும் மெய்க்கீர்த்தியுடன் கூடிய இவனது கல்வெட்டு திருவாதவூர் சிவன் கோயிலில் (46-2003) உள்ளது. திருவாதவூர் தென்பறம்பு நாடு என்றழைக்கப்பட்ட பண்டைய உள்நாட்டுப் பிரிவில் இருந்துள்ளது**[49] *என்பது இதன்மூலம் அறியலாகிறது. இதன்வழியாக 12ஆம் நூற்றாண்டு வரையிலும் திருவாதவூர் தென்பறம்பு நாட்டு எல்லையில் அமைந்துள்ளதை அறியலாம்.*

நல்லணி ஆமூர்

*திருவாதவூரைப் போலவே ஆமூர் எனத் தற்காலத்து வழங்கப்படும் நல்லணி ஆமூரும் தென்பறம்பு நாட்டு எல்லையாக அமைந்துள்ளதைக் கீழ்வரும் சான்று மூலமாக உணரலாம்.*

**சங்ககால இலக்கியங்களில் குறிக்கப் பெறும் ஆமூர்களின் வேறான நல்லணி ஆமூர் என்று கல்வெட்டுக்களில் குறிக்கப் பெறும் ஆமூர், திருமோகூரிலிருந்து திருவாதவூர் செல்லும் பழமையான சாலையில் உள்ளது. இவ்வூர், "திருப்பூவணமுடைய நாயனார் தேவதானத் தென்பறம்பு நாட்டு நல்லணி ஆமூர் ஆமூர் அய்யப்பொழில் ஈகுவரம்"[60]** என்று கல்வெட்டில் குறிக்கப் பெறுகிறது.

ஆக, இந்த மூன்று ஊர்களும் அமைந்துள்ள பகுதி தென்பறம்பு நாட்டுப் பகுதி என்பது தெளிவாகின்றது. திருமோகூர், திருவாதவூர், நல்லணிஆமூர் இம்மூன்று ஊர்களும் வையையாற்றின் வடகரையில் ஒரு சேர அமைந்துள்ளன.

பறம்புக்குடியே பரமக்குடி

தற்காலத்தில் குறிக்கப்படும் பரமக்குடி என்னும் ஊர் பறம்புக்குடி என்பதன் திரிபே என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர். இப்பரமக்குடி மேற்குறிப்பிட்ட திருமோகூர், திருவாதவூர், நல்லணி ஆமூர் ஆகிய ஊர்களுக்குக் கிழக்கே வையையாற்றின் தென்கரையில் அமைந்துள்ளது. **பறம்புக்குடி என்ற பெயரே இங்ஙனம் பரமக்குடி என மருவி வழங்குகின்றது என்று அறிஞர் கூறுவர். இஃது ஒப்புக்கொள்ளத்தக்கதாயின் பறம்பு நாட்டின் தென்னெல்லையாகப் பரமக்குடியைக் கொள்ளலாம்[61]** என்பார் மா.இராசமாணிக்கனார்.

பறம்பு நாட்டுக் கிழக்கெல்லை:

முத்தூற்றுக் கூற்றமே பறம்புநாடு

முத்தூற்றுக் கூற்றம் என்பது சங்ககாலத்தில் பாண்டிய மண்டலத்தின் கிழக்குக் கடற்கரைப் பகுதியில் அமைந்திருந்தது. இது முத்தூர்க் கூற்றம் என்றும் வழங்கப்படுவதுண்டு. 24ஆம் புறப்பாட்டால் இது பழைய வேளிர்க்குரியதென்பதும் நெல்விளையச் சிறந்தது என்பதும் புலப்படுகின்றது.

இந்த முத்தூற்றுக் கூற்றத்தில் அமைந்திருந்த ஊர்கள் தற்போதும் அதே பெயரில் வழங்கப்பட்டு வருவதைச் சான்றுகளின்மூலம் அறிய முடிகிறது.

**பாண்டிய மண்டலத்து முத்தூற்றுக் கூற்றம்**[52] என்றும், **முத்தூற்றுக் கூற்றத்துப் பொய்கை நல்லூர்**[53] என்றும், **முத்தூற்றுக் கூற்றத்துத் திருப்புன வாயில்**[54] என்றும், **முத்தூற்றுக் கூற்றத்துத் தித்தானம்**[55] என்றும் கல்வெட்டுக்கள் கூறுவதால் முத்தூற்றுக் கூற்றம் அவ்வூர்களைத் தன்னகத்துக் கொண்டு பாண்டிய மண்டலத்திலிருந்த ஓர் உள்நாடு என்பது பெறப்படுகின்றது.

## முத்தூற்றுக் கூற்றத்துப் பகுதிகள்

மேற்குறிப்பிட்ட ஊர்களுள் **திருப்புனவாயிலும், பொய்கை நல்லூரும் தஞ்சாவூர் சில்லாவில் (இப்போதைய புதுக்கோட்டை மாவட்டத்தில்) அறந்தாங்கித் தாலுகாவிலும், தித்தாண்ட தானபுரம் என்று வழங்கும் தித்தானம் இராமநாதபுரம் சில்லாவில் திருவாடானைத் தாலுகாவிலும், இருத்தலால் இக்கூற்றம் அறந்தாங்கி, திருவாடானைத் தாலுகாக்களில் இருந்திருத்தல் வேண்டும் என்பது ஒரு தலை**[56] என்று முத்தூற்றுக் கூற்றத்தின் தற்போதைய எல்லைகளை வரையறுக்கிறார் தி.வை. சதாசிவப் பண்டாரத்தார்.

## பாண்டியர் ஆட்சியில் முத்தூற்றுக் கூற்றம்

நெடுஞ்செழியன் ஆட்சியில் தென்பாண்டி நாட்டின் கீழ்க்கடற்பகுதியில் முத்தூற்றுக் கூற்றம் என்பது ஒரு பகுதியாக விளங்கியது. **அதன் தலைநகர் முத்தூறு என்பது. அதற்கும் திருநெல்வேலிக்கும் ஒரு பெருவழி இருந்ததெனத் திருநெல்வேலி நெல்லையப்பர் கோயில் கல்வெட்டொன்று**[57] குறிக்கின்றது. **பாண்டிய நாட்டுக் கப்பலூர், சோழராட்சியில் உலகளந்த சோழ நல்லூர் என்ற பெயர் தாங்கியிருந்தபோது தோன்றிய கல்வெட்டு அதனை முத்தூற்றுக் கூற்றத்து உலகளந்த சோழ நல்லூரான கப்பலூர்**[58] **என்று கூறுகிறது என்றும் உக்கிரப் பெருவழுதி பாண்டிய வேந்தனாய் வீற்றிருக்கையில் கிழக்கில் முத்தூற்றுக் கூற்றத்தில் வேங்கை மார்பன் என்னும் குறுநிலத் தலைவன் ஆட்சி**

**செய்து வந்தான். அந்நாளில் அப்பகுதியிலுள்ள கானப்பேரெயில் சிறந்த அரண் அமைந்து பாண்டியர்க்குரியதாயிருந்தது**[59] என்றும் ஔவை.துரைசாமி பிள்ளை குறிப்பிடுகிறார்.

## முத்துநாடு

தேவகோட்டைக்குக் கிழக்கே - 10 கி.மீ. தொலைவில் இருக்கும் அனுமந்தக்குடி என்னும் ஊரின்கண் மழநாத சுவாமி கோயில் என்றழைக்கப் படும் சமணர் கோயில் உள்ளது. இக்கோயிலுள்ள விசயநகர வேந்தர் காலத்துக் (கி.பி 1535) கல்வெட்டு ஒன்று **முத்தூற்றுக் கூற்றத்துக் குருவழுதுடி...... என்னும் ஜினேந்திர மங்கலம்**[60] என்று குறிப்பிடுகின்றது. தேவகோட்டைக்குக் கிழக்கே முத்துநாடு என்று ஒர் ஊர் உள்ளது. இந்த ஊர் வட்டகை முத்துநாடு என்று இக்காலத்தும் வழங்கப்படுகிறது. பண்டு முத்தூற்றுக் கூற்றம் இருந்ததை முத்துநாடு எனும் பெயர் உறுதிப்படுத்துவதாகும்.

## முத்துநாடு பறம்புநாட்டு எல்லை

எனவே, முத்தூற்றுக் கூற்றத்தில் பொய்கை நல்லூர், திருப்புனவாசல், தித்தாண்டதானபுரம், கப்பலூர், காளையார் கோயில், அனுமந்தக்குடி, முத்துநாடு ஆகிய ஊர்கள் இருந்தனவென்று அறிய முடிகின்றது. இவற்றுள் அனுமந்தக்குடியும், முத்துநாடும் தேவகோட்டைக்குக் கிழக்கே மிக அண்மையில் இருக்கும் ஊர்களாகும். எனவே, அனுமந்தக்குடிக்கும் முத்து நாட்டுக்கும் மேற்கே பறம்பு நாடு இருந்தது என அறியலாம்.

## பிரம்பூர் நாடு

பறம்பு நாடு என்பது பிரம்பூர் நாடு எனவும் மருவி வழங்கி வருகிறது. பிரமநாடு என்று மு.இராகவையங்கார் குறிப்பிட்டுள்ள சான்றினையும் இங்கு எண்ணுதல் பொருந்தும். **நகரத்தார்களில் ஒரு பிரிவாகிய மாற்றூர்க் கோவிலைச் சேர்ந்தவர்கள் தங்கள் திருமணங்களில் எழுதும் இசைவுப் பிடிமானத்தில் 'கேரளசிங்க வளநாடாகிய பிரம்பூர் நாட்டில்' என்று இன்றளவும் எழுதி வருகிறார்கள்**[61] என்று ''சோமலெ'' குறிப்பிடுவார்.

*பிரம்பூர் நாட்டில் உள்ளதாகக் குறிக்கப்பெறும் மாற்றூர், இலுப்பைக்குடி ஆகிய ஊர்கள் காரைக்குடிக்குக் கிழக்கே 5.கி.மீ. தொலைவில் அடுத்தடுத்து உள்ளன.*

பிரம்பூர் குறித்த விளக்கம்

*டாக்டர். சுப. திண்ணப்பன்,* ***பிரம்பூர் என்ற நாட்டின் கீழ் மாற்றூர், இலுப்பைக்குடி என்ற இரண்டு கோயில்களும் வருகின்றன. இங்கு பிரம்பூர் என்பது வள்ளல் பாரியின் பறம்பு என்பதன் திரிபு என்று சோமலெ கருதுகின்றார்கள். இப்போதுள்ள பிரான்மலைப் பகுதியைப் பறம்புமலைப் பகுதியாகக் கொண்டால் அதற்கு அண்மையில் இருக்கும் இளையாற்றங்குடியும் பிரம்பூர் நாட்டில்தான் வரவேண்டும், அதை விடுத்து மாற்றூர், இலுப்பைக்குடி மட்டும் பிரம்பூர் நாட்டின்கீழ் வருவானேன்?***[62] *என்றொரு வினா எழுப்பியுள்ளார்.*

*தேவகோட்டைக்குக் கிழக்கே முத்துநாடு என்றோர் ஊரும், அவ்வூர் வட்டகை இன்னும் முத்துநாடு என்று வழங்கப் பெறுகிறது.* ***பண்டைக் காலத்து முத்தூற்றுக் கூற்றம் பிற்காலத்தில் முத்துநாடு என்று மாறி வழங்குதல் இயல்பு. அனுமந்தக்குடிக்கும் முத்துநாடு என்னும் ஊருக்கும் மேற்கே பறம்புநாடு அமைந்திருந்தது. முத்து நாட்டுப்பகுதி மக்கள் தம்நாட்டு எல்லையிலிருந்த மாற்றூர், இலுப்பைக்குடி முதலிய ஊர்கள் இருந்த பகுதியை பறம்பு நாடு என்று வழங்கினர் எனவும், மாற்றூர், இலுப்பைக்குடி முதலிய ஊர்கள் உள்ள பறம்புநாட்டுப் பகுதி மக்கள் தம்நாட்டு எல்லையிலிருந்த தேவகோட்டைக்குக் கிழக்கிலிருந்த பகுதியை முத்துநாடு என்று வழங்கினர் என்றும் கொள்ளல் பொருந்தும். இப்படி வழிவழியாக வழங்கப் பெற்றதால் "பிரம்பூர் நாட்டில் மாற்றூர்" என்று மாற்றூர்க் கோயிலைச் சேர்ந்தவர்கள் இசைவுப்பிடிமானத்தில் பல நூற்றாண்டுகளாக எழுதி வருகின்றனர் என்றும் கருதுவது பொருத்தமாகும். எனவே 'சோமலெ' கருத்து ஏற்புடையதாகிறது***[63] *என இதற்கு விளக்கம் தருகிறார் மரு. பரமகுரு.*

பறம்புவயல்

இக்காலத்துப் புதுவயல் என்ற ஊருக்கும் மித்திராவயல் என்ற ஊருக்கும் இடையே பிரம்புவயல் என்றொரு சிற்றூர் உள்ளது. பறம்புவயல் என்ற பெயரே பிரம்புவயல் என மாறி இக்காலத்து வழங்கப் பெறுகிறது .

மேற்காணும் கருத்துகளின் வாயிலாக, மாற்றூர், இலுப்பைக்குடி, பறம்புவயல் ஆகிய ஊர்கள், முத்தூற்றுக் கூற்றத்தின் மேற்கு எல்லையில் உள்ள அனுமந்தக்குடி, முத்துநாடு ஆகிய ஊர்களுக்கு மேற்கே அமைந்துள்ளன என்பது அறியத்தக்கது. ஆதலால், பறம்பு நாட்டின் கிழக்கெல்லையாக பறம்புவயல்- பிரம்புவயல் இருந்தது எனலாம்.

பறம்பு நாட்டு வடவெல்லை

வள்ளல் பாரியாண்ட பறம்பு நாட்டுக்கு வடக்கிலும் வட கிழக்கிலும் அக்காலத்தில் பாரி தோன்றிய குடியினராகிய எவ்விகுடியினர் தொடர்ந்து ஆட்சி புரிந்து வந்தனர். எவ்விகுடியினர் ஆண்டு வந்த இந்நிலப்பகுதி மிழலைக் கூற்றம் என்று பெயர் பெற்றிருந்தது.

மிழலைக் கூற்றம்

**பாண்டி மண்டலத்து மிழலைக் கூற்றத்து ஒக்கூர்**[64] எனவும், **மிழலைக் கூற்றத்து மணமேற்குடி**[65] எனவும், **மிழலைக் கூற்றத்துக் கீழ்க்கூற்றுப் பொன்பற்றி** எனவும், **மிழலைக் கூற்றத்து நடுவிற் கூற்று புல்லுக்குடி**[66] எனவும் கல்வெட்டுக்களில் வரும் தொடர்கள் மிழலைக் கூற்றத்தின் இன்றைய பகுதிகளைச் சுட்டுகின்றன.

மிழலைக் கூற்றத்துப் பகுதிகள்

இக்கூற்றம் பாண்டிய மண்டலத்தில் இருந்தது என்பதும் இதில் கீழ்க்கூறு, நடுவிற்கூறு, மேற்கூறு என்று மூன்று உட்பிரிவுகள் இருந்தன என்பதும் நன்கறியக் கிடக்கின்றன. **இக்கூற்றத்திலுள்ள மணமேற்குடி, பொன்பற்றி (பொன்பேத்தி) முதலான ஊர்கள் தஞ்சாவூர் சில்லாவில்**

**அறந்தாங்கித் தாலுகாவிலும், பராந்தகநல்லூர், வாளவர் மாணிக்கம் முதலிய ஊர்கள் புதுக்கோட்டை இராச்சியத்தில் திருமெய்யம் தாலுகாவிலும் இருந்ததால், இம் மிழலைக் கூற்றம் அத்தாலுகாவிலும் இருந்தது என்பது தேற்றம்[67]** எனலாம்.

**மாணிக்கவாசகப் பெருமானை இறைவன் ஆட்கொண்டருளிய தலமாகிய திருப்பெருந்துறை மிழலைக் கூற்றதிலிருந்ததோர் ஊர் என்பது கல்வெட்டுக்களாலும்[68]** பெரும்பற்றப் புலியூர் நம்பியின் திருவிளையாடற் புராணத்தாலும் அறியப்படுகின்றது.

திருப்பெருந்துறை என்னும் அந்த ஊர் இக்காலத்தில் ஆவுடையார்கோயில் என்ற பெயரோடு வெள்ளாற்றிற்குத் தெற்கே அறந்தாங்கித் தாலுகாவில் உள்ளது. ஆகவே பொன்பற்றி (பொன்பேத்தி), மணமேற்குடி, திருப்பெருந்துறை, ஒக்கூர் (இது சிவகங்கைக்கு அருகில் உள்ள ஒக்கூரின் வேறானது) ஆகிய ஊர்களைத் தன்னகத்துக் கொண்டு முற்காலத்தில் நிலவியது மிழலைக் கூற்றம் என இதன்மூலம் அறியலாம்.

இதனை உறுதிப்படுத்துவதாக, **சோழமண்டலத்திற்குத் தென்னெல்லை யாகவுள்ள வெள்ளாற்றிற்குத் தெற்கும், திருப்புனவாசலுக்கு அண்மையில் கடலொடு கலக்கும் பாம்பாற்றிற்கு வடக்கும் பாண்டி மண்டலத்திலிருந்த ஓர் உள்நாடு என்பது தெள்ளிது" என்றும், "இம்மிழலைக் கூற்றம் புதுக்கோட்டை நாட்டில் ஒரு பகுதியையும் தஞ்சாவூர் ஜில்லா அறந்தாங்கித் தாலுகாவின் தென்பகுதியையும், இராமநாதபுரம் ஜில்லாவில் ஒரு பகுதியையும் தன்பாற் கொண்டு மேற்கூறு, நடுவிற்கூறு, கீழ்க்கூறு என்னும் முப்பிரிவுகளையுடைய பெருநாடாகப் பாண்டி மண்டலத்தின் வடபகுதியில் அமைந்திருந்தது"[69]** என்றும் கூறுவார் அறிஞர் தி.வை. சதாசிவப் பண்டாரத்தார்.

### எவ்வியின் நாடு - மிழலைக் கூற்றம்

மிழலைக் கூற்றம் சங்ககாலத்தில் வேள் எவ்வி குடியினர்க்கு உரியதாய் இருந்தது என்பது அறிந்ததே.

***யாழிசை மறுகின் நீடூர் கிழவோன்***
***வாய்வாள் எவ்வி ஏவல் மேவார்***
***நெடுமிடல் சாய்த்த பசும்பூண் பொருந்தலர்***
***அரிமண வாயில் உறத்தூர் ஆங்கண்***
***கள்ளுடைப் பெருஞ்சோற்று எல்லிமிழ்***[70]

***என்று பரணர் பாடிய இவ்வகப்பாடலில் அரிமணவாயில் என்று குறிக்கப் பெறுவது அரிமளம் என்னும் ஊர்***[71] *என்பார் ஔவை. துரைசாமிபிள்ளை. பிற்காலத்தில் உருவான கோனாட்டின் உறத்தூர்க் கூற்றம் இப்பாடல் குறிக்கும் உறத்தூரின் பெயரால் வழங்கப் பெற்றதொரு கூற்றம் எனலாம்.*

*வேள் எவ்வி குடியில் பிறந்தவன் வேள்பாரி. உறத்தூர்வேள் எவ்வி காலத்தில் மிழலைக் கூற்றத்தின் மேற்கே அமைந்திருந்தது என்பதும் முற்கூறிய சான்றுகளால் நிறுவப் பெற்றது.*

## உறத்தூரும் கோனாடும்

*அப்பகுதியில் வேள் எவ்வியின் ''ஏவல் மேவார்'' இருந்தமையால் வேள் எவ்வி குடியினனான வேள்பாரி தன் குடியினரின் ஆட்சிக்குட்பட்டிருந்தும், அடிக்கடி ஏவல் மேவாரின் தொல்லை நிகழ்ந்து கொண்டிருந்ததுமான உறத்தூர்ப் பகுதியை வேள் எவ்வியின் விருப்பத்தின் வண்ணம் தன் பறம்பு நாட்டோடு இணைத்துக் கொண்டான் என்று கருதலாம்.* **தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் வெற்றி கொண்ட போதிருந்த மிழலைக் கூற்றத்தில் இந்த உறத்தூர்ப் பகுதி, கோனாட்டில் அடங்கியிருந்ததா என்பது தெரியவில்லை; கோனாடு வேள் எவ்வி முன்னர் ஆட்சி புரிந்ததும் இருங்கோவேண்மானுக்குரியதுமாகிய *மிழலைக் கூற்றம்*[72]** *என்னும் தி.வை. சதாசிவப் பண்டாரத்தார் கருத்து இதனை உறுதி செய்வதாக அமைகிறது.*

## பறம்பூர்

*பறம்புமலைக்கு வடக்கே விராலிமலை - புதுக்கோட்டைச் சாலையில் பறம்பூர் என்னும் ஊர் உள்ளது. பறம்பூர் பறம்பு என்பதோடு*

தொடர்புடைய பெயராகும். இப்பறம்பூர், வேள்பாரி காலத்திற்குப் பின் கோனாட்டில் அடங்கியதாயிற்று.

நெற்குப்பைச் செப்பேடு ''கோனாடு பிறாமலை சூழ்ந்த பொன்னமராவதி நாட்டில்'' என்பதால் பிற்காலத்தில் பறம்புமலையும் கோனாட்டில் அடங்கியதாயிற்று என்பதையும் உறுதிப்படுத்திக் கொள்ளலாம். மேலும், பறம்புமலை- பறமலையாகி, பிராமலை எனக் காலப்போக்கில் மருவி ஒலித்திருக்கிறது. பின்னர் பிறாமலை என்பதே பிற்கால வழக்கில் பிரான்மலை என்பதாக நிலை பெற்றிருக்கலாம். இவ்வூர்க் கோயிலில் சுவாமி கோயிலின் தென்புறச் சுவரில்,

**தேனார் பொழில்சூழும் தென்பறம்பை வேளாளர்**
**கோனார் குறிஞ்சியைக் கொண்டளித்தார் - மானேய்**
**மழுவின் படையானும் மாதுமையும் போதும்**
**விழவின் படியாக விட்டு**[73]

என்றொரு சாசனப் பாடல் உள்ளது. இந்தப் பாடலில் பறம்பூர் தென்பறம்பை என்று சுட்டப்படுகின்றது. **இந்தப் பறம்பூர் வடகோனாட்டின் தென்திசையில் இருப்பதாலோ, கோனாட்டுத் தலைநகரான கொடும்பாளூருக்குத் தெற்கே இருப்பதாலோ, சோழ மண்டலத்திற்குத் தெற்கே தென்பறம்பை என அக்காலத்துக் குறிக்கப் பெற்றதாகலாம்**[74] என்று தொடர்புபடுத்துவார் மரு.பரமகுரு.

மேலும் அவர், **பறம்பூரும் குடுமியான் மலைப்பகுதியும் பறம்பு நாட்டில் இருந்தன எனத் தெளியலாம். பறம்பு நாட்டின் மேற்கெல்லையாக அமைந்துள்ள வடபறம்பு நாட்டுப் பறம்புக் கண்மாய் இருக்குமிடத்திலிருந்து கிழக்கு எல்லையாகிய பறம்புவயல் இருக்குமிடத்துக்கும் நேர்கோடு போட்டுப் பார்த்தால் பறம்பு நாட்டுப் பரப்பு ஏறத்தாழச் சம அளவில் அமைவதைக் காண முடியும்**[75] என எல்லை வரைவினையும் தெளிவுபடுத்துகிறார்.

எனவே, பறம்பு நாட்டின் வடவெல்லை பறம்பூரே என்று கொள்ளலாம். அது மட்டுமின்றிப் பறம்பு நாட்டின் தென்னெல்லை

பறம்புக்குடி, கிழக்கெல்லை பறம்பு வயல் மேற்கெல்லை பறம்புக் கண்மாய் என பறம்பு என்பதோடு தொடர்புடைய பெயர்களாய் அமைவதால் பறம்பூரை வடவெல்லையாகக் கொள்வது பொருத்தமாகும்.

ஒல்லையூர்க் கூற்றம்

பறம்புமலைக்குக் கிழக்கே ஒல்லையூர் நாடு இருந்தது என்று அறியமுடிகின்றது. அதற்குரிய சான்றுகள் பின்வருமாறு:

**ஆண்மை தோன்ற ஆடவர்க் கடந்த**
**வல்லவேற் சாத்தன் மாய்ந்த பின்றை**
**முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே**[76]

என்னும் புறநானூற்றுப் பாடலால் இந்நாடு இருந்தது அறியப்படுகின்றது. இஃது ஒரு சிறு நாடு. இது பிற்காலத்தில் ஒல்லையூர்க் கூற்றமாக இருந்தது என்று கல்வெட்டுக்களால் அறியப்படுகின்றது. **திருமயம் வட்டத்தில் உள்ள ஒளிய மங்கலம் என்ற ஊர் முற்காலத்தில் ஒல்லையூர் மங்கலம் என்ற பெயருடையதா-யிருந்தது என்பது அவ்வூரிலுள்ள வரகுணீசுவரர் கோயிற் கல்வெட்டால் தெரிகிறது. அக்கல்வெட்டு கோனாடான கடலடையா திலங்கை கொண்ட சோழவள நாட்டு ஒல்லையூர்க் கூற்றத்து ஒல்லையூர் மங்கலத்து உடையார் வரகுணீசுவரமுடைய நாயனார் கோயில்**[77] என்று கூறுகின்றது.

**எனவே ஒல்லையூர் மங்கலத்தைத் தலைநகராகக் கொண்டது ஒல்லையூர்க் கூற்றமாகும். இக்கூற்றமே சங்க நாளில் ஒல்லையூர் நாடென்று வழங்கியதாகும்**[78] என்பார் தி. வை. சதாசிவப் பண்டாரத்தார்.

**இந்த ஒல்லையூர் நாட்டுக்குரியவனான ஒல்லையூர்க் கிழான் மகன் பெருஞ்சாத்தன், வேள்பாரி காலத்திற்கு முற்பட்ட காலத்தினன்**[79] என்பது ஆய்வாளர் கருத்து. **இந்தப் பெருஞ்சாத்தனுக்குப் பின் அவன் வழியினர் எவரும் இந்த நாட்டை ஆண்டதாகத் தெரியவில்லை ஆதலால், ஒல்லையூர் நாடு பெருஞ்சாத்தனுக்குப் பிற்காலத்தவனெனக் கருதப்பெறும் வேள்பாரியின் ஆட்சிக்குட்பட்டிருந்ததெனக் கொள்ளலாம்**[80] எனக் கருதுகிறார் மரு.பரமகுரு.

முல்லை மங்கல நாடு

பறம்புமலைக்குக் கிழக்கே 4.கி.மீ தொலைவில் ஒளிய மங்கலம் உள்ளது. முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே என்ற புறநானூற்றுத் தொடரால் ஒல்லையூர் நாட்டில் முல்லை நிறைந்திருந்தது என்பதும் தெரிகிறது. முல்லைக்குத் தேரீந்த வள்ளல் பாரியின் பறம்புமலைப்பகுதி முல்லை நிறைந்த நிலப்பகுதி. இப்பகுதியே இக்காலத்தில் முல்லை மங்கலநாடு என வழங்கப்படுவதும் எண்ணத்தக்கது. எனவே, ஒல்லையூர் நாடு என முற்காலத்தில் வழங்கப்பட்ட நாடு பறம்பு நாடாக இருந்ததெனக் கருதுதற்கு மேற்காணும் சான்றுகள் துணை செய்கின்றன.

பூலாங்குறிச்சி மலை

**ஒல்லையூர்க் கூற்றத்து இடையாற்றூர்**[81] எனவும் **ஒல்லையூர்க் கூற்றத்து வேள்கூறாப் பச்செறிச்சின் மலை**[82] எனவும் காணப்பெறும் கல்வெட்டுத் தொடர்களால் திருமயம் வட்டத்தில் உள்ள இடையாற்றூரும் பச்செறிச்சின்மலையும் ஒல்லையூர் நாட்டைச் சேர்ந்தவை என்பது அறியலாகும். **பச்செறிச்சின்மலை இக்கல்வெட்டிலுள்ள பூலாங்குறிச்சி மலையே என்பர்.**[83] இடையாற்றூர் பூலாங்குறிச்சிக்கு வடக்கே ஏறத்தாழ 15.கி.மீ. தொலைவில் உள்ளது.

எனவே, **இவற்றையெல்லாம் ஒருங்கிணைத்து பூலாங்குறிச்சிமலை, இடையாற்றூர் இவற்றைத் தன்னகத்துக் கொண்டு பறம்பு நாடு விளங்கியதாகலாம்**[84] என வரையறுக்கிறார் மரு. பரமகுரு.

பூங்குன்றநாடு

திருப்புத்தூர்க் கல்வெட்டு, பிராய்மலைச் சீர்மையில் பூங்குன்ற நாட்டில்' என்று குறிக்கின்றது. புதுக்கோட்டை நாட்டுச் சாசனம் எண்: 558, ''பூங்குன்ற நாட்டுப் பூங்குன்றமும்'' என்று குறிக்கிறது. எனவே, பூங்குன்ற நாட்டின் தலைநகர் பூங்குன்றம் எனத் தெரிகிறது. இந்நாளில் மகிபாலன்பட்டி என வழங்கும் ஊரே பூங்குன்றம் என்றும், சங்ககாலப்

புலவரான கணியன்பூங்குன்றனார் இவ்வூரைச் சேர்ந்தவர் என்றும் அறிஞர் கூறுவர். **இந்தப் பூங்குன்ற நாடு இந்நாளில் $24.^{1/2}$ கிராமங்களைக் கொண்டுள்ளது. 13 ஆம் நூற்றாண்டுத் திருப்புத்தூர்க் கல்வெட்டில் "பூங்குன்ற நாட்டு நங்காணிப்பற்றாய்'' என்று குறிப்பதால் 12 அல்லது 13 ஆம் நூற்றாண்டில் பிரான்மலைச் சீமையகத்து உருவானதொரு நாடு பூங்குன்ற நாடெனக் கருதலாம்**[85] என்பார் அறிஞர்.

சங்ககாலத்தில் பூங்குன்றம் எனும் ஊர் இருந்திருக்கலாம். **"பிராய் மலைச் சீர்மையில் பூங்குன்ற நாட்டில்''** எனும் மேலே காட்டிய கல்வெட்டுத் தொடர் இதனை உணர்த்துவதாகும். ஆக 24.5 கிராமங்கள் அடங்கிய இற்றைநாள் பூங்குன்ற நாடு முழுவதும் பறம்பு நாடாக விளங்கியிருக்க வேண்டும் என்பது மேற்காணும் சான்றுகளின் மூலம் உறுதியாகிறது.

## கோனாபட்டு

பூலாங்குறிச்சிக்குக் கிழக்கேயுள்ள திருக்கோளக்குடி, பூங்குன்ற நாட்டுக் கிராமங்களுள் ஒன்று; இது பூங்குன்ற நாட்டின் வடவெல்லையில் உள்ளது. திருக்கோளக்குடிக்குத் தென்கிழக்கே ஏறக்குறைய 20 கி.மீ. தொலைவில் கோனாபட்டு என்ற ஊர் உள்ளது. கோனாட்டுப் பற்று என்பது நாளடைவில் கோனாபட்டு என மாறியிருக்கலாம் எனவும், இவ்வூர் கோனாட்டைச் சேர்ந்த ஊர் எனவும் ஊகிக்கலாம். கோனாபட்டுக்குக் கிழக்கே கானாடுகாத்தான் என்று ஓர் ஊர் உள்ளது. மிழலைக் கூற்றமே கானாடாகியது என்பார் நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார். எனவே, கானாடுகாத்தான் மிழலைக் கூற்றத்தைச் சேர்ந்தது எனக் கொள்ளலாம். மிழலைக் கூற்றத்து அரிமண வாயில் என்னும் அரிமணம் கானாடுகாத்தானுக்குக் கிழக்கே அமைந்துள்ளதால் இது உறுதிப்படும். இவ்வூர்களைத் தொடர்புபடுத்திச் சிந்தித்தால் கோனாபட்டு, கானாடுகாத்தான் ஆகிய ஊர்களுக்குத் தென்பகுதியில் பறம்புநாடு இருந்தது என்று கருதுதல் பொருத்தமானதாகும்.

ஆக, வடக்கே பறம்பூர் - குடுமியான் மலைப்புறம், இடையாற்றூர், பூலாங்குறிச்சி, திருக்கோளக்குடி ஆகியவற்றைத் தன்னகத்துக் கொண்டு,

கோனாபட்டு, கானாடுகாத்தான் ஆகிய ஊர்களுக்குத் தென்பால் அமைந்தது பறம்பு நாட்டின் வடவெல்லை என்று மேற்கண்ட கருத்துகளின் மூலமாக உறுதி செய்யலாம்.

பறம்புநாட்டின் மேற்கெல்லை:

இரணிய முட்டம்

பத்துப்பாட்டுள் ஒன்றாகிய மலைபடுகடாம் என்னும் கூத்தராற்றுப் படையை இயற்றியவர் இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் என்னும் புலவர்பெருமான். இவர் இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர் என்னும் ஊரினர் என்பர். **மதுரைக்கு ஆறுகல் தொலைவிலுள்ள யானைமலைப் பகுதி, அழகர் மலைப்பகுதி இவ்விரண்டிற்கும் இடைப்பட்ட நிலப்பகுதி இரணிய முட்டம் எனப் பெயர் பெற்றது.** (630 of 190, 5276, 282 of 1929 - 30) **இதனைப் பத்துப்பாட்டும் உறுதி செய்கிறது. அப்பகுதியில் பெருங்குன்றுகளும் சிறுகுன்றுகளும் இருப்பதை இன்னும் காணலாம்.**[86]

யானைமலையே இரணிய முட்டம்

**அழகர் கோவில் கல்வெட்டுக்கள் பாண்டியர், விசயநகர வேந்தர் காலத்தன. அவை கீழ் இரணிய முட்டத்துத் திருமாலிருஞ் சோலை**[87] என்று குறிக்கின்றன. (276 of 1929- 30, 4 of 1931- 32) **இரணிய முட்டம் என்பது மதுரையை அடுத்த யானை மலை, அழகர் மலைப்பகுதிகளைத் தன்னகத்தே கொண்ட நாடு என்பது அறியப்படுகிறது.** (65,630 of1905, 4 of 1931 - 32, 272, 276, 282 of 1929 - 30) **இரணிய முட்ட நாடு நத்தம் மலைகளைத் தன்னகத்தே கொண்டது**[88] என்பது அறிஞர் மா.இராசமாணிக்கனார் கருத்து.

கீழிரணிய முட்டம்

மேலும், **யானைமலையில் உள்ள நரசிங்கப் பெருமாள் கோயிலில் முதற்பராந்தக சோழனின் முப்பத்துமூன்றாம் ஆண்டுக் (கி.பி 939) கல்வெட்டில் "கீழிரணிய முட்டத்துப்படும் பிரமதேயம் நரசிங்க மங்கலத்து**

***சவையெலாம்***"[89] என்று காணப்பெறுகிறது. இக்கல்வெட்டால் நரசிங்க மங்கலம் என்பதும் இரணிய முட்ட நாட்டகத்தது என்றறியப்படும். மேலூருக்கும் மேற்கே மதுரைச் சாலையில் நரசிங்கம்பட்டி என்று ஓர் ஊர் உள்ளது. இந்த நரசிங்கம்பட்டி கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ள நரசிங்க மங்கலம் என்பதோடு தொடர்புடைய பெயராக உள்ளது. ஆதலால், இந்த நரசிங்கம்பட்டி வரை கீழிரணிய முட்ட நாடு இருந்தது என்றும் நரசிங்கம்பட்டிக்குக் கிழக்கே பறம்புநாடு இருந்தது என்றும் அறியலாம்.

பறம்புக் கண்மாய்

மதுரை மாவட்டம் மேலூருக்கருகில் உள்ள மேலவளவு என்னும் ஊருக்கு மேற்கேயுள்ள சோமகிரிமலை, முறிமலை என்ற இருமலைகளுக்கிடையே பெரிய கரையுடைய பறம்புக் கண்மாய் இருக்கிறது.

***குவகுதி ஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள் சோணாடு***
***கொண்டருளிய ஸ்ரீ சுந்தர பாண்டிய தேவர்கயா***
***........... தின் எதிராமாண்டு அழகர் திரு விடை***
***............. ம் வரபரப்பு நாட்டு பறம்பான திருநாராயண***
***............... ங்கலத்து குளம் கரையும் வளர்ந்து வயல் நீர்க்***
***கு ஈடுபடாமற் பாறைமேலே நீரும் ஏறக்கண்டு கரைகு***
***.......... யாமற் கல்லும் படுப்பித்து கலிங்கும் நாட்டுவி***
***............ கோவூருடைய ஆள்வான் ச***
***க்கரக்கையான் குவகுதி ஸ்ரீ***[90]

என அமையும் இப்பறம்புக் கண்மாய் கல்வெட்டுகள் (கி.பி 1216 - 1239) பாசனஏரி அமைப்பதையும் நிர்வகிப்பதையும் பற்றித் தெரிவிக்கும் முக்கியக் கல்வெட்டுகளாகும். இங்குள்ள சோனாடு கொண்டருளிய சுந்தரபாண்டியன் கல்வெட்டு ***தென்பறம்பு நாட்டுப் பறம்பான திருநாராயண மங்கலத்துக் குளத்தின் கரையினை ஆள்வான் சக்கரக்கையன் என்பவன் உயர்த்தியதையும் அவன் உள்வாய்ப் பகுதியில் கரைகுலையாமல் (அழியாமல்) கருங்கற்கள் பதிந்து கலிங்கு அமைத்ததையும் தெரிவிக்கிறது.***[91]

வடபறம்பு நாட்டுப் பறம்பு என்று இக்கல்வெட்டுக் குறிப்பதன்மூலம் பறம்புமலையையே தலைமையிடமாகக் கொண்டு வள்ளல் பாரி ஆட்சி செய்தான் என்பதைச் சங்ககாலப் பாடல்கள் பலவும் எடுத்தியம்புவதோடு இணைத்து நிறுவுதற்கு ஏதுவாகும்.

**மேற்காணும் சான்றுகளின் அடிப்படையில் வடபறம்பு நாட்டின் தென்பகுதியைப் பிரித்துக் காட்டவே என்பதே சரியான முடிவாக இருத்தல் கூடும்**[92] எனப் பறம்புநாட்டின் இருபெரும் பகுப்பினை நிறுவிக் காட்டுகிறார் மரு. பரமகுரு.

பறம்பு நாட்டின் தென்மேற்கு எல்லையில் தென் பறம்பு நாட்டுத் திருமோகூரும், திருவாதவூரும், நல்லணி ஆமூரும் இவற்றுக்கு நேர்வடக்கே வடபறம்பு நாட்டுப் பறம்புக் கண்மாயும் இருப்பதைத் தொடர்புபடுத்திப் பார்த்தால் இப்பறம்புக் கண்மாய் பறம்பு நாட்டின் மேற்கெல்லையாக அமைந்திருந்தது என்பது தெளிவாகும்.

பிரமநாடு

இந்தப் பறம்புக் கண்மாய்க்கும் வடக்கேயுள்ளது கொட்டாம்பட்டி. **இப்பக்கத்துக் கொட்டாம்பட்டி மலைப் பகுதியைச் சேர்ந்த கூற்றம் பிரமநாடு என்ற பெயரான் இன்றும் வழங்குகின்றது. ஈண்டுக் கூறிய புறமலை நாட்டைப் பறமலை நாடு என்பதன் மரூஉவாகவும், பிரமநாடு என்பதைப் பறம்பு நாடு என்பதன் திரிபாகவும் கோடல் பொருந்தும்**[93] என்று குறிப்பிடுவர். ஆதலால், பறம்புக் கண்மாய்க்கும் வடக்கேயுள்ள கொட்டாம்பட்டிப் பகுதியும் பறம்பு நாடாக இருந்தது என்பது இதன்மூலம் தெளிவாகிறது.

இதுகாறும் கூறியவாற்றால் பறம்புநாட்டின் மேற்கெல்லை திருமோகூர், நரசிங்கம்பட்டி, பறம்புக் கண்மாய் என்று அமைந்து அழகர் மலையின் அடிவாரத்தையொட்டி நீண்டு வடக்கே நத்தம் மலைகளுக்குக் கிழக்குப் பகுதியை எல்லையாகக் கொண்டு, துவரங்குறிச்சி, மருங்காபுரிப் பகுதிகளைத் தன்னகத்துக் கொண்டு வடக்கே பறம்பூர் வரை இருந்தது எனக் கொள்வது பொருத்தமான கருத்தாக அமைகிறது.

*இதுவரை, பாரி வாழ்ந்திருந்த இடம், காலம், நாடு, நாட்டு எல்லை ஆகியன பற்றிய செய்திகள் தொகுத்தும் வகுத்தும் உரைக்கப்பட்டன. இனி, பாரியின் காலப் பறம்புமலை பற்றிய செய்திகள் தொகுக்கப்படுகின்றன.*

## பறம்புமலை: கலைஞர்களின் மகிழ்விடம்

*சங்ககாலத்தில் தமிழ் வளர்த்த புலவர்களையும், கலை வளர்த்த கலைஞர்களையும் ஆதரித்தவர்கள் மூவேந்தர்களை விடவும் வள்ளல்களே ஆவர். இதனை,*

**சேர, சோழ, பாண்டிய வம்ச வழிவந்த முடியுடை மூவேந்தர்களிடையே தமிழகம் பிரிக்கப்பட்டிருந்தது. சிற்றரசர்கள் பலர் அரசியல் நிலைமைகளுக்கேற்றவாறு மூவேந்தர்களுள் ஒருவரின் ஆணையை ஏற்றும், ஒருவருடன் சேர்ந்து மற்றவரை எதிர்த்தும் வந்தனர். தனித்துச் சுதந்திரமாக இயங்கிய சிற்றரசுகளும் இருந்தன. இவ்வாறு சுயேச்சையாக இயங்கிய எழு சிற்றரசர்களைப் பாராட்டிப் புலவர்கள் பாடியுள்ளனர். இச்சிற்றரசர்கள் இலக்கியத்தையும் கலைகளையும் வளர்க்கத் தமது செல்வத்தை வாரி வழங்கியதால் வள்ளல்கள் எனப் பாராட்டப்பட்டனர்**[94]

*என்னும் கூற்றின்மூலம் அறியலாம்.*

*சங்ககாலப் பேரரசரும் சிற்றரசரும் இசையில் வல்ல பாணரையும் பாடினியரையும், கூத்தில் வல்ல கூத்தரையும் விறலியரையும் நன்கு ஆதரித்தனர் என்பதைச் சங்க நூல்களால் அறியலாம்.*

## அரசவையில் முன்னுரிமை

*அரசனுடைய அவையில் பலரும் இருந்தபோதும் அங்கு புலவர்க்கும் ஏனைய கலைஞர்களுக்கும் முன்னுரிமை தரப்பெற்றது. இதனை,*

**பழந்தமிழ் மன்னர்கள் உண்டு உடுத்து வாழ்வதையே தங்கள் குறிக்கோளாகக் கொள்ளவில்லை. அவர்களுடைய இடம் அரசவையாகும். பழந்தமிழ் மன்னர்கள் அலங்கரித்த அவைகள் பல பெயர்களால் வழங்கப் பெற்றன. ஓலக்கம், நாளோலக்கம், பெருநாளவை என்ற பெயர்களால்**

**அவ்வவைகள் குறிக்கப் பெற்றன. அரசர்கள், அமைச்சர், ஐம்பெருங்குழு, எண்பேராயம், பிறநாட்டுத் தூதுவர் முதலியவர்களால் சூழப்பட்டிருப்பார்கள். அவ்வவைகளில் பரிசிலர் இனம் மட்டுமே அவ்வோலக்கத்தின்கண் ஆணை இன்றியும் நுழைதல் கூடும்**[95] *என்னும் கருத்துப் பரிசிலர்க்கு உண்டான மதிப்பை எடுத்துரைப்பதாக அமைகிறது.*

*மேலும் மற்றவர்களுக்கு மறுக்கப் பெறும் நுழைவு பரிசிலர்களாகிய கலைஞர்களுக்கு மட்டும் கிடைத்தல் என்பது அவர்தம் பெருமையையும் முக்கியத்துவத்தையும் எடுத்துக்காட்டுவதாக அமைகிறது.*

*பழந்தமிழ் மன்னர்களுடைய நாளோலக்கத்தை நாம் இன்றும் அறிய வாய்ப்பைத் தந்தது,* **அவர்கள் பரிசிலர்களையும் இவ்வோலக்கத்தில் அனுமதித்ததேயாகும். ஏனையோர் பலநாள் காத்திருந்தும் அரசனுடைய செவ்வி கிடைக்கப் பெறாமல் மனம் மறுகி இருக்கவும், பரிசிலர் மட்டும் யாதொரு விதமான தடையும் இன்றி உட்புகுதல் எத்தகைய செயல்? தமிழ் மன்னர்களுடைய மனநிலையை எடுத்துக்காட்ட இதைவிடச் சிறந்த செயல் வேறு யாது வேண்டும்?**[96] *என்பார் அ.ச.ஞானசம்பந்தன்.*

புகழைப் போற்றியவர்கள்

*சங்ககாலம் முழுமையும் போர் குறித்த எண்ணங்களே மிகுந்திருந்த காலத்தில் மூவேந்தர்களும் அதிலேயே முனைப்புற்றிருந்த வேளையில் அதற்கு மாற்றாக புகழைக் குறித்த எண்ணங்களைப் பரப்பியவர்கள் சிற்றரசர்களே ஆவர். இதனை,*

**போர் செய்தலையே தம் வாணாளின் குறிக்கோளாகக் கொண்ட இம்மன்னர்கள் புகழடைவதற்கு மேற்கொண்ட வழி சற்று விந்தையானதே. இதனைக் காட்டிலும் வேறு வழியில் வாழ்வதால் நல்லதொரு புகழை அடைய முடியும் என இவர்கள் ஏனோ நினைக்கவில்லை. ஆனால், இப்பேரரசர்கள் வாழ்ந்த அதே காலத்தில் சில சிற்றரசர்களும் வாழ்ந்துள்ளனர். அவர்கள் வாழ்க்கையில் மேற்கொண்ட குறிக்கோள் முற்றிலும் வேறானதாகக் காணப்படுகிறது. கடைஏழு வள்ளல்களைப் பற்றியும் இப்புறப்பாடல்**

**முதலியன பேசுகின்றன. புகழ் என்ற ஒன்றை அடைய முற்றிலும் வேறுபட்ட இருவழிகளைக் கையாண்டுள்ளனர்**[97] என்னும் கூற்றின் மூலம் உணரலாம்.

பரிசிலர்கள் வகை

*வள்ளல்களிடம் வந்து பரிசில் பெறுவோர்களின் வகைகளையும் அவர்களின் நிலையையும் விளக்கும் முகமாக,*

**கொடுக்கும் வள்ளல்களிடம் இசையிலே வல்ல பாணர்கள் வந்து இசைபாடிப் பரிசு பெறுவார்கள். கூத்தர்கள் அணுகிக் கூத்தாடி மகிழ்வித்துப் பல பொருள்களைப் பெறுவார்கள். பாட்டுப் பாடியும் ஆடியும் தங்களுடைய கலைத்திறமையைக் காட்டும் பெண்களாகிய விறலியர்களும் பரிசு பெறுவதுண்டு. தடாரி என்ற தோல் கருவியை வாசித்துப் பரிசு பெறும் பொருநர் என்ற கலைஞர்களும் உண்டு. இவர்களையன்றி வறுமையால் வருந்துவோரும் பிணியால் துன்புறுவோரும் கண், காது இல்லாமையால் உழைத்து வாழ முடியாதவர்களும் வேண்டியவற்றைப் பெற்றுச் செல்வார்கள். புலவர்கள் பாடிப் பரிசில் பெறுவார்கள். இத்தனை பேர்களுக்கும் பண்டமும் பொருளும் தந்து அவர்கள் துன்பத்தைப் போக்கும் உயர்ந்த பண்பை வள்ளல்களிடம் காணலாம்**[98] *என்னும் கூற்று இங்கு நோக்கத்தக்கது.*

புலவர்களும் பாடல்களும்

*வள்ளல்களிடமிருந்து புலவர்கள் பெற்றதைப் போல வள்ளல்களைப் பற்றிப் புலவர்கள் பாடிய பாடல்கள் அவர்கள் அளித்த கொடையாக இன்றும் நின்று நிலவுகின்றன என்பதை,*

**பிறர்க்கு அளிப்பதிலே இன்பங் கண்ட பெருமக்களை உலகம் என்றும் எண்ணி வாழ்த்தும்படி செய்தார்கள் புலவர்கள். வள்ளல்களிடம் நலம் பெற்றவர்கள் பல வகையினராக இருந்தாலும், மற்றவர்கள் யாவரும் தம்முடைய வாழ்த்தையும் நன்றியறிவையும் சிலகாலம் சிலர் காதில் போட்டிருப்பார்கள். புலவர்களோ வள்ளல்களின் சிறப்பையும் அவர்கள் செயல்களையும் விரிவாகப் பல செய்யுட்களில் அமைத்துப் பாராட்டினார்கள்.**

***அதனால் அந்த வள்ளல்கள் மறைந்தாலும், அவர்களால் பெற்ற மக்கள் மறைந்தாலும், அவர்கள் பெற்ற பொருள்கள் அழிந்தாலும் வள்ளல்களின் புகழ் மாய்வதில்லை. புலவர்களுக்கு ஈந்த ஈகை வள்ளல்களின் பெயரை மங்காமல் வைத்திருக்கிறது. அவர்களின் வரலாற்றைப் புலப்படுத்தும் பாடல்கள் இலக்கியமாக வழங்கி வருகின்றன[99]*** *என்னும் கருத்தின் மூலம் உணர முடிகிறது.*

பெருங்கொடையன் வேள்பாரி

*இவ்வள்ளல் வரிசையிலே முதலில் நின்றவன் வேள்பாரியாவான். சங்க இலக்கியத்தின் மிகப்பெரும் புலவராகிய கபிலர் வேறு யாரையும் தலைவனாக ஏற்காது பாரியைத் தலைவனாக ஏற்றுக் கொண்டதன் மூலம் இதனை உணர்ந்துகொள்ள முடியும்.*

*கபிலர் வாக்கினாலேயே பாரியின் கொடைப் பெருமையை விரிய அறிந்துகொள்ள முடிவதைப் போல, பறம்பு நாடு கலைஞர்களின் மகிழ்விடமாகத் திகழ்ந்தது என்பதையும் உணர்ந்துகொள்ள முடிகிறது.*

ஆற்றுப்படை

***வள்ளல்களால் ஆதரிக்கப் பெற்ற புலவர், பாணர், கூத்தர், பொருநர், விறலியர் என்னுமிவர்கள், தங்களை ஆதரித்த பெருவள்ளல்கள்பால் தாங்கள் பெற்ற பெருஞ்செல்வத்தைத் தங்களைப் போன்ற ஏனைப் பரிசிலர்களும் பெற்று மகிழும்படி அவ்வள்ளல்களிடம் வழி கூறி அனுப்புவார்கள். இப்படி வழிகூறி அனுப்பும் முறை “ஆற்றுப்படை” என வழங்கப்பெறும்.[100]***

*கபிலர் ஒருகால் வறுமையால் வாடி வதங்கும் விறலி யொருத்தியைக் கண்டு அவளை வேள்பாரியிடம் சென்று அவனைப் பாடித் தனக்கு வேண்டுவன பெற்றுக்கொள்கவென இப்பாட்டின்கண் அவளை ஆற்றுப்படுத்தியுள்ளார்.*

***சேயிழை பெறுகுவை வாணுதல் விறலி***
***தடவுவாய்க் கலித்த மாயிதழ்க் குவளை***
***வண்டுபடு புதுமலர்த் தண்சிதர் கலாவப்***

***பெய்யினும் பெய்யா தாயினு மருவி***
***கொள்ளுழு வியன்புலத் துழைகா லாக***
***மால்புடை நெடுவரைக் கோடுதோ றிழிதரும்***
***நீரினு மினிய சாயற்***
***பாரி வேள்பாற் பாடினை செலினே***[101]

*என விறலியாற்றுப்படையாக அமையும் கபிலரின் இப்பாடல் பறம்புநாடு கலைஞர்களுக்கு வேண்டுவன அளிக்கும் பெருமையும் வளமையும் உடையது என்பதைத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது. இங்கு குறிப்பிடப்படும் நெடுவரைக்கோடு என்பது பறம்புமலையாகும்.*

### பேதமறியாது தருபவன் பாரி

மேலும், **வேள் பாரி தன்னை நாடி வருவோர் அறிவாலும் குணஞ் செயல்களாலும் மிகத் தாழ்ந்தோராயினும் அவர்பாலும் அருள் புரிந்து அவர் வேண்டுவன நல்கிப் புரக்கும் கைவண்மையுடையவன்**[102] *என்பதை, கடவுளோடு உவமைப்படுத்திக் கபிலர் பாடுகிறார்.*

### மாரியையொத்தவன் பாரி

*பாரியின் வள்ளன்மையை அடைந்தவர்கள் கலைஞர்கள் மட்டுமல்லர். உலக உயிர்களே அவனிடம் பெற்றன என்பதை,* **“நாட்டிற் புலவர் பலரும் ‘பாரி, பாரி’ யெனப் பாரி யொருவனையே புகழ்கின்றனர்; இவ்வுலகு-யிர்களைப் புரத்தற்கண் பாரி யொருவனேயன்றி மாரியும் உண்டே; இஃதென்ன வியப்பு”**[103] *எனவும் வியந்து கூறியுள்ளார்.*

### தன்னையும் தருவான்

*யாவற்றுக்கும் மேலாக, தன்னையே தருபவன் பாரி எனவும், ஏற்கெனவே பறம்பினைப் பாடியோருக்கு வழங்கிவிட்டதையும்,* **“பாரிக்குரிய பறம்பு அவனைப் பாடி வருவார்க்குக் கூறுகூறாகப் பகுத்துக்கொடுக்கப்பட்டமையின் அவர்களுடையதாயிற்று; இனி, வருவோர் ‘பறம்பில்லையாயின், நீயே வேண்டுமென்பராயின், தான் விரும்பும்**

***கொடையறத்தை மேற்கொண்டு அவர்வழி நிற்கலுறுவன்; அவர் ஏவல்வழி நிற்றலை வெறுத்து வாரேன் என்று நினைத்தலும் சொல்லுதலும் செய்யான்”***[104] *என்று வற்புறுத்தியுள்ளார்.*

***பாரியும் பரிசில ரிரப்பின்***
***வாரே னென்னா னவர்வரை யன்னே***[105]

*என்னும் பாடல் அடிகள் இதனை உறுதிப்படுத்துகின்றன. இதேபோலும் கருத்தினைப் பறம்பினை முற்றுகையிட்டுப் பாரியைக் கொல்ல எண்ணிய மூவேந்தர்களையும் பார்த்துக் கபிலர் குறிப்பிடுகிறார். பறம்பினை அடையும் வழியாகக் கூறப்படும் அப்பாடல் கருத்தும் பறம்புமலை, கலைஞர்களுக்கு உரிய இடமாகவே அறிமுகப்படுத்தப்பெறுகிறது.*

*இக்கருத்துகளைப் பின்பற்றியே பாரியைப் பற்றிய பதிவுகளையும் பறம்பின் இயல்பினையும் பின்னாளில் எழுதிய அறிஞர்கள் சுட்டிச் செல்கின்றனர்.*

## வீரத்திலும் ஈரத்தில் சிறந்தவன் பாரி

*பாரி வீரத்தை விடவும் கொடைத்திறத்திலேயே மிகச்சிறந்தவன் என்பதை,* **பாரிவேள் வீரத்திலே சிறந்தவன்; பண்பிலே நிறைந்தவன்; தமிழ்ப் பாவின் நயம் தேர்வதில் பெரியவன்; எல்லாவற்றிற்கும் மேலாகக் கொடையிலே இணையற்றவன்; பாரி என்றவுடன் முதலில் அவனுடைய ஆட்சி நினைவுக்கு வருவதில்லை; அவன் வீரம் நினைவுக்கு வருவதில்லை; அவனுடைய வள்ளன்மையே மக்களின் உள்ளத்திலே தோன்றியது**[106] *என்னும் குறிப்பின் மூலம் உணரலாம்.*

## பரிசிலரின் களிப்பு

*இனிமையுடைய அவன்தன் நட்பினைப் பெறுவதற்குக் கலைஞர்கள் ஆர்வமுற்றிருந்தனர் என்பதையும் இலக்கியவழியான சான்றுகள் எடுத்துரைக்கின்றன.*

**எத்தனையோ புலவர்கள் அவனிடம் வந்து வந்து அவனுடைய உபசாரத்தையும் விருந்தையும் பெற்று அளவளாவினார்கள்; அவனுடன் இருந்து தமிழ் நூல்களின் நயத்தை நுகர்ந்தார்கள்; அவனுடைய சிறப்பைப் புதிய பாடல்களால் பாடினார்கள்; விடைபெற்றுச் செல்லும்போது மனநிறைவையும், உவகையையும், நன்றியறிவையும் பலவகைப் பரி-சில்களையும் தாங்கிச் சென்றார்கள். புலவர்க்கு அவன் உணவு தருவான்; உடை தருவான்; பொருள் தருவான்; ஓர் ஊர் முழுவதையும் புலவர்க்கு அளித்து அதில் வருகின்ற வருவாயை நுகரும்படி செய்வான். யாரேனும் புதிய புலவர் ஒருவருடைய பழக்கம் அவனுக்குக் கிடைத்தால் அதைப் பெரும் பேறாகக் கருதி இன்புற்றான். ஏதோ புதிய நாட்டைப் பெற்றவனைப் போன்ற களிப்பை அடைந்தான்**[107] *என்று பாரியின் புரக்கும் அருள் உள்ளத்தை எடுத்துக்காட்டும் பதிவு இங்கு நோக்கத்தக்கது.*

பெருவள்ளல் பாரி

*வறுமையும் புலமையும் இணைந்தே இருப்பதாகச் சங்க இலக்கிய காலம் சுட்டப்பெறுகிறது.* **ஆனால் பாரியின் காலத்திலோ, அவனைப் பாடிய புலவர்களின் பாட்டிலோ அது காணப் பெறவேயில்லை என்பதை, பாணனுடைய யாழிசையும், விறலியின் ஆடலும், பாடலும், வயிரியருடைய கூத்தும் புலவர்களின் கவிகளும், தமிழ்நாட்டைக் கலைவளம் சிறந்த கருவூலமாக்கின. பசிநீங்கச் சமைத்து உண்ணும் சோறு நிறைய இருந்தது**[108] *என்னும் கருத்தால் உறுதிப்படுத்தலாம்.*

பாரியின் உள்ளம்

*பறம்பு தந்த வளத்தால் பாரி மூவேந்தர் எவருக்கும் ஆதரவு நல்காது தானே சுதந்திர வாழ்வினைத் தேர்ந்தெடுத்துக் கொண்டான். இதனால் அவன் இயற்கையோடு இயைந்த கவலையற்ற வாழ்வினை வாழ்ந்தான். இதனால் அவனது உள்ளத்தைப் போலவே பறம்புமலை கலைஞர்களின் மகிழ்விடமாகத் திகழ்ந்தது என்பதை,*

**பாரி, தங்கு தடையற்ற அருஞ்செயல் வேட்டத்தில் முளைந்த வீரமறவன். அதேசமயம் கவலையற்ற இன்ப வாழ்வினன். தூய உள்ளமும் வள்ளன்மையும் உடையவன். கவிதையில் அவன் ஆர்வம் பெரிதாயிருந்தது. நாடோடியாக வந்த ஒவ்வொரு பாணனும் அவன் அரண்மனையில் அன்புடன் ஆதரவு பெற்று விருந்தளிக்கப் பெற்றான்**[109] என்ற கூற்றின் மூலம் அறியலாம்.

புலவர்களுக்குப் பாரி சிறந்ததொரு கருவூமாக விளங்கியதைப் போலவே பறம்புமலையும் அக்காலத்து விளங்கிற்று என்பதை இதன்மூலம் உணர முடிகிறது.

பறம்புமலையின் வளம்

தமிழ் மரபு ஐவகை நிலங்களை அடிப்படையாகக் கொண்டு அமைகிறது. அவற்றுள் முதலாவதாகத் திகழ்வது குறிஞ்சி ஆகும்.

இம்மரபை அடியொற்றியே அகனைந்திணைகளும் எழுகின்றன. குறிஞ்சி எனும் நிலவகை மலையும் மலைசார்ந்த இடங்களை உடையதாகும்.

**உலகின் பிற பகுதிகளில் வாழ்ந்த மக்கள் கூடி வாழும் நாகரிகத்தைக் கூட அடையாத அந்தப் பழைய காலத்திலேயே இத்தமிழர் நாகரிகத்தில் முதிர்ந்திருந்தனர். அப்பகுதிகளில் உள்ளவர்கள் தனித்து வாழ்ந்து வேட்டையாடி உயிர் வாழும் சமுதாய வாழ்வின் அடிப்படையான நாகரிகத்தை அடைந்து விட்டனர். பழைய காலத்திலேயே இத்தமிழினம் நாடாளும் நாகரிகம் பெற்றுவிட்டது என்பதை உறுதியாகக் கூறலாம்**[110] என்பர் அறிஞர்.

இதனால் வரலாற்றுக்கு முந்தைய காலத்திலேயே நாகரிகம் உயர்ந்து நின்றதும், நாகரிகத்தின் வெளிப்பாடாகிய செவ்வியல் இலக்கியங்கள் எழுந்ததும், அவை வரலாற்றையும் நாகரிகத்தையும் ஒருங்கு சுட்டி எழுந்தன என்பதையும் உணர்ந்து கொள்ள முடியும்.

அவ்வகையில் காலத்தால் புகழ்பெற்றதும் இலக்கியங்களால் பாடப்பெற்றதுமாகிய பறம்புமலை பற்றிய இலக்கியச் சான்றுகளை எடுத்துரைப்பதாக இப்பகுதி அமைகிறது.

மலையும் வள்ளல்களும் புலவர்களும்

மலை தொடர்பான நாற்பதுக்கும் மேற்பட்ட சொற்கள் சங்க இலக்கியங்களில் உள்ளன. குறிஞ்சித்திணைப் பாடல்களில் இவை காணப்படுவதால் ***புவியியல், மலையியல் என்பன போன்று குறிஞ்சியியல் என்றே நாம் தனியியல் கண்டு பல கலைச்சொற்களைப் புதுப்பிக்க இயலும். சங்கச் சொற்களுக்கு இணையான ஆங்கிலச் சொற்களையோ பிறமொழிச்சொற்களையோ நாம் காண இயலாது. சான்றாக எதிரொலிக்கும் மலையைச் சிலம்பு என்றனர்***[111] என்ற கருத்து குறிஞ்சி நிலத்தனித்தன்மையைக் காட்டுவதாகும்.

குறிஞ்சியியல் என்ற நிலையில், ஒரு மலை, அதன் தலைவன், அவர்க்கொரு புலவர் என்னும் வரிசை சங்ககாலத்தில் பின்பற்றப்பட்டிருப்பதை,

***பாரிக்குக் கபிலரும், ஆய்க்கு ஏணிச்சேரி முடமோசியாரும், பேகனுக்குப் பரணர் முதற்சிலரும், அதிகற்கு ஔவையாரும், காரிக்கு வடமவண்ணக்கன் பேரிசாத்தனார், நப்பசலையார் முதலியோரும், ஓரிக்கும், நள்ளிக்கும், வன்பரணரும் நண்பினரென்பது அவரவர் பாடல்களாற் துணியப்படுவது. இப்புலவர் இவ்வெழுவர்க்கும் தனித்தனி மலையுடைமை கூறுவது நினையத்தகும். பாரிக்குப் பறம்புமலையும் (புறம்-109) ஆய்க்குப் பொதியில் மலையும் (புறம்-128) பேகனுக்குப் பொதினி மலையும் (அகம்-1), அதிநற்குக் குதிரை மலையும் (அகம்-158), காரிக்கு முள்ளூர் மலையும் (அகம்-123), ஓரிக்குக் கொல்லி மலையும் (அகம்-152), நல்லிக்குத் தோட்டி மலையும் (அகம்-150) உரிய வெற்புகளாகும்***[112] என்னும் கருத்தினால் அறியலாம்.

பறம்புமலை

***பறம்பு என்னும் பெயர்ச்சொல்லுக்கு, மலை*** hill, mountain ***என்று பிங்கல நிகண்டு விளக்கம் தருகிறது. மேலும், புறநானூற்றுப் பாடல்களின்***

***வழி இது பாரியின் மலை எனவும்*** a mountain beloging to the chief pāri, ***பாரியின் நாட்டுக்கும்*** the country of the chief pāri ***பறம்பு என்றே பெயராகும் எனவும் அகராதிகள் குறிப்பிடுகின்றன. பறம்பு என்னும் தனிச்சொல்லுக்குப் பெண் முலை*** (woman's breast) ***என்றும் பிங்கல நிகண்டு விளக்கம் தருகிறது.***[113]

கடையெழு வள்ளல்களுள் ஒருவனாகிய பாரிவேள் ஆண்ட நாடு பறம்பு நாடு ஆகும். பறம்பு நாடு பறம்புமலையைத் தலைமையாகக் கொண்டு விளங்கியது. இது இலக்கியங்களில் **மலை, குன்றம், குன்று** என்னும் பொதுப் பெயர்களிலும், **பறம்புமலை, பறம்புக்குன்று, திணிநெடுங்குன்றம்** எனச் சிறப்புப் பெயர்களிலும் குறிக்கப் பெற்றுள்ளது.

பறம்புமலையைத் தலைமையிடமாகக் கொண்டு பாரியால் ஆளப்பட்ட பறம்பு நாடு முந்நூறு ஊர்களை உடையதாக விளங்கியது. சங்ககாலத்தில் இம்மலை **பறம்பு** என்றும் **பறம்புமலை** என்றும், இப்பறம்பின் பெயரே நாட்டுப் பெயராகப் **பறம்பு நாடு** என்றும் வழங்கியமையைச் சங்ககால இலக்கியங்களில் காணலாம்.

பறம்பின் பல பெயர்கள்

அகநானூறு 323ஆம் பாட்டைப் பாடியவர் பறநாட்டுப் பெருங்கொற்றனார் என்னும் புலவர். இவர் பெயரால் சங்ககாலத்தில் **புறநாடு** என்றும் வழங்கப் பெற்றது என்றறியப்படுகின்றது.

யாப்பருங்கலக் காரிகையில் ஒரு விகற்பச் சிந்தியல் வெண்பாவிற்கு உதாரணமாகக் காட்டிய,

> ***நறுநீல நெய்தலும் கொட்டியும் தீண்டிப்***
> ***பிறநாட்டுப் பெண்டிர் முடிநாறும் பாரி***
> ***பற நாட்டுப் பெண்டி ரடி***

***என்புழி, பறநாடு என்பது எழுதினவர் தவறும் பதிப்பித்தவர் தவறும் ஆகுமெனக் கூறி, "அறநாட்டுப் பெண்டிரடி'' என்று மோனைக் கியைவது காட்டித் திருத்திப்படித்தாரும் படிப்பித்தாரும் பலராவர்.***

**“பற நாட்டுப் பெருங்கொற்றனார்’’ என்று பெயர் சிறந்த நல்லிசைப் புலவர் ஒருவருண்டென்பது 323 - ஆம் அகப்பாட்டால் இக்காலத்துப் போல அக்காலத்துத் தெளிந்ததில்லை**[114] *என்பார் மகாவித்துவான் ரா. இராகவையங்கார்.*

*பேராசிரியர் வையாபுரி பிள்ளையவர்களைத் தலைமையாகக் கொண்டு பதிப்பிக்கப்பெற்றுள்ள* ***சங்க இலக்கியங்கள்*** *ஆராய்ச்சிப் பதிப்பிலும்* ***பறநாட்டுப் பெருங்கொற்றனார்*** *என்றே பதிப்பிக்கப் பெற்றுள்ளதும் அறியத்தக்கது.*

***பறநாட்டுப் பெண்டிரடி*** *எனும் எடுத்துக்காட்டு வெண்பா, கி.பி 11 ஆம் நூற்றாண்டினராகிய குணசாகரர் எடுத்துக் காட்டியது. எனவே, இந்த நூற்றாண்டுவரை பறநாடு என்று இந்நாட்டுப் பெயர் வழங்கியிருப்பதை அறியலாம். பறநாடு என்று வழங்கியது போலவே இம்மலை அக்காலத்துப் பறமலை எனவும் வழங்கியதாக வேண்டும்.*

## பறம்பிற்கோமான் பாரி

*பறம்பினைத் தலைமையாகக் கொண்டு ஆண்டதால் வேள்பாரி, பறம்பிற் கோமான் என்னும் சிறப்புப் பெயரால் சுட்டப் பெறுகிறான்.*

*பறம்புமலை வளத்தாலேயே பாரி தன்னை நாடி வந்த புரவலர்க்கும் புலவர்க்கும் வாரி வழங்கினான் என்பதைப் பல பாடல்களில் சங்கப் புலவர்கள் பதிவு செய்துள்ளனர். மூவேந்தர்களுக்கும் இணையாக- கொடை வழங்குவதில் சிறந்து விளங்கிய வேளிர் குடியைச் சேர்ந்தவன் என்று பாரியைப் புகழ்கின்றனர்.*

*கடையெழு வள்ளல்களில் ஒருவனாக இருந்த பாரி தனது கொடை வன்மையால் வரிசை முறையில் முதல் இடத்தில் வைத்துப் போற்றப் பெறுகிறான் என்பதும் இலக்கியங்கள் சுட்டும் கருத்தாகும்.*

## பறம்பு பாடிய புலவர்கள்

*பாரியினுடைய பெருமை அறிந்து பறம்பினைப் பாடிய புலவர்கள் பலராவர். அவர்கள் பெயர்கள் பின்வருமாறு:*

கபிலர், நல்லூர் நத்தத்தனார், மிளைக்கந்தனார், நக்கீரர், புறத்திணை நன்னாகனார், பெருஞ்சித்திரனார், ஔவையார் ஆகியோராவர்.

- இவர்களுள் **கபிலர்** தானே பறம்பிலிருந்து அதன் வளமையை நன்குணர்ந்து பறம்பிற் கோமான் பாரியின் வள்ளன்மையையும் போற்றிப் பாடியவராவார்.

- **நல்லூர் நத்தத்தனார்** ஒய்மாநாட்டு நல்லியக்கோடனைக் குறித்து **சிறுபாணாற்றுப்படை**யில் பாடுமுகத்தான் பறம்பையும் பாரியையும் புகழ்ந்து பாடுகிறார்.

- **குறுந்தொகை**யில் **மிளைக்கந்தனார்** பறம்பின் பனிச்சுனையைப் போற்றிப் பாடுகிறார்.

- **நக்கீரர்** பறம்பின் சுனைநீரைக் குறித்து அகத்துறைப் பாடல் ஒன்றில் தலைவியின் நெற்றியைப் பறம்பில் எழுந்த புதுமலர் என்று குறிப்பிடுகிறார்.

- **நன்னாகனார் புறநானூ**ற்றில் ஒய்மாநாட்டு நல்லியக்கோடனைப் புகழ்ந்து பாடும்போது பாரியின் பறம்புச் சுனை நீரை உவமையாகக் குறிப்பிடுகிறார்.

- **பெருஞ்சித்திரனார் குமண**னைப் புகழ்ந்து பாடும் புறநானூற்றுப் பாடலில் பாரியையும் பறம்பையும் சான்று காட்டுகிறார்.

- **ஔவையார்,** கபிலர் மூவேந்தர் முற்றுகையின்போது தனது மதி நுட்பத்தால் கிளிகளைப் பழக்கி உணவு பெற்றமையைக் குறித்து செய்தி அமையும் பாடலை இயற்றியுள்ளார்.

### கபிலர் பாடல்களில் பாரியது பறம்பு

பறம்பினைப் பெரிதும் போற்றிப் பாடியவர் கபிலர் ஆவார். இதன் காரணமாகவே இவர் குறிஞ்சிக் கபிலர் என்னும் சிறப்பினைப் பெற்றிருக்கிறார். சங்க இலக்கியங்களில் அதிகப் பாடல்களை எழுதியவரும் இவரேயாவார்.

சங்க இலக்கியங்களில் எண்ணிக்கையால் மட்டுமின்றி எண்ணத்தாலும், வண்ணத்தாலும் கபிலரின் பாடல்கள் சிறப்புடையன என்பது அறிஞர்களின் கருத்தாகும். சங்க இலக்கியங்களான பத்துப்பாட்டு, எட்டுத்தொகைகளில் கபிலர் பாடியனவாக இடம்பெற்றிருப்பவை 235 பாடல்களாகும். (மாற்றுக் கருத்தும் உண்டு) இவற்றுள் குறிஞ்சித் திணைக்குரிய பாடல்கள் மட்டும் 191 ஆகும். ஒரு திணையை மட்டும் இவ்வளவு பாடல்களால் பாடிய புலவர் வேறொருவர் இல்லை என்பது முடிபு.

கபிலரின் சங்கப்பாடல்கள், பறம்புமலையை உள்ளடக்கிய பறம்பு நாட்டையும், அதன் வளம் குன்றாது ஆண்ட வள்ளல் பாரியையும் பற்பல கோணங்களில் படம்பிடித்துக் காட்டுகின்றன.

முன்னூறு ஊர்களைத் தன்னகத்தே கொண்ட பெரும்பெயர்ப் பறம்பானது, உழவர் உழாத பயன் நான்கு நல்கும் தன்மைத்து. பலாஅம் பழுத்த பசும்புண் ணரியல்வாடை துரக்கு நாடு. சனிக்கோள் புதைந்தாலும், தூமகேது என்னும் வால்நட்சத்திரம் தோன்றினாலும், சுக்கிரன் என்னும் கோள் தெற்குத் திசை நோக்கி நகர்ந்தாலும் (முதலிய தீயநிமித்தங்கள் நேர்ந்தாலும்) பறம்பு நிலைத்து நிற்கும் புகழுடையது. ஆடுநர் பாடுநராகத் தம்மை நாடிவரும் இரவலர்க்கு எளியது. பகைவர் நெருங்குதற்கரியது.

இந்நாட்டினை ஆளும் வள்ளல் பாரி, நீரினும் இனிய சாயலன், நயந்தோர்க்குத் தேர் ஈயும் வண்கையவன், நிழல்இல் நீள்இடைத் தனிமரம் ஒத்தவன். தன்னாட்டு முன்னூறு ஊர்களையும் பரிசிலர்க்கு நல்கியவன், பகைவர் ஓடுகழல் கம்பலை கண்ட செருவெஞ் சேஎய் பெருவிறல் என்றெல்லாம் கபிலரால் போற்றப்பெற்றவன். அகஒழுக்கத்திற்கும், புறவீரத்திற்கும் துணைநின்ற பெருமை இப்பறம்புமலைக்கு உண்டு என்பது ஈங்குக் கருதத்தக்கது.

உவமை, உள்ளுறை, இறைச்சிப்பொருள்களில் பல்வேறு இடங்களில் பறம்புமலையானது கபிலரின் பாடல்களில் காட்சிப்படுவது சிறப்பான கவனிப்புக்குரியது. கபிலர் பாடிய 191 குறிஞ்சித் திணைப் பாடல்களில் பெறப்படும் உள்ளுறையும் இறைச்சியும் பறம்புமலையைக் குறித்ததாகவே

அமையும். அவ்வகையில் புறஇலக்கியச் சான்றுகளாகக் கொள்ளப்படும் பாடல்களிலிருந்து பறம்பைக் குறித்து கபிலர் தருகிற உவமைகள் அக இலக்கியச் சான்றுகளோடு ஒத்துக் காண்பதற்கு ஏற்பதாக அமையும்.

சான்றாக, பறம்பின் வளமாகக் கபிலரால் பாடப்பெற்ற தோழி கூற்றாக வரும் அகநானூற்றுப் பாடல் வளம் பொருந்திய மலையில் வாழ்கிற கடுவன் கொள்கிற சோம்பலின் நுண்மையை நயமாக எடுத்தாள்கிறது.

**கோழிலை வாழைக் கோள்முதிர் பெருங்குலை**
**ஊழுறு தீங்கனி, உண்ணுநர்த் தடுத்த**
**சாரற் பலவின் சுளையொடு, ஊழ்படு**
**பாறை நெடுஞ்சுனை, விளைந்த தேறல்**
**அறியாது உண்ட கடுவன் அயலது**
**கறிவளர் சாந்தம் ஏறல் செல்லாது,**
**நறுவீ அடுக்கத்து மகிழ்ந்து கண்படுக்கும்**
**குறியா இன்பம், எளிதின், நின் மலைப்**
**பல்வேறு விலங்கும், எய்தும் நாட![115]**

இதே பொருண்மை பாரிமகளிரை அடைக்கலப்படுத்தி விச்சிக் கோவிடம் அறிமுகப்படுத்தும் புறநானூற்றிலும் (பா.எ.200) காணப்படுகிறது.

கலித்தொகையில் தோழியின் கூற்றாக வருகிற பாடலில், தலைவனின் பெருமை கூறும்போது பாரியைக் கபிலர் புகழும் முகத்தானே தோழியும் புகழ்கிறாள்.

**..............................தன் மலை**
**நீரினும் சாயல் உடையன், நயந்தோர்க்குத்**
**தேர்ஈயும் வண் கையவன்[116]**

என்பது அப்பாடல். இதே போலப் புறநானூற்றுப் பாடலில் கபிலர் பாரியை,

**மால்புடை நெடுவரைக் கோடுதோ றிழிதரும்**
**நீரினு மினிய சாயற்**
**பாரி வேள்[117]**

என்று பாடுவதும் நினைவுகூரத்தக்கதாகும். இவ்வாறு கபிலரது அகப்பாடல் முழுமைக்கும் கற்பனை வளம் மட்டுமல்லாது காட்சி வளத்தையும் வழங்கியது பறம்புமலையின் சிறப்பே என்பதை உய்த்துணரலாம்.

## நற்றிணையில் பறம்புமலை

அகத்துறை இலக்கியமான நற்றிணைப் பாடலில் கபிலர் நேரடியாகவே பாரியது பறம்பின் வளமையை உவமையாக்கிக் காட்டுகிறார்.

***புள்ளுப்பதி சேரினும் புணர்ந்தோர்க் காணினும்***
***பள்ளி யானையின் வெய்ய உயிரினை***
***கழிபட வருந்திய எவ்வமொடு பெரிதழிந்து***
***எனவ கேளாய் நினையினை நீநனி***
***உள்ளினும் பனிக்கும் ஒள்ளிழைக் குறுமகள்***
***பேரிசை உருமொடு மாரி முற்றிய***
***பல்குடைக் கள்ளின் வண்மகிழ்ப் பாரி***
***பலவுறு குன்றம் போலப்***
***பெருங்கவின் எய்திய அருங்காப் பினளே***[118]

தோழி தலைவனுக்குக் கூறும் கூற்றாய் அமையும் இப்பாடலில், தலைவி இற்செறிக்கப்பட்ட விதத்தை உணர்த்துவதற்காக பாரி பலவுறு குன்றம் போலக் கடினமான காவலுக்குட்படுத்தப்பட்டாள் என்னும் உவமையோடு பறம்பின் வளத்தையும் சுட்டுகிறார்.

## கபிலரது புறப்பாடல்களில்

கபிலர் பாடியனவாகப் புறநானூற்றில் இருபத்தெட்டுப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன. இவை நேரடியாகவே பறம்பின் வளத்தைப் புலப்படுத்துவனவாக அமைகின்றன.

அவற்றுள் ஒன்றான விறலி ஆற்றுப்படைப் பாடல் பறம்புமலையின் வளத்தை முதற்சுட்டி எழுகிறது. **பறம்புமலையில் மழை பொழிந்தாலும் பொழியாவிட்டாலும்- வளம்மிகுந்தாலும் குறைந்தாலும் - பாரியை**

**நாடிச் சென்று பாடினால் பரிசில் பெறுதல் உறுதி என்று விறலியை ஆற்றுப்படுத்துவது இப்பாடல்.**[119]

இரண்டாவதாக அமைகின்ற பாடல், பறம்புமலை பாடுகிறவர்க்கே உரியது என்னும் செய்தியோடு அது எத்தகு வளமுடையது என்பதையும் எடுத்துரைக்கிறது. குறத்தியர்கள் சந்தன மரத்தைக் கொண்டு விறகெரிக்கும் அளவுக்கு வளமான மலையை பரிசிலர் இரந்து செல்வர். பறம்புமலை பாடுவோர் பாரியை வேண்டும் என்று கேட்டாலும் அவர் விருப்படியே அவர்களுக்குரிய பரிசுப் பொருளாகிச் செல்வான் என்னும் கருத்தை விளக்குகிறது. பறம்பைப் போலவே பாரியும் தன்னையளிப்பதில் முன்னிற்கிறான் என்பதே இதன் உட்கருத்தாகும்.

வள்ளியோன் நாடு

இரவலர்க்கு ஈயும் வள்ளன்மை பொருந்திய பாரியைக் கபிலர் நிழல்இல் நீள் இடைத் தனிமரம் என்று சிறப்பித்துப் பாடுகிறார். இப்பாடலில்,

**கார்ப்பெயல் தலைஇய காண்பு இன் காலைக்**
**களிற்று முக வரியின் தெறுழ் வீ பூப்பச்**
**செம்புற்று ஈயலின் இன்அளைப் புளித்து**
**மென்தினை யாணர்த்து நந்தும் கொல்லோ**
**நிழலில் நீள்இடைத் தனிமரம் போலப்**
**பணை கெழு வேந்தரை இறந்தும்**
**இரவலர்க்கு ஈயும் வள்ளியோன் நாடே**[120]

என அமையும் அடிகள் தன்மைநவிற்சியில் பாரியது தண்மையைச் சுட்டுவனவாக அமைகின்றன.

பறம்புமலையின் வளமும், அதனால் பாரி வள்ளன்மை கொண்டு புகழோடு விளங்குவதும் கண்டு பொறுக்காத மூவேந்தர் மகளிரைப் பெண்கேட்டு, பறம்புமலையை முற்றுகை இட்டனர். அப்போது மூவேந்தரை நோக்கிக் கபிலர் பாடும் பாடல் (109) பறம்புமலையின் வளத்தையும் பாரியின் பெருமையையும் ஒருசேர உரைப்பதாக அமைகிறது.

பறம்பில் உழவர் உழவுத் தொழில் செய்யாமலேயே நான்குவிதப் பயன்கள் பெறப்படுகின்றனவாம். மூங்கில் நெல், பலாப்பழம், வள்ளிக்கிழங்கு, தேன் ஆகிய உணவுப் பொருள்கள் தாமே கிடைக்கும் வளம் பொருந்தியது எனக் குறிப்பிடும் கபிலர், அத்தகு மலைக்குத் தலைவனாகிய பாரியை வாள் கொண்டு வெல்லுதல் இயலாது எனவும், பறம்பினைப் பாடிச் செல்லும் விறலியரோடு உடன் சென்றால் அவனது நாட்டையும் பறம்புமலையையும் அவனையும் தாளில் பெறலாம் எனவும் சுட்டிக் காட்டுகிறார்.

***யாங்கு***
***மரந்தொறும் பிணித்த களிற்றினி ராயினும்***
***புலந்தொறும் பரப்பிய தேரினி ராயினும்***
***தாளிற் கொள்ளலிர் வாளிற் றாரலன்***
***யானறி குவனது கொள்ளு மாறே***
***சுகிர்புரி நரம்பின் சீறியாழ் பண்ணி***
***விரையொலி கூந்தனும் விறலியர் பின்வர***
***ஆடினிர் பாடினிர் செலினே***
***நாடுங் குன்று மொருங்கீ யும்மே***[121]

என அமைகிறது அப்பாடல்.

## பறம்பு கொளற்குஅரியது

இதே கருத்தை மற்றொரு பாடலிலும் கபிலர் குறிப்பிடுகிறார். மூவேந்தரும் படையெடுத்து வந்தது மிகவும் தாமதமான செயல் எனச் சுட்டி, ‘பறம்புநாட்டை ஏற்கெனவே பரிசிலர் பெற்றுவிட்டனர்.யானும் பாரியும், பறம்புக் குன்றும் மட்டுமே எஞ்சியிருக்கிறோம்’ என்று குறிப்பிடுகிறார். அப்பாடல் பின்வருமாறு.

***கடந்தடு தானை மூவிருங் கூடி***
***உடன்றனி ராயினும் பறம்புகொளற் கரிதே***
***முந்நூ றூர்த்தே தண்பறம்பு நன்னாடு***
***முந்நூ றூரும் பரிசிலர் பெற்றனர்***

***யாமும் பாரியு முளமே***
***குன்று முண்டுநீர் பாடினிர் செலினே***[122]

*மற்றொரு பாடலில், மூவேந்தரும் கொள்ளுவதற்கு அரியதாக இருக்கிற பறம்புமலை விறலிக்கு மிக எளிதில் அடையக்கூடியதாக இருக்கிறது எனக் கபிலர் குறிப்பிடுகிறார்.*

***அளிதோ தானே பேரிருங் குன்றே***
***வேலின் வேறல் வேந்தர்க்கோ அரிதோ***
***நீலத்து இணை மலர் புரையும் உண்கண்***
***கிணை மகட்கு எளிதால், பாடினள் வரினே***[123]

*இவ்வாறாகப் புறநானூற்றில் உள்ள கபிலர் பாடிய பாடல்களில் பதினாறு பாடல்கள் பறம்பின் வளமை உரைப்பனவாகவே உள்ளன. அவற்றுள் ஒன்பது பாடல்கள் பாரி இறந்தபின்னால் பறம்பின் நிலை என்னவாகப் போகிறதோ? - எனும் கவலையைப் புலப்படுத்தி நிற்கின்றன. இப்பாடல்கள் கபிலர் பறம்பிருந்து பாடிய பாடல்களாகக் கொள்ளலாம்.*

## குன்றும் கொண்டார்

*பாரி மறைவிற்குப் பின்னர் எழுகிற கையறுநிலைப் பாடல், பாரி மகளிரால் பாடப் பெற்றதாகக் கருதப்படுகிறது எனினும் இதைக் கபிலரே பாடியுள்ளார் என்பர் அறிஞர்.*

***அற்றைத் திங்கள் அவ்வெண் நிலவில்***[124]

*எனும் பாடல் நிலவு துணையாக நின்று பறம்பின் வரலாற்றைச் சொல்லிக்காட்டுகிறது. இந்த இடத்தில் பாரி மரணம் குறித்தும் சில கருத்துக்களை முன் வைப்பது இன்றியமையாததாகின்றது.*

## பாரியின் மரணம் - அறிஞர்தம் விளக்கங்களும் விவாதங்களும்

*பாரியின் வாழ்வுக்குப் பெரிதும் துணைபுரியும் சான்றாக அமைவது கபிலரின் பாடல்களாகும். ஆனால் கபிலர் பாரியின் மறைவு குறித்த செய்திகளைப் பெரும்பாலும் மறைபொருளிலேயே பாடியுள்ளார்.*

குறிப்பாக, ஏனையோர்கள் கூற்றுப்படி பாரியிடம் மகட்கொடை வேண்டித்தான் மூவேந்தர்களும் படையெடுத்தனர் என்பதைப் பற்றிய தகவல்களை மறைவாகவே உணர்ந்து கொள்ள முடிகிறது. அதுமட்டுமின்றி, பாரியின்மீது படையெடுத்த மூவேந்தர்களின் பெயர்களையும் அவரோ, பிற புலவர்களோ தம் பாடல்களில் குறிப்பிடவில்லை.

வள்ளல் பாரியின் வாழ்வில் மிகப்பெரும் மர்மமாக விளங்குவது அவனுடைய மரணமேயாகும். முதற்கட்டப் போரில் வீறு கொண்டு எழுந்த பாரியின் படைகள் இரண்டாம் கட்டப் போரில் என்னவாயின? பாரி எவ்வாறு கொல்லப்பட்டான் என்பது பற்றிக் கபிலர் பாடல்களையே ஓரளவு சான்றுகளாகக் கொள்ளமுடிகின்றது.

அதிலும், பாரியினுடைய மரணத்தை எடுத்துரைக்கும் முதற்குரல் கபிலருடையதாக இல்லை. பாரிமகளிர் என்னும் பெயரில் வெளிப்படும் அந்தக் குரலுக்குரியவர் கபிலர்தானா என்பதும் ஆய்வுக்குரியது.

***அற்றைத் திங்கள் அவ்வெண் நிலவில்***
***எந்தையும் உடையேம்; எம் குன்றும் பிறர் கொளார்;***
***இற்றைத் திங்கள் இவ்வெண் நிலவின்,***
***வென்றுஎறி முரசின் வேந்தர்எம்***
***குன்றும் கொண்டார்; யாம் எந்தையும் இலமே***[125]

இதைப் பொதுவியல் திணை, கையறுநிலைத் துறையில் பாரி மகளிர் பாடிய பாடல் என்றே குறிப்பிடும் உ.வே.சாமிநாதர் ***மூவேந்தரும் முற்றியிருந்த அற்றைத் திங்களின் அவ்வெள்ளிய நிலவின்கண் எம்முடைய தந்தையும் உடையேம்; எம்முடைய மலையையும் பிறர் கொள்ளார்; இற்றைத் திங்களது இவ்வெள்ளிய நிலவின்கண் வென்று அறைந்த முரசினையுடைய அரசர் எம்முடைய மலையையுங் கொண்டார்; யாம் எம்முடைய தந்தையையும் இழந்தேம்***[126] என்று குறிப்பிட்டுள்ளார்.

மேலும் ***திங்கள் எனவரும் சொல்லுக்கு மாதம் என்பாரும் உளர்***[127] என்பது பாரியின் பறம்பின்மீதான முற்றுகை ஒருமாத கால அளவில் நிகழ்ந்திருக்கலாம் என்னும் ஐயத்தினை எழுப்புகிறது.

தவிரவும், **ஒருவனை மூவேந்தரும் வஞ்சித்துக் கொன்றமையின் வென்றெறி முரசின் வேந்தர் என்றது ஈண்டு இகழ்ச்சிக் குறிப்பாய் நின்றது**[128] என்னும் குறிப்பிலிருந்து பாரியின் மரணம் வஞ்சகக் கொலையாகவே உறுதிப்படுத்தப்படுகிறது.

பாரியின் மரணத்தைச் சுட்டும் ஒரே பாடல் இதுவாகவும் இது கபிலர் வாக்காக அன்றி, பாரியின் மகளிரின் மூலமாகவே வெளிப்படுவது குறிக்கத்தக்கதாகும்.

மேலும் **பாரிமகளிர் இருவரென்பதும், இவர்கள் தம் தந்தையிறந்த பின்பு அவன் பிரிவாற்றாது வருந்திப் புலம்பிப் பாடினர். அப்பாடல்கள் படிப்பவர் மனத்தைக் கலங்கச் செய்யும்**[129] என்னும் குறிப்பு பாரிக்கு நேர்ந்த மரணத்தின் கொடுமையை உணர்த்துவதாக அமைகிறது.

**போருக்குப் பின்னர் பாரியின் வீரமிக்க உறவினர்களிலே அவன் பாதுகாப்பிலேயே ஒவ்வொருவரும் வீழ்ந்து பட்டனர். அவன் முறையற்ற மடிவுக்கு வருந்த அவன் இரு புதல்வியர்களே மீந்தனர். அவன் செல்வத்தையே தம் செல்வமாகக் கொண்டு வாழ்ந்த பாணர் குலம் இறந்து பட்ட தம் தலைவனுக்காக வாய்விட்டரற்றிற்று. துணையற்றுத் தவித்த இரு புதல்வியர் கண்ணீருடன் அவர்கள் கண்ணீர் கலந்தது**[130] என்னும் குறிப்பு பாரியோடு இருந்த வீரமிக்க உறவினர்களையும் சுட்டுகிறது. ஆனால் அவர்கள் யாவர் என்னும் குறிப்பினை அது தெளிவாக்கவில்லை.

**பாரியிடம் புலவரும் பாணரும் விறலியரும் தடையின்றிப் பரிசு பெற்றுச் செல்வதைத் தமிழுலகம் நன்கு அறிந்திருந்தது. முடிமன்னர் மூவரும் அறிந்திருந்தார்கள். அதனால், யாழ் வாசிக்கத் தெரிந்த சிலரை அழைத்துத் தம் கருத்தை முடிக்கும்படி ஏவினார்கள். அவ்வஞ்சப் பாணர்கள் பாரி-யிடம் சென்று யாழிசையாலும் பாட்டாலும் அவன் அன்பைப் பெற்றனர். ஒருநாள் மலைவளம் காணவேண்டும் என்று அவனுடன் சென்றனர். பறம்புமலையின்மேல் மரங்கள் அடர்ந்த சூழலில் அந்த வஞ்சகர்களுடன் பாரி நடந்து சென்றான். அப்போது அந்தக் கொடுஞ்செயலாளரில் ஒருவன் பாரியை வாளால் துணித்து வீழ்த்தி விட்டான். பின்பு அந்த வஞ்**

***சகர்கள் தம் வேடத்தை மாற்றி ஓடி விட்டார்கள்***[131] என்னும் கி.வா.ஜ. குறிப்பும் இங்கு நோக்கத்தக்கது. ஆனால் இதற்கான சான்றுகளை அவர் முன்வைக்கவில்லை.

***அந்தோ! இவன் இத்துணைக் கொடைவள்ளலாய் இருந்தமையாலும் புறமுதுகு காட்டி ஓடா வீரனாய்த் திகழ்ந்த காரணத்தாலும், இவன் இருப்பதால் நம் இசைக்கு வசை ஏற்படும் என்று எண்ணியதாலும் மூவேந்தரும் வஞ்சனையால் பாரியை மாய்த்து விட்டனர்***[132] என்னும் குறிப்பினால் பாரியின் மரணம் வஞ்சகமாகவே நிகழ்ந்தது என அறிய இடம் உண்டு.

***ஒருவனை எதிர்க்க மூவராய் ஒருங்குவந்துள்ள பொறாமைப் பேயர்களை எதிர்த்துப் போர் முரசு கொட்டினான்; வீரப் போர் புரிந்தான்; மாண்டான்! ஆம்! அறத்தை நம்பினான் பாரி: அந்த அறத்தினாலேயே வீழ்ந்தான்; அழியாப் புகழ் பெற்றான். அம்பை நம்பினார் அம்மூவேந்தர். அதனாலேயே வென்றனர்; அழியாப் பழியும் எய்தினர்***[133] எனக்குறிப்பிடும் ந.சஞ்சீவி அறத்தின் வழியில் நின்ற பாரியின் புகழைப் போற்றியும், அறம் பிறழ்ந்த மூவேந்தரை இகழ்ந்தும் இக்குறிப்பை வழங்குகிறார்.

***மூவேந்தரும் ஒருங்குகூடி வேறொரு சூழ்ச்சி செய்து பாரியை வஞ்சித்துக் கொன்றனர். இதனை 112ஆம் புறப்பாட்டுரையில் ஒருவனை மூவேந்தரும் முற்றியிருந்து வஞ்சித்துக் கொன்றமையின் - என வருதலால் அறிக. பாரியும் பரிசிலர் இரப்பின் - வாரேன் என்னான் அவர்வரையன்னே (புறம் 108) எனக் கபிலர் பாரியினியல்பு கூறுதலால், அவ்வேந்தர் மூவரும் இவனியல்புக்குத் தகப் பரிசிலர் வேடம்பூண்டோ, பிறரைப் பரிசிலராக விடுத்தோ, இவனை இரந்து தம்மகப்படுத்திக் கொன்றனராதல் வேண்டும்.*** இக்கருத்து,

***புரிசைப் புறத்தினிற் சேரனும் சோழனும் போர்புரிய***
***இரியச் சயங்கொண்ட போதினில் யாமினி யீங்கிவனைப்***
***பரிசுக்கு நல்ல கவிபாடி னால்வரும் பாக்யமென்றே***
***வரிசைத் தமிழ்புனை பாரியும் பாண்டியன் மண்டலமே***

**என்னும் பாண்டி மண்டலச் சதகச் செய்யுளினும் பயில்வது கண்டு கொள்க. இந்நூலுடையார், பாண்டி மண்டலச் சிறப்பையே கூறிப் போந்தவராதலின், பாண்டியனும் அப்போரில் இரிந்தோடினன் எனக் கூற உடன்பட்டிலர் போலும்**[134] என்னும் மு.இராகவையங்கார் குறிப்பும் இங்கு நோக்கத்தக்கதாகும்.

மேலும் அவர், **மூவேந்தரும் ஒருங்குகூடி வேறொரு சூழ்ச்சி செய்து பாரியை வஞ்சித்துக் கொன்றனர். இதனை 412ஆம் புறப்பாட்டுரையில் "ஒருவனை மூவேந்தர் முற்றியிருந்து வஞ்சித்துக் கொன்றமையின்" என வருதலால் அறிக. "பாரியும் பரிசிலர் இரப்பின் வாரேன் என்னா அவர் வரையன்னே" எனக் கபிலர் பாரியினியல்பு கூறுதலால், அவ்வேந்தர் மூவரும் இவனியல்பு தகப் பரிசிலர் வேடம் பூண்டோ, பிறரைப் பரி-சிலராக விடுத்தோ இவனை இரந்து தம்மகப்படுத்திக் கொன்றனராதல் வேண்டும்**[135] என்று பாரி கொல்லப்பட்ட விதத்தையும் குறிப்பிடுகிறார்.

**தளர்ந்த மூவர் பின்னருங்கூடிப் பொருதனர் என்பது, "அற்றைத் திங்க ளவ்வெண் ணிலவின்" என்னும் புறப்பாட்டில் "வென்றெறி முரசின் வேந்தர்எங் குன்றுங் கொண்டார்" எனப் பாரி மகளிர் பாடுதலானறிக. இதனுரைக்கட் பழநல்லுரையாளர் "ஒருவனை மூவேந்தரு முற்றியிருந்ததும் வஞ்சித்துக் கொன்றமையின், வென்றெறி முரசின் வேந்தர்" எனக் கூறுதலாற் பாரியை மூவேந்தரும் வஞ்சித்துக் கொன்றது புலப்படும்**[136] எனக் குறிப்பிடுகிறார் ரா. இராகவையங்கார். மேலும் **முல்லைக்குத் தேரீந்த வள்ளல் பாரியின் பறம்புமலையை, மூவேந்தர்கள் முற்றுகையிட்டமையால் பாரி புகழ் மேலும் பரவியதேயல்லாமல், குன்றவில்லை. எனவே, இச்செயலுக்கு வெட்கித் தலைகுனிந்த அவர்களுக்குள் எழுந்த வன்மம், கபிலர்தம் பாடல்வழி செயல்படத்தொடங்கியது. நெறிதவறி, பாணர்போல் சென்று பாரியைப் பாடி, அவன் உயிரைப் பறித்திருக்கவேண்டும். அவ்வாறுதான் பாரியின் மரணம் நிகழ்ந்திருக்க வேண்டும்**[137] என்ற முடிவுக்கும் வருகிறார்.

**மூவேந்தர் பாரியை எவ்வாற்றாலும் கொல்ல வேண்டும் என்று துணிவு கொண்டனர்; தங்களிடம் குடிகொண்டிருந்த பொறாமை காரணமாக,**

**ஏதோ ஒரு சூழ்ச்சி செய்து பாரியைக் கொன்று விட்டனர். இரவலர்க்கு இனியவனாய் விளங்கிய பாரிவேள், அறிவிழந்து பொறாமையின் வயப்பட்ட மூவேந்தரால் மாண்டதைக் கண்ட அவனது ஆருயிர் மனையாள் உயிர் நீத்தார்**[138] என்று இராசமாணிக்கனார் பாரியின் மனைவியைப் பற்றிய ஒரு குறிப்பையும் அவனுடைய இறப்புச் செய்தியோடு இணைத்துத் தருகிறார்.

சேரமன்னர் வரலாற்றை எழுதிய ஔவை.துரைசாமிபிள்ளை, **பாண்டி நாட்டின் வடபகுதியில் உற்ற பறம்பு நாட்டின் தலைவனான வேள்பாரிக்கு உயிர்த் தோழராக விளங்கிய கபிலர் என்னும் சான்றோர், அப்பாரி இறந்ததனால் அவனுடைய மகளிர் இருவரையும் மணஞ்செய்து தரவேண்டிய கடமையைத் தான் ஏற்றுக் கொண்டு, பாரி மகளிரை மணந்து கொள்ளுமாறு சில வேந்தர்களை வேண்டினர்**[139] என்று குறிப்பிடுவதோடு பாரியின் மரணத்தைக் குறித்து வேறு எந்தத் தகவல்களையும் தரவில்லை.

மேலும், கபிலர் செல்வக்கடுங்கோவாழியாதனைச் சந்தித்த நிகழ்வைக் குறிப்பிடும்போது, **அம்மன்னன் வேள்பாரியின் புகழையும் மறைவையும் கபிலர்க்கு உண்டாகிய பிரிவுத் துன்பத்தையும் பிறவற்றையும் பற்றிச் சிறிது நேரம் பேசிவிட்டு, "சான்றீர் வேள்பாரி இருந்திருப்பானாயின் எங்கள் நாட்டுக்கு உங்கள் வருகை உண்டாகாதன்றோ" என்றொரு சொல்லைத் தன் உண்மையன்பு விளங்க இனிது எடுத்துரைத்தான்**[140] என்று குறிப்பிடுகிறார்.

அதற்குக் கபிலரும் **"வேந்தே எங்கள் தலைவனான வேள்பாரி விண்ணுலகம் அடைந்தான். என்னைக் காத்தளிக்க வேண்டும் என யான் குறையிரந்து வந்தேனில்லை"**[141] என்று கூறினார் எனக் குறிப்பிடும் ஔவை. துரைசாமிபிள்ளை, பாரியின் மரணம் குறித்த வேறு எந்த விளக்கத்தையும் தரவில்லை என்பதை அறிய முடிகிறது.

**ஆள்வினையால் வெல்ல முடியாத பாரியைச் சூழ்வினையால் வஞ்சித்துக் கொன்றனர் வெஞ்சின வேந்தர். அப்போது அறம் வாடிற்று. ஆண்மை மாசுற்றது. பாரியின் பெண்மக்கள் இருவரும் தந்தையை இழந்து தமியராயினர். நாடிழந்து நல்குரவெய்தினர்; தாம் பிறந்து வளர்ந்த**

**பறம்புமலையைக் கண்ணீர் நிறைந்த கண்களோடு கடைசிமுறை நோக்கி வறியராய் வெளியேறினர்**[142] என்கிறார் ரா.பி.சேதுப்பிள்ளை.

பறம்புமலையின் வரலாற்றைத் தொகுத்தெழுதிய மரு. பரமகுரு, **பாரியின் மரணத்தை, கபிலர் பெருமான் கூறியவாறோ, வேறுவகையாலோ, யாதென அறிகிலோம். அண்ணல் யானை வேந்தர்க்கு இன்னானாகிய இனியன், நிழலின் நீளிடைத் தனிமரம் போலப் பணைகெழு வேந்தரை-யிறந்தும் இரவலர்க்கு ஈயும் இணையிலா வள்ளல் பாரியின் இன்னுயிர் அந்தோ மறைந்தது. முல்லைக்குத் தேரும், பரிசிலர்க்கு முந்நூறு ஊர்களும், மூவேந்தர்க்குத் தன்னுயிரையும் ஈந்த மாரியன்ன வள்ளல் பாரியின் மண்ணக வாழ்வு மறைந்தது. பாரியின் வாழ்க்கைத் துணைநலமாகிய பாரியன்ன நல்லோள் ஆகிய மங்கலமனை விளக்கும் அணைந்தது. பறம்புமலையையும் பைந்தமிழ் நாட்டையும் இருள் சூழ்ந்தது**[143] என்பதாக முடித்துக் கொள்ளுகிறார்.

இதன்மூலம் மூவேந்தர் தம் புகழ்ப் பொறாமையினால் பாரியின் பறம்பினை முற்றுகையிட்டு அவனை வஞ்சகமாகக் கொன்றனர் என்பது உறுதியாகப் புலப்படுகிறது. ஆனால், அம்மூவேந்தர்களின் பெயரோ, பாரி கொல்லப்பட்ட விதமோ தெளிவாகப் புலப்படவில்லை என்பதும் இதன்மூலம் உறுதியாகிறது.

ஆனால், அதற்குப் பின்னரும் பாரியின் உற்ற தோழர் கபிலர் இருக்கிறார். பறம்புமலை இருக்கிறது. பாரி மாய்ந்தபின் தன்னியல்பிழந்த பறம்பினைப் பிரிய நேரும் கபிலரின் துயரம் பல்வேறு பாடல்களாக வெளிப்படுகிறது.

## பெரும்பெயர்ப் பறம்பினைக் கபிலர் பிரியும் துயரம்

பாரிமகளிரை அழைத்துக் கொண்டு பறம்புமலையைவிட்டுப் பிரிந்த கபிலரின் கண்ணீர், பின்வரும் கையறுநிலைப்பாடலாக (புறம்-113) வெளிப்படுகிறது. அதிலும் பறம்பின் முந்தைய வளமை சுட்டப்பெறுகிறது.

**மட்டுவாய் திறப்பவும், மைவிடை வீழ்ப்பவும்,**
**அட்டுஆன்று ஆனாக் கொழுந்துவை ஊன்சோறும்**
**பெட்டாங்கு ஈயும் பெருவளம் பழுனி**
**நட்டனை மன்னோ முன்னே; இனியே,**
**பாரி மாய்ந்தெனக், கலங்கிக் கையற்று**
**நீர்வார் கண்ணேம் தொழுதுநிற் பழிச்சிச்**
**சேறும் வாழியோ பெரும்பெயர்ப் பறம்பே;**
**கோல்திரள் முன்கைக் குறுந்தொடி மகளிர்**
**நாறுஇருங் கூந்தல் கிழவரைப் படர்ந்தே[144]**

*என்பது அப்பாடல்.*

## நெடியோன் குன்று

*பாரியில்லாத பறம்பில் வாழ இயலாத நிலைப்பாட்டில், பாரிமகளிரொடு செல்லும் கபிலரின் கண்கள் பறம்புமலையைப் பலமுறை பார்த்துப் பார்த்துக் கலங்குகின்றன. அவர் மனமோ, அருகிருந்து பார்ப்போர்க்கும், தொலைவிலிருந்து பார்ப்போர்க்கும் இனிய காட்சியினை நல்கும் பறம்பு, களிறு மென்று தின்று துப்பிய கவளத்தைப் போல அமைந்துவிட்ட அவலத்தைப் பாடுகிறது.*

**ஈண்டு நின்றோர்க்கும் தோன்றும் சிறுவரை**
**சென்று நின்றோர்க்கும் தோன்றும் மன்ற**
**களிறு மென்று இட்ட கவளம் போல**
**நறவுப் பிழிந்து இட்ட கோதுடைச் சிதறல்**
**வார் அசும்பு ஒழுகும் முன்றில்**
**தேர்வீசு இருக்கை நெடியோன் குன்றே[145]**

*நெடியோன் இல்லாத குன்றின் நிலைக்கு, களிறு மென்று இட்ட கவளம் பொருத்தமான உவமையாக அமைகிறது. அவலத்திற்கு மத்தியிலும் மலையின் வளம் பதிவாவது கருதத்தக்க ஒன்றாகும். இவ்வண்ணமே, பறம்பின் முந்தைய வளத்தை நினைத்துப் பாடும் மற்றொரு பாடலும் உண்டு. பாரியை இழந்தபின் அவ்வளம் இனி இல்லை என்பதாக அது அமைகிறது.*

இனியோன் குன்று

*ஒருபுறம் அருவி முழங்கி வழியவும் இன்னொரு பக்கம் பாணர்களின் மொந்தைகளில் கள் நிறைந்து வழியவும் விளங்கிய இந்தக் குன்றம் பாரியை நீங்கியதால் தனது பெருமைகளை இழந்தது என்று குறிப்பிடுகிறார். அப்பாடல் பின்வருமாறு.*

***ஒருசா ரருவி யார்ப்ப வொருசார்***
***பாணர்மண்டை நிறையப் பெய்ம்மார்***
***வாக்க வுக்க தேக்கட் டேறல்***
***கல்லலைத் தொழுகு மன்னே பல்வேல்***
***அண்ணல் யானை வேந்தர்க்***
***கின்னா னாகிய இனியோன் குன்றே[146]***

அண்ணல் நெடுவரை

*போர் வருவதற்கு முன்னர் இருந்த பாரி மகளிரினுடைய நிலையையும், போருக்குப் பின்னால் அவர்களின் நிலையையும் உணர்த்திவருகிற பாடல் (116) பறம்பின் வளத்தையும் உடன் சேர்த்து வருகிறது.*

*பருவமல்லாத காலத்தும் செழித்தோங்கி விளங்கிய பறம்புமலை யிலிருந்து போர் மேற்கொண்ட வேந்தர்களின் குதிரைகளைக் கணக்கிட்ட பாரி மகளிர் இப்போது பீர்க்கும் சுரையும் படரும் ஈஞ்சில் குப்பை மேட்டில் நின்று கொண்டு உமணர்கள் கொண்டு செல்லும் உப்பு வண்டியை எண்ணிக் கொண்டிருக்கிறார்கள் என்று குறிப்பிடுகிறார். அப்பாடலில்,*

***பயில்பூஞ் சோலை மயில்எழுந்து ஆலவும்***
***பயில்இரும் சிலம்பில் கலைபாய்ந்து உகளவும்***
***கலையும் கொள்ளாவாகப் பலவும்***
***காலம் அன்றியும் மரம்பயம் பகரும்***
***யாணர் அறாஅ வியன்மலை அற்றே***
***அண்ணல் நெடு வரை[147]***

*என்பதாகப் பறம்புமலை வளம் சுட்டப்படுவதைக் காணலாம்.*

*பாரிக்குப் பின்னர் பறம்பு முற்றிலும் நிலைகுலைந்து விடும் என்று கருதிப்பாடும் பாடலில் பறம்பினது முந்தைய வளம் கபிலரால் நினைவு கூரப்படுகிறது.*

தந்தை நாடு

*சனிக்கோள் புதைந்து, தூமகேது என்னும் வால்நட்சத்திரம் தோன்றி னாலும், சுக்கிரன் என்னும் கோள் தெற்குத் திசை நோக்கி நகர்ந்தாலும் இதுபோன்ற பல தீயநிமித்தங்கள் நேர்ந்தாலும் பறம்பு நிலைத்து நிற்கும் புகழுடையது. பாரி இறந்தபின் இந்தப் புகழ் நிலைத்து நிற்குமா? என வினவுவதாக இப்பாடல் அமைகிறது. பிள்ளை வெருகின் முள்எயிறு புரையப் பாசிலை முல்லை முகைக்கும் ஆய்தொடி அரிவையர் தந்தைநாடாகிய பறம்புநாடு,*

***வயல்அகம் நிறையப் புதல்பூ மலர***
***மனைத்தலை மகவை ஈன்ற அமர்க்கண்***
***ஆமா நெடுநிறை நன்புல் ஆரக்***
***கோஒல் செம்மையின் சான்றோர் பல்கிப்***
***பெயல்பிழைப்பு அறியாப் புன்புலத்து அதுவே***[148]

*என்னும் பெருமையுடையதாகக் கபிலர் எடுத்துரைக்கிறார்.*

தண்பறம்புநாடு

*இதே வருத்தம் அடுத்த பாடலிலும் (புறம்- 118) தொனிக்கிறது. குளத்துப்பாசனத்தை நம்பியது பறம்பு நாடு. இருப்பது சிறுகுளம். அதுவும் உடைந்து விடுமாயின் (பாரி இன்மையால்) வளம் ஒழிந்து பறம்பு சீரழியுமே என்ற கபிலரின் கவலை வெளிப்படும் இப்பாடலில் பறம்புநாடு தண்பறம்பு எனச்சுட்டப்பெறுகிறது. இத்தன்மையை இந்நாட்டிற்கு நல்கியது பறம்புமலை என்பது வெள்ளிடைமலை.*

பெருவிறல் நாடு

***வெப்புள் விளைந்த வேங்கைச் செஞ்சுவல்***
***கார்ப்பெயர் கலித்த பெரும் பாட்டு ஈரத்துப்***

***பூழி மயங்கப் பல உழுது வித்திப்***
***பல்லி ஆடிய பல்கிளைச் செவ்விக்***
***களைகால் கழாலின் தோடு ஒலிபு நந்தி***
***மென்மயில் புனிற்றுப் பெடைகடுப்ப நீடிக்***
***கருந்தாள் போகி ஒருங்குபீள் விரிந்து***
***கீழும் மேலும் எஞ்சாமைப் பல காய்த்து***
***வாலிதின் விளைந்த புதுவரகு அரியத்***
***தினைகொய்யக் கவ்வை கறுப்ப அவரைக்***
***கொழுங்கொடி விளர்க்காய் கோள் பதம் ஆக***
***நிலம்புதைப் பழுனிய மட்டின் தேறல்***
***புல்வேய்க் குரம்பைக் குடிதொறும் பகர்ந்து***
***நறுநெய்க் கடலை விசைப்பச் சோறு அட்டுப்***
***பெருந்தோள் தாலம் பூசல் மேவர***
***வருந்தா யாணர்த்து நந்தும் கொல்லோ***
***இரும்பல் கூந்தல் மடந்தையர் தந்தை***
***ஆடுகழை நரலும் சேட்சிமைப் புலவர்***
***பாடி ஆனாப் பண்பின் பகைவர்***
***ஓடுகழல் கம்பலை கண்ட***
***செருவெஞ் சேஎய் பெரு விறல் நாடே***[149]

இவ்வாறாகப் புறநானூற்றில் உள்ள கபிலர் பாடிய பாடல்கள் பறம்பின் வளமை உரைப்பனவாகவே உள்ளன.

பாரி மகளிர் குறித்த பாடல்களில்...

பாரியின் மறைவுக்குப் பின்னர் பாரிமகளிரைத் திருமணம் செய்துகொள்ளுமாறு கபிலர் விச்சிக்கோவின் நாட்டை அடைந்து வேண்டிப் பாடுகிறார். அங்கும் பறம்பின் வளம் மற்றும் பாரிவள்ளல் சிறப்புகள் பாடல்வழிப் புலப்படுகின்றன. இப்பாடலில் பாரி முல்லைக்கொடிக்குத் தேரீந்த செய்தி புலப்படுத்தப்பட்டது. **‘அழகிய முல்லைக்கொடிக்குத் தனது பெரிய தேரினைக் கொடுத்த பறம்பினை உடையவனாகிய பாரியின்**

***மக்கள் இவர்கள். ஆதலால் திருமணம் செய்து கொள்க' என்று வேண்டிப் பாடுகிறார்.[150]***

பறம்பிற்கோமான்

*விச்சிக்கோ தனது வேண்டுதலை ஏற்காத காரணத்தால், புலிகடிமால் எனப் புகழ்பெற்ற இருங்கோவேள் என்பானைக் கண்டு பாரி மகளிரை ஏற்க வேண்டுகிறார். இப்பாடலில் பறம்பிற்கோமான் எனப் பாரியைக் குறிப்பிட்டு அவர்கள் மகளிர் இவர்கள் என அடையாளப்படுத்துகிறார்.*

***'இவர் யார்?' என்குவைஆயின், இவரே,***
***ஊருடன் இரவலர்க்கு அருளி, தேருடன்***
***முல்லைக்கு ஈத்த செல்லா நல்இசை,***
***படுமணி யானை, பறம்பின் கோமான்***
***நெடுமாப் பாரி மகளிர்; யானே***
***தந்தை தோழன்; இவர் என் மகளிர்;***
***அந்தணன், புலவன், கொண்டு வந்தனனே.***
***.........***
***யான்தர, இவரைக் கொண்மதி![151]***

*என்று கூறி விளக்குகிறார். இருங்கோவேளும் ஏற்க மறுத்தவேளையில் கபிலர் சினந்து மற்றொரு பாடலைப் பாடுகிறார்.* ***இப்பாடலில் பாரியின் குடியாகிய எவ்வித் தொல்குடி உணர்த்தப்படுகிறது.[152]***

மாவண் பாரி

*பாரியின் மகளிரைத் தக்காரிடத்து ஒப்படைத்த பின்னர் கபிலர் பிரிவைத் தாங்கும் வலிமை இல்லாதவராய் வடக்கிருந்து உயிர் துறக்கிறார். அப்போது பாடிய பாடல் பறம்பின் பெயர் கூறியே எழுகிறது.*

***கலைஉணக் கிழிந்த, முழவுமருள் பெரும்பழம்***
***சிலைகெழு குறவர்க்கு அல்குமிசைவு ஆகும்***
***மலை கெழு நாட! மா வண் பாரி***

***கலந்த கேண்மைக்கு ஒவ்வாய், நீ; எற்***
***புலந்தனை யாகுவை- புரந்த யாண்டே***
***பெருந்தகு சிறப்பின் நட்பிற்கு ஒல்லாது***
***ஒருங்குவரல் விடாஅது ஒழிக எனக்கூறி,***
***இனையை ஆதலின் நினக்கு மற்றுயான்***
***மேயினேன் அன்மை யானே; ஆயினும்,***
***இம்மை போலக் காட்டி, உம்மை***
***இடையில் காட்சி நின்னோடு***
***உடன்உறைவு ஆக்குக, உயர்ந்த பாலே!***[153]

*'பலாப்பழம் மிகுந்து விளங்குகின்ற பறம்புமலை நாட்டிற்குரிய தலைவனாகிய பாரியே. எனது நட்பினை விடுத்து நீ பிரிந்து விட்டாய். நானும் உன்னோடு வருவதற்கு இசைந்தேன் விதி நம்மைக் கூட்டுவிக்கட்டும்' எனவரும் கபிலரின் இறுதிக் கூற்றிலும் பறம்புமலையின் நினைவுகள் வந்து எழுவது புலப்படுகிறது. இதனையே கபிலரின் கடைசிப்பாடல் என்பாரும் உளர்.*

*இவைபோக, இன்னும் இரு புறப்பாடல்கள் கபிலரின் உளக் கிடக்கையை உணர்த்துகின்றன.*

பறம்பின் பனிச்சுனை

*பாரியின் மக்களைத் திருமணம் செய்யத் தடுத்து ஒரு (சோழ) மன்னன் நிற்கும் வேளையில், கபிலர் பாடும் பாடலில் பறம்பின் சுனை உவமையாகக் காட்டப்படுகிறது.*

***ஆர்கலி யினனே, சோணாட்டு அண்ணல்;***
***கவிகை மண்ணாள் செல்வ ராயினும்,***
***வாள்வலத்து ஒழியப் பாடிச் சென்றாஅர்.***
***வரலதோறு அகம் மலர . .. .. .. ..***
***ஈதல் ஆனா இலங்குதொடித் தடக்கைப்***
***பாரி பறம்பின் பனிச்சுனை போலக்,***
***காண்டற்கு அரியளாகி, மாண்ட***

***பெண்மை நிறைந்த பொலிவொடு, மண்ணிய***
***துகில்விரி கடுப்ப நுடங்கித், தண்ணென***
***அகிலார் நறும்புகை ஐதுசென்று அடங்கிய***
***கபில நெடுநகர்க் கமழும் நாற்றமொடு,***
***மனைச்செறிந் தனளே, வாணுதல்; இனியே.***
***அற்றன் றாகலின், தெற்றெனப் போற்றிக்,***
***காய்நெல் கவளம் தீற்றிக், காவுதொறும்***
***கடுங்கண் யானை காப்பனர் அன்றி,***
***வருத லானார் வேந்தர்; தன்னையர்***
***பொருசமம் கடந்த உருகெழு நெடுவேல்***
***குருதி பற்றிய வெருவரு தலையர்***
***மற்றுஇவர் மறனும் இற்றால்; தெற்றென***
***யாரா குவர்கொல் தாமே - நேரிழை***
***உருத்த பல்சுணங்கு அணிந்த***
***மருப்புஇள வனமுலை ஞெமுக்கு வோரே?***[154]

*பாரியின் பறம்புமலையில் சுனைகள் பல அரிதின் முயன்று காணும் படியே இருக்கும். அதுபோலே பாரியின் மகளிரையும் அரிதின் காணும்படி மறைத்தாரே என்னும் வருத்தம் பொங்கப் பாடுகிறார் கபிலர்.*

முழுமையடையாப் பாடல்

*புறநானூற்றில் கபிலர் பாடியதாகக் கிடைக்கும் ஒரு பாடல் முழுமையாக இல்லை. ஆதலால் அதன் முழுப்பொருளையும் அறிய இயலவில்லை. ஆனபோதும், போரின் கொடுமையால் ஊர் அழிந்துபோகுமே என்னும் வருத்தம் தோன்றுமாறு அந்தப் பாடல் அமைந்துள்ளது.*

***உண்போன் தான்நறுங் கள்ளின் இடச்சில***
***நாஇடைப் பஃறேர் கோலச் சிவந்தாங்கு***
***ஒளிறுஒள் வாள் அடக்குழைந்த பைந்தும்பை***
***எறிந்துஇலை முறிந்த கதுவாய் வேலின்,***
***மணநாறு மார்பின் மறப்போர் அகுதை***

***குண்டுநீர் வரைப்பின் கூடல் அன்ன***

***குவைஇருங் கூந்தல் வருமுலை சேப்ப***

. . . . . . . . . . . . . .

***என்னா வதுகொல் தானே; நன்றும்***

***விளங்குறு பராரைய ஆயினும் வேந்தர்***

***வினைநவில் யானை பிணிப்ப***

***வேர்துளங் கினநம் ஊருள் மரனே.***[155]

*வேந்தர்களின் யானைகள் போர்ச் செயலில் விருப்பம் உடைய யானைகள் கட்டப்பட்டிருப்பதால், நம் ஊரிலுள்ள மரங்களின் வேர்கள் அசைந்து போயின. என்னாகுமே தெரியவில்லையே என்பதாக அமைகிறது.*

பதிற்றுப்பத்தில் பறம்புமலை

*சேரமன்னன் செல்வக் கடுங்கோவாழியாதனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடப்பட்ட பத்துப் பாடல்கள் பதிற்றுப்பத்தில் ஏழாம் பத்தாக இடம் பெற்றுள்ளன. பாரி இறந்தபின்னர் பாடப்பெற்ற இப்பாடல்களில் குறிஞ்சியின் (பறம்பின்) வளம் வெளிப்படக் கிடைக்கின்றது.. புலாஅம் பாசறை என்னும் தலைப்பில் அப்பாடல்கள் இடம்பெறுகின்றன. புலாஅம் பாசறை என்பதற்கு எதிராகப் பாரியின் பறம்பின் வளமான பலாக்கனியைக் குறிக்கும் விதமாக,* ***பலாஅம் பழுத்த*** *என்னும் சொல் இடம் பெறுவது இங்கு உணரத்தக்கது. முதற்பாடலில், பாரியின் இழப்பின் துயரம் வெளிப்படுகிறது.*

***பலாஅம் பழுத்த பசும்புண் ணரியல்***

***வாடை துரக்கு நாடுகெழு பெருவிறல்***

***ஓவத் தன்ன வினைபுனை நல்லிற்***

***பாவை யன்ன நல்லோள் கணவன்***

***பொன்னி னன்ன பூவிற் சிறியிலைப்***

***புன்கா லுன்னத்துப் பகைவ னெங்கோ***

***புலர்ந்த சாந்திற் புலரா வீகை***

***மலர்ந்த மார்பின் மாவண் பாரி***

........................................

***ஈத்த திரங்கா னீத்தொறு மகிழான்***

***ஈத்தொரு மாவள் ளியனென நுவலுநின்***

***நல்லிசை தரவந் திசினே யொள்வாள்***

***உரவுக் களிற்றுப் புலாஅம் பாசறை***

***நிலவி னன்ன வெள்வேல் பாடினி***

***முழவிற் போக்கிய வெண்கை***

***விழவி னன்னநின் கலிமகி ழானே***[157]

*எனுமாறு பாரியின் இல்லறம் குறித்தும், அவனுடைய போர்த்திறம், ஈகைத் திறம் குறித்தும் இப்பாடல் உணர்த்துகிறது.*

பறம்பு பாடிய பிற புலவர்கள்:

சிறுபாணாற்றுப்படையில் நல்லூர் நத்தத்தனார்

*சிறுபாணாற்றுப்படையில் நல்லூர் நத்தத்தனார், ஒய்மாநாட்டு நல்லியக்கோடனின் பெருமைகளைக் கடையெழு வள்ளல்களின் பண்புகளோடு ஒப்புமைப்படுத்திப் பாடுகிறார். அதில், வள்ளல் பாரியது வரலாற்றோடு, வளமிகு பறம்பும் பின்வருமாறு பதிவாகக் காணலாம்.*

***சிறுவீ முல்லைக்குப் பெரும்தேர் நல்கிய***

***பிறங்கு வெள்அருவி வீழும் சாரல்***

***பறம்பின் கோமான் பாரியும் கறங்குமணி***

***வால்உளை புரவியொடு வையகம் மருள***[157]

புறநானூற்றில் நன்னாகனார்

*ஒய்மாநாட்டு நல்லியக்கோடனை நல்லூர் நத்தத்தனார் பாடியது போலவே, நன்னாகனாரும் அவனைப் புகழ்ந்து பாடியுள்ளார்.*

..................................

***பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்***

***ஓரூ ருண்மையி னிகந்தோர் போலக்***

***காணாது கழிந்த வைகல் காணா***

***வழிநாட் கிரங்குமென் னெஞ்சமவன்***

***கழிமென் சாயல் காண்டொறு நினைந்தே[158]***

இப்பாடலில், நல்லியக்கோடன் வறியவர் தொடுக்கும் புகழ்மாலை சூடும் இயல்புடையவன். அத்தகையவனைப் புரவலனாகப் பெற்ற யாருக்கும் இனி குறைவில்லை என்றும் பாரியது பறம்பிலுள்ள சுனைத் தெண்ணீர் தேடிச் சென்று கொள்ளாது ஓரூரிலேயே கிடைப்பதைப் போல இவனது பரிசிலை வேண்டும்போது எடுத்துக் கொள்ளலாமெனவும் புலப்படுத்துகின்றார்.

புறநானூற்றில் பெருஞ்சித்திரனார்

குமணன் காட்டிலிருந்த காலத்து அவனைப் பாடி, அவனிடமிருந்து வாளை மட்டும் பெற்றுக் கொண்டு அவன் புகழைப் பாடிய பெருஞ் சித்திரனார் கடையெழு வள்ளல்களையும் ஒத்துரைத்து அவர்களுள் பாரியை முன்னிறுத்துகிறார். இப்பாடலில் போர்ச்செய்தியும் பாரியின் வள்ளன்மையும் பறம்பின் வளமையும் சுட்டப் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது.

***முரசுகடிப்பு இகுப்பவும் வால்வளை துவைப்பவும்***

***அரசுடன் பொருத அண்ணல் நெடுவரைக்***

***கறங்குவெள் அருவி கல் அலைத்து ஒழுகும்***

***பறம்பின் கோமான் பாரியும்[159]***

என அமைகிறது அப்பாடலின் பதிவு.

குறுந்தொகையில் மிளைக்கந்தனார்

அன்பின் மேன்மையை வெளிப்படுத்தும் மிளைக்கந்தனாரின் பாடலில், வேம்பு தேம்பூங்கட்டியாகத் தித்திக்கிறது. கூடவே, பாரி பறம்பின் பனிச்சுனை நீரும் பின்வருமாறு பதிவாகிறது.

**தேம்பூங் கட்டி என்றனிர் இனியே**

***பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்***

***தைஇத் திங்கள் தண்ணிய தரினும்***

***வெய்ய உவர்க்கும் என்றனிர்***

***ஐய அற்றால் அன்பின் பாலே***[160]

*எனத் தோழியிடம் கூறுவதாக அப்பாடல் அமைகிறது.*

அகநானூற்றில் நக்கீரர்

*களவுக்காலத்துப் பிரிந்து வந்த தலைமகற்குத் தோழி சொல்லியதாக அமையும் இப்பாடல் மூவேந்தர் முற்றுகையின்போது கபிலர் மேற்கொண்ட உணவு கொளும் முயற்சியையும் பாரியின் பெருமையையும் குறிப்பிடுவதோடு, பறம்பின் சுனைநீர்ப் பூத்த புதுமலரின் வாசம் நிறைந்தது இவள்தம் நெற்றியோ எனப் புலப்படுத்துவதும் உணரத்தக்கது.*

***உலகுடன் திரிதரும் பலர்புகழ் நல்இசை***
***வாய்மொழிக் கபிலன் சூழச் சேய்நின்று***
***செழுஞ்செய்ந் நெல்லின் விளைகதிர் கொண்டு,***
***தடந்தாள் ஆம்பல் மலரொடு கூட்டி,***
***யாண்டுபல கழிய, வேண்டுவயிற் பிழையாது,***
***ஆள்இடூஉக் கடந்து, வாள்அமர் உழக்கி,***
***ஏந்துகோட்டு யானை வேந்தர்ஓட்டிய***
***நெடும்பரிப் புரவிக் கைவண் பாரி***
***தீம்பெரும் பைஞ்சுனைப் பூத்த***
***தேம்கமழ் புதுமலர் நாறும்இவள் நுதலோ?***[161]

அகநானூற்றில் ஔவையார்

*தலைவனைப் பிரிந்த தலைவி பிரிவினை ஆற்றமாட்டாமல் தனது துயரத்தைத் தன்னுடைய நெஞ்சுக்குச் சொல்வதாக அமைந்த பாடலில் பறம்பும் பாரியுடைய புகழ்த்திறனும் குறிப்பிடப்பெறுகிறது.*

*தம்மைப் பிரிந்த தலைவர், காலை பறந்து மாலை திரும்பும் பறம்புமலைக் குருவிகளாய், போனவண்ணம் வந்திடுவார் என்று எதிர்பார்த்த நெஞ்சமும் ஏமாந்தது. இனியும் பொறுத்தல் இயலாது! எனப் பாடுவதாக அமைந்துள்ளது இப்பாடல்.*

……………………

***மறம்மிகு தானை, பசும்பூண், பொறையன்***
***கார்புகன்று எடுத்தசூர் புகல் நனந்தலை***
***மாஇருங் கொல்லி உச்சித் தாஅய்,***
***ததைந்துசெல் அருவியின் அலர்எழப் பிரிந்தோர்***
***புலம் கந்தாக இரவலர் செலினே,***
***வரைபுரை களிற்றொடு நன்கலன் ஈயும்***
***உரைசால் வண்புகழ்ப் பாரி பறம்பின்***
***நிரைபறைக் குரீஇயினம் காலைப் போகி,***
***முடங்குபுறச் செந்நெல் தரீஇயர், ஓராங்கு***
***இரைதேர் கொட்பின் ஆகி, பொழுதுபடப்***
***படர்கொள் மாலைப் படர்தந் தாங்கு,***
***வருவர்என்று உணர்ந்த, மடம்கெழு, நெஞ்சம்!***
***ஐயம் தெளியரோ, நீயே; பலஉடன்***
***வறல்மரம் பொருந்திய சிள்வீடு, உமணர்***
***கணநிரை மணியின், ஆர்க்கும் சுரன்இறந்து,***
***அழிநீர் மீன்பெயர்ந் தாங்குஅவர்***
***வழிநடைச் சேறல் வலித்திசின், யானே***[162]

இப்பாடலில் பாரியின் வள்ளன்மையும் பறம்பின் வளமும் கூறப்பட்டுள்ளது. உரைசால் வண்புகழ்ப் பாரி என்ற பெயரொடு இணைத்துப் பறம்பு குறிக்கப்பெறுவது சிறப்புக்குரியதாம்.

இவ்வாறு பறம்புமலையும் பாரிவள்ளலும் பிரிக்கொணாத வண்ணம் நெருக்கம் கொண்டிருந்ததை, மரணம் கலைத்தது. ஆயினும் இயன்றவரை பறம்புமலை அவ்வள்ளலைக் காத்தது என்றும் கொள்ள முடிகிறது.

**விரிப்பின் அகலும் தொகுப்பின் எஞ்சும்**[163] எனும் கபிலருக்கு வழங்கிய புகழ்மொழியே பறம்புக்கும் பொருத்தமாக அமைவதை இக்கட்டுரை எடுத்தியம்புகிறது.

தொகுப்புரை

1. *பாரி மன்னன் ஆண்ட நாடு பறம்பு நாடு என்பதும், அது முந்நூறு ஊர்களை உடையதாக விளங்கியது என்பதும் இதன்மூலம் உறுதிப்படுத்தப்படுகிறது.*

2. *பறம்புநாடு பாண்டியநாட்டின் எல்லைப் பகுதியை ஒட்டியதாக அமைந்திருந்ததைச் சான்றுகளின்வழி நிறுவ இயலுகிறது.*

3. *பாரியாண்ட முந்நூறு ஊர்களுக்கும் தலைமையிடமாக விளங்கியது பறம்பு எனும் பெயருடைய மலையேயாகும்.*

4. *பறம்பின் வளத்தையும் பாரியின் வள்ளன்மையையும் விரிவாகப் பாடிய கபிலர் பாரி மாண்டவிதம் குறித்துத் தெளிவாகத் தம் பாடலில் புலப்படுத்தவில்லை. மாறாக, பாரியின் மறைவுக்குப் பின்னர் அவர்பாடும் கையறுநிலைப் பாடல்களிலும், பறம்பினைப் பிரிந்து செல்லும் வருத்தம் தோய்ந்த பாடல்களிலும் ஒருவாறு ஊகித்தறிவதற்கான செய்திகள் சில உண்டு. அவையும் ஆய்வுக்குட் பட்டவையே.*

5. *பறம்பின் எல்லைகளாக,*

| | |
|---|---|
| **தென்னெல்லை** | **திருமோகூர் முதல் கீழ் மேலோடிய வையையாற்றங்கரை- பறம்புக்குடி** |
| **கிழக்கெல்லை** | **பறம்புக்குடி- காளையார் கோயில் - முத்து நாடு - அனுமந்தக்குடி- பறம்பு வயல்** |
| **வடவெல்லை** | **பறம்பு வயல் - கானாடுகாத்தான், சோனாபட்டு - திருக்கோளக்குடி - பூலாங் குறிச்சி - இடையாற்றூர் குடுமியான்மலைப்புறம் - பறம்பூர்** |

| | |
|---|---|
| **மேற்கெல்லை** | **பறம்பூர் - மருங்காபுரி - துவரங்குறிச்சி - நத்தம் மலைகளின் கிழக்குப் பகுதி - அழகர் மலைக் கிழக்குப் பகுதி - பறம்புக் கண்மாய் - திருமோகூர்** |

என வரையறுக்க இயலுகிறது.

9. பறம்புமலை குறித்துச் சங்க இலக்கியங்களில் பாடப்பட்டுள்ளன இலக்கியச் சான்றுகள் எடுத்தாளப்பட்டுள்ளன. அவற்றுள், கபிலரே பறம்புமலையை அதிகப் பாடல்களில் பாடியுள்ளார்.

10. அவருடைய பாடல்கள் புறத்திணைப் பாடல்களில் பெயர் சுட்டியும், அகத்திணைப் பாடல்களில் வளங்களைச் சுட்டியும் பறம்பின் பெருமையைப் புலப்படுத்துகின்றன.

11. கபிலர் பாடியனவாகப் புறநானூற்றில் இருபத்தெட்டுப்பாடல்கள் இடம்பெற்றுள்ளன. இவை நேரடியாகவே பறம்பின் வளத்தைப் புலப்படுத்துவனவாக அமைகின்றன. இவை தவிர, கபிலரால் பாடப்பட்ட நற்றிணைப் பாடல் பறம்பின் வளத்தை நேரிடையாக வெளிப்படுத்துகிறது.

12. கபிலர் தவிர பறம்பின் வளத்தைப் பாடியோர் ஔவையார், பரணர், நக்கீரர், நல்லூர் நத்தத்தனார், புறத்திணை நன்னாகனார், பெருஞ்சித்திரனார் ஆகிய இன்னும் பலராவர்.

# இயல் ஒன்று : சான்றெண் விளக்கம்

1. சுப்பிரமணியபிள்ளை. கா., இலக்கிய வரலாறு, முதற்பாகம், ப.68
2. புறநானூறு, பா.எ.168
3. Abraham, Shinu (2003). "Chera, Chola, Pandya: using archaeological evidence to identify the Tamil kingdoms of early historic South India.". Asian Perspectives: the Journal of Archaeology for Asia and the Pacific p.42
4. இராசமாணிக்கனார் மா., தமிழக ஆட்சி, ப. 13
5. மேலது.
6. சேதுப்பிள்ளை, ரா.பி., தமிழர் வீரம், பக்.47-48
7. உ.வே.சா., புறநானூறு மூலமும் உரையும், ப.65
8. கபிலர், புறநானூறு, பா.எ.110
9. மதுரை ஐயம்பெருமாள் ஆசிரியர், பாண்டி மண்டலச் சதகம், பா.63
10. பிள்ளை, கே.கே., தென்இந்திய வரலாறு. ப.66
11. இராகவையங்கார், மு., வேளிர் வரலாறு, ப. 62-64
12. இராகவையங்கார், ரா. பாரிகாதை, பக், 21-22
13. மேலது, ப, 22
14. நீலகண்ட சாஸ்திரி, கே.ஏ. தென்னிந்திய வரலாறு, ப. 132
15. மேலது, 143,
16. ஜகந்நாதன், கி.வா., எழுபெரு வள்ளல்கள், ப.6
17. ஜகந்நாதன், கி.வா. பாரிவேள், முன்னுரை, ப.4
18. மேலது, ப.8
19. துரைசாமிபிள்ளை, ஔவை,, சேரமன்னர் வரலாறு, ப.88

20. மேலது, ப.88

21. மேலது, ப.178

22. மேலது, ப.242

23. துரைசாமிபிள்ளை, ஔவை, புறநானூறு விளக்கவுரை, இரண்டாம் பாகம், பா. 105.

24. கந்தசாமி, V., எம்.ஏ.எம்.எட்., தமிழ்நாட்டின் தல வரலாறுகளும் பண்பாட்டுச் சின்னங்களும், ப. 3

25. கோவிந்தன், கா., புலவர்., சங்கத் தமிழ்ப் புலவர் வரிசை - கபிலர் ப. 15

26. குருசாமி, ம.ரா.போ., கபிலம், முன்னுரை ப.9

27. இராகவையங்கார், மு., வேளிர் வரலாறு, ப.49

28. மேலது, ப.49

29. மேலது, ப.49

30. கனசபை.வி., ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம், ப. 185

31. சுப்ரமண்யன், ந. டாக்டர், சங்ககால வாழ்வியல், ப. 44

32. ஞானசம்பந்தம், அ.ச., அகமும் புறமும், பக். 257-258.

33. இராகவையங்கார், மு., வேளிர் வரலாறு, ப.1

34. மேலது,

35. நச்சினார்க்கினியர், தொல்காப்பியம், பொருளதிகாரம், 40ஆம் பாடல், ப.80

36. கனசபை.வி., ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம், ப. 181

37. இராகவையங்கார், மு., வேளிர் வரலாறு, ப.24.

38. சதாசிவப் பண்டாரத்தார், தி.வை., பாண்டியர் வரலாறு, ப.24.

39. கனசபை.வி., ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம், ப. 185

40. மேலது, பக். 148-149.

41. மேலது, பக். 150-151

42. மேலது, ப. 148

43. பரமகுரு, மரு., பறம்புமலை திருக்கொடுங்குன்றம் வரலாறு, பக்.29-30

44. மேலது, **ப.16**

45. சுப்பிரமணியன், ந., சங்ககால வாழ்வியல், ப.44

46. பரமகுரு, மரு., பறம்புமலை திருக்கொடுங்குன்றம் வரலாறு, ப.29

47. கனகசபை, ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம், ப.98

48. S.l.l.Vol. VII No. 423

49. ஸ்ரீதர், ஸ்ரீ., மதுரை மாவட்டக் கல்வெட்டுகள், ப. IX

50. அர்ச்சுனன், கோ., எம்.ஏ., தொல்லியல் ஆய்வுத் தொகுதி. பக். 178

51. இராச மாணிக்கனார், மா., டாக்டர், பத்துப்பாட்டு ஆராய்ச்சி. ப. 411.

52. S.l.l.Vol. VII No. 429

53. S.l.l.Vol. VII No. 1042

54. S.l.l.Vol. VII No. 210-213

55. Ins. No. 599 of 1926-27

56. சதாசிவப்பண்டாரத்தார், தி.வை., புறநானூற்றுச் சொற்பொழிவுகள், புறநானூறும், கல்வெட்டுகளும், பக்.126-127

57. S.l.l.Vol. VII No. 436

58. A.R. No. 58-1925

59. துரைசாமிபிள்ளை, ஔவை. சு. வரலாற்றுக் காட்சிகள், ப.56

60. வேதாசலம், வெ., பாண்டிய நாட்டில் சமண சமயம், கல்வெட்டு காலாண்டிதழ், ப.13

61. சோமலெ. செட்டிநாடும் செந்தமிழும், ப.34

62. மேலது, ப.551

63. பரமகுரு, மரு. பறம்புமலை- திருக்கொடுங்குன்றம் வரலாறு, ப.32

64. S.l.l.Vol. VII No. 247

65. S.l.l.Vol. VII No. 448

66. S.l.l.Vol. VII No. 372

67. திருப்புத்தூர்க் கல்வெட்டு (130 of 1908)

68. சதாசிவப்பண்டாரத்தார், தி.வை., புறநானூற்றுச் சொற்பொழிவுகள், புறநானூறும், கல்வெட்டுகளும், பக்.126

69. சதாசிவப் பண்டாரத்தார், தி.வை. கல்வெட்டுகளால் அறியப் பெறும் உண்மைகள், பக்.43-44

70. பரணர், அகநானூறு, பா.எ.266.

71. துரைசாமிப்பிள்ளை, சு., ஔவை., பண்டை நாளையச் சேரமன்னர் வரலாறு, ப.24

72. சதாசிவப் பண்டாரத்தார்., தி.வை. பாண்டியர் வரலாறு, ப,24

73. புதுக்கோட்டைச் சாசனப் பாடல்

74. பரமகுரு மரு., பறம்புமலை- திருக்கொடுங்குன்றம் வரலாறு, ப.36

75. மேலது.

76. குடவாயிற் கீரத்தனார், புறநானூறு. 242.

77. புதுக்கோட்டை யிராச்சிய சாசனங்கள் எண்.345

78. சதாசிவப்பண்டாரத்தார், தி.வை., புறநானூற்றுச் சொற்பொழிவுகள், புறநானூறும், கல்வெட்டுகளும், பக்.124-125

79. புருஷோத்தம், வி.பி, சங்ககால மன்னர் காலநிலை வரலாறு, பக்.311-313

80. பரமகுரு மரு., பறம்புமலை- திருக்கொடுங்குன்றம் வரலாறு, ப.37

81. இராசமாணிக்கனார், மா., ஆவணம் அரையாண்டிதழ் - 1, வரலாற்று மையம், ப.39

82. மேலது, ப.69

83. மேலது, ப.60

84. பரமகுரு. மரு., பறம்புமலை- திருக்கொடுங்குன்ற வரலாறு, ப.38

85. மேலது.

86. இராசமாணிக்கனார், மா., பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப.354

87. மேலது, ப.338

88. மேலது, ப.740

89. SII Vol, III Part III No,106

90. கோபாலன், தே., பறம்புக் கண்மாய்க் கல்வெட்டு, தொல்லியல் ஆய்வுத் தொகுதி, ப.18.

91. ஸ்ரீதர்., ஸ்ரீ., மதுரை மாவட்டக் கல்வெட்டுகள், (120-2003) ப.13

92. பரமகுரு, மரு., பறம்புமலை திருக்கொடுங்குன்ற வரலாறு, ப.40

93. இராகவையங்கார்., மு., வேளிர் வரலாறு, ப.63.

94. நீலகண்ட சாஸ்திரி, கே.ஏ., தென்னிந்திய வரலாறு, ப. 127

95. ஞானசம்பந்தன், அ.ச. அகமும், புறமும், ப. 285

96. மேலது, ப. 287

97. மேலது, ப.316

98. கி.வா.ஜ. எழுபெருவள்ளல்கள், ப. 2

99. மேலது, ப. 3

100. வெள்ளைவாரணன், க., சங்ககாலத் தமிழ்மக்கள், ப.46

101. கபிலர், புறநானூறு பா. எ. 105

102.மேலது, பா. எ. 106

103.மேலது, பா. எ. 107

104. http://www.tamilvu.org/slet/l1281/l1281per.jsp?sno=108&file=l128100n

105.கபிலர், புறநானூறு பா. எ. 108

106.கி.வா.ஜ. எழுபெருவள்ளல்கள், ப. 7

107.மேலது, ப. 7

108.ஜகந்நாதன், கி.வா., அறப்போர், ப.XI

109.கனகசபை, வி., ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம், பக்.185-186

110. அ.ச.ஞா. தமிழ் நாகரிகத் தொன்மை ப.12

111. https://groups.google.com/forum/#!msg/thiru-thoazhamai/nYXgK2QNyWQ/l0-uZQ8PyQ8J

112. இராகவையங்கார், ரா., பாரிகாதை, ப.17

113. https://ta.wiktionary.org/wiki/பறம்பு/ ஆதாரங்கள் --- தமிழ்ப்பேரகரமுதலி நூல்கள் (1924-39)+ DDSA பதிப்பு + வின்சுலோ + அகரமுதலி + தமிழ் தமிழ் அகராதி

114. இராகவையங்கார், ரா., பாரிகாதை, பக்.10-11

115. கபிலர், அகநானூறு, பா.எ.2

116. கபிலர், குறிஞ்சிக் கலி, பா.எ.42

117. கபிலர், புறநானூறு, பா.எ.105

118. கபிலர், நற்றிணை, பா.எ.253

119. கபிலர், புறநானூறு, பா.எ.105

120. மேலது, பா.எ.119

121. மேலது, பா.எ.109

122. மேலது, பா.எ.110

123. மேலது, பா.எ.111

124. பாரி மகளிர், புறநானூறு, பா.எ.112

125. மேலது.

126. உ.வே.சா. புறநானூறு மூலமும் உரையும், ப. 235

127. மேலது.

128. மேலது.

129. மேலது. ப.32

130. கனகசபை. வி., ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம், ப.187

131. கி.வா.ஜ., எழுபெருவள்ளல்கள், ப.17

132.கண்ணப்ப முதலியார், பாலூர்.து., சங்ககால வள்ளல்கள், ப.10

133.சஞ்சீவி, ந., சங்ககாலச் சான்றோர்கள், ப.11

134.இராகவையங்கார், மு. வேளிர் வரலாறு, ப.50

135.மேலது.

136.இராகவையங்கார், ரா., பாரிகாதை, ப.40

137.மேலது.

138.இராசமாணிக்கனார், மா., நாற்பெரும் புலவர்கள், ப.43

139.ஔவை துரைசாமி பிள்ளை, சேரமன்னர் வரலாறு, ப.242

140.மேலது, ப.234

141. மேலது, ப.234

142.சேதுப்பிள்ளை., ரா.பி., தமிழர் வீரம், ப.49

143.பரமகுரு, மரு., பறம்புமலை திருக்கொடுங்குன்றம் வரலாறு, ப.61.

144.கபிலர், புறநானூறு, பா.எ.113.

145.மேலது, பா.எ.114.

146.மேலது, பா.எ.115.

147.மேலது, பா.எ.116

148.மேலது, பா.எ.117.

149.மேலது, பா.எ.120.

150.மேலது, பா.எ.200.

151. மேலது, பா.எ.201

152.மேலது, பா.எ.202.

153.மேலது, பா.எ.236.

154.மேலது, பா.எ.337.

155.மேலது, பா.எ.347.

156.கபிலர், பதிற்றுப்பத்து, ஏழாம்பத்து, பா.எ.61.

157.நல்லூர் நத்தத்தனார், சிறுபாணாற்றுப்படை, பாடல் அடிகள், 89-92.

158.நன்னாகனார், புறநானூறு, பா.எ.176.

159.பெருஞ்சித்திரனார், புறநானூறு, பா.எ.158.

160.மிளைக்கந்தனார், குறுந்தொகை, பா.எ.196.

161. நக்கீரர், அகநானூறு, பா.எ. 78.

162.ஔவையார், அகநானூறு, பா.எ., 303.

163.பொருந்தில் இளங்கீரனார், புறநானூறு, பா.எ.53.

# இயல் இரண்டு
# பக்தி இலக்கியக் காலத்தில் பறம்புமலை

பாரியின் மறைவுக்குப் பிறகு அவனது நாடாகிய பறம்புநாடும் பறம்புமலையும் வேறு எந்த இலக்கியங்களிலும் விரிவாகக் குறிப்பிடப் பெற்றதாகத் தெரியவில்லை. ஆனால் கி.பி. ஏழாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றிய சைவசமய குரவர்களுள் ஒருவராகிய திருஞானசம்பந்தப் பெருமானால் இது பாடல் தலமாகப் புகழ் பெற்றது. அப்போது இம்மலையூர் திருக்கொடுங்குன்றம் எனப் பெயர் பெறுகிறது.

அவர் காலத்தில் திருக்கொடுங்குன்றத்தில் (பறம்புமலையில்) கோயில் தோன்றியுள்ளது. அக்கோயிலை மன்னர்கள் பலரும் எழுப்பியுள்ளனர். இது குறித்த சான்றுகளைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

சமணமும் பௌத்தமும் நிலைகொண்டிருந்த அக்காலத்தில் சைவ சமயத்தை வளர்க்க வேண்டி, சைவசமய குரவர்கள் பதிகள்தோறும் சென்று பாடல்கள் பாடி இறைவனின் பெருமைகளையும் அத்தலத்தின் சிறப்பினையும் புகழ்ந்துள்ளனர்.

திருஞானசம்பந்தரைப் போலவே திருநாவுக்கரசரும் திருக்கொடுங் குன்றத்து இறைவனைத் தனது வைப்புத்தலப் பாடலில் போற்றிப் பாடியுள்ளார். சுந்தரர் பெருமான் பாரியின் கொடைத் தன்மையைச் சிவபெருமானின் பெருமையோடு ஒப்புமைப்படுத்திப் பாடியுள்ளார். மாணிக்கவாசகர், திருக்கொடுங்குன்றத்துத் தேனின் பெருமையைப் போற்றிப் பாடியுள்ளார்.

நாயன்மார்களின் வரலாற்றைத் தொகுத்த சேக்கிழார் பெருமான் திருஞானசம்பந்தரின் திருக்கொடுங்குன்ற வருகையையும் தமது திருத் தொண்டர் புராணத்தில் பதிவு செய்துள்ளார்.

திருக்கொடுங்குன்றத்தில் எழுந்தருளியுள்ள முருகப் பெருமானை அருணகிரிநாதர் போற்றித் திருப்புகழ் அருளியுள்ளார். வள்ளலார் எனப்

பெயர்பெற்ற இராமலிங்க அடிகளார் இத்திருத்தலத்து இறைவனைத் தனது திருவருட்பாவில் நினைந்து போற்றியுள்ளார்.

இவ்வாறு பல அருளாளர்களால் போற்றப்பெற்ற நிலையில், பக்தி இலக்கிய காலத்தில், வரலாற்றுத் தொடர்பினைப் பறம்புமலை பெறுகிறது. திருக்கோயில் அமைந்த இத்திருத்தலத்தின் வரலாறு தொடர்பான கல்வெட்டுக்களிலும் பதிவாகியுள்ளதை இவ்வியல் விரிவுற விளக்குகிறது.

## பறம்புமலையின் பெயர் மாற்றங்கள்

சங்ககாலத்துப் பறம்புமலையான இப்பகுதி, பாரி ஆண்ட பழமைச்சிறப்புடையது. அவனது பெயராலேயே பாரீச்சுரம் என்று கல்வெட்டுக்களில் குறிக்கப்பெற்றுள்ள இம்மலையும் மலைச்சாரலில் அமைந்த நகரும் சமய காலத்தில் திருக்கொடுங்குன்றம் எனப் பெயர் பெறுகிறது. பாரிமகளிர் பாடிய பாடல்கள் உள்ளிட்ட சங்கப்பாடல்களில் குன்று என்பதாகவே சுட்டப்பெறும் இம்மலைத்தலம் நெடிய வளைந்த குன்றுகள் கொண்டு விளங்குவதால், கொடுங்குன்றம் என்ற காரணப்பெயர் கொண்டு அழைக்கப்பெற்றிருக்கலாம். பாடல்பெற்ற தலம் ஆனதும் திரு என்னும் அடைமொழி கொண்டு திருக்கொடுங்குன்றம் எனப் பெயர் பெற்றிருக்கிறது. கொடுங்குன்றத்தம்பிரானே என்று அருணகிரிநாதரால் போற்றப்பெறுகிற இறைவனாகிய பிரான் வீற்றிருந்து அருள்பாலிக்கும் தலம் என்பதால் பிரான்மலை எனப் பிற்காலத்தில் பெயர் பெற்றிருக்க வேண்டும். இவை தொடர்பான விளக்கங்களையும் உரிய சான்றுகளையும், அவற்றிடைய பறம்புமலையின் பரிமாணங்களையும் இவ்வியல் தொகுத்தும், பகுத்தும் ஒப்பிட்டும் விளக்குகின்றது.

## கோயில் எழுந்த வரலாறு - சமயங்களின் தோற்றம்

சங்ககாலத்திலிருந்தே சமயங்கள் இயங்கி வந்தன. ஆனால் அவை சமயக்கோட்பாடாகவில்லை. சங்ககாலத் தமிழர்களிடையே சமயநிலை சிறப்பாக இடம் பெற்றிருந்தது.

***சமயவாழ்வு அவர்களின் உலகியல் வாழ்வை ஆதிக்கமாகக் கொள்ளவில்லை***[1] என்பது ஆய்வாளர்கள் கருத்தாகும்.

சங்கப் பாடல்களில் வரும் தெய்வம், சமயம் பற்றிய குறிப்புகள் அளவிறந்தனவேயாகும். ஒவ்வொரு பகுதியிலும் வாழும் மக்கள் தாம் அன்றாடம் வழிபடும் தெய்வங்களுக்கென உருவு அமைத்து வழிபட்டனர் என்பதனை,

***தெய்வம், உணாவே மாமரம் புள் பறை***
***செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ***[2]

என்ற தொல்காப்பியச் சூத்திரத்தால் அறியலாம்.

## சங்ககாலச் சமயப் பதிவுகள்

திருக்கோயில் எழுப்பி வழிபடும் மரபும் தமிழகத்தில், பண்டைக் காலத்திலிருந்தே வழக்கில் இருந்திருக்கின்றது. சங்ககாலத்து மன்னன் படுக்கையிலிருந்து எழும்போதே அன்றாடம் ஆற்றி முடிக்க வேண்டிய கடமைகளைப் பற்றிச் சிந்திக்கிறான். இதை ஆசாரக்கோவை என்ற நூல்,

***வைகறை யாமம் துயிலெழுந்து தான்செய்யும்***
***நல்அறனும் ஒண்பொருளும் சிந்தித்து***[3]

என்ற அடிகளால் புலப்படுத்தும். இக்கடமை முடிந்தவுடன் அரசன் நீராடிவிட்டு உடையுடுக்கிறான். அடுத்துக் கடவுட் பூசையில் ஈடுபடுகிறான்.

***வல்லோன் தைஇய வரிப்புனை பாவை***
***முருகு இயன்று அன்ன உருவினை ஆகி***[4]

என்ற மதுரைக்காஞ்சியின் பாடல்அடிகள் அரசனின் கடவுள் வழிபாட்டை எடுத்துக்காட்டுகிறது.

## கோயில் தொடக்கம்

திருக்கோயில்களை எழுப்பி வழிபடும் மரபு கிறித்து பிறப்பதற்குப் பல நூறு ஆண்டுகளுக்கு முன்பே தமிழகத்தில் தொடங்கப்பெற்று விட்டது என்பதை வரலாறும் இலக்கியமும் எடுத்துக்காட்டுகின்றன.

கடல் கொண்ட தென்குமரிக் கண்டத்திலிருந்த தென்மதுரை என்று நகரத்தில் நகரமனைய திருக்கோயில் இருந்ததைப் புறநானூறு பேசுகிறது. குமரியாறு கடல் கொள்ளப்படுவதற்கு முன்னும், தென்குமரி நாட்டில் பஃறுளியாறு கடல் கொள்ளுவதற்கு முன்னும் எழுந்த பாடல்கள் புறநானூற்றில் உள்ளன. பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி பஃறுளியாறு கடல் கொள்ளப்படுவதற்கு முன் திகழ்ந்தவன். **முக்கட் பெருமான் என்னும் முழுமுதற் கடவுளொருவர்க்கே இம்மன்னன் வணக்கம் காட்டும் இயல்பினன்** என்றும், **அக்கடவுள் முனிவர்களால் பரவப் பெறுபவர்** என்றும், அப்பெருமானுக்கு **நகரத்தைப் போல் அகன்று உயர்ந்து அமைந்த திருக்கோயில் அவ்வளவு பழங்காலத்திலேயே இருந்தது**[5] என்றும் அறிய முடிகிறது.

## சங்ககாலத்தில் கோயில்கள்

சங்க இலக்கிய எட்டுத்தொகையுள் ஒன்றாகிய பரிபாடல் திருமாலைப் பற்றி ஆறுபாடல்களையும், முருகனைப் பற்றி எட்டுப் பாடல்களையும் கொண்டுள்ளது. இது சங்ககாலத்தின் கடவுள் வழிபாட்டு முறைகளை விரிவாக விளக்குவதாக அமைகிறது.

குன்றத்தில் அமைந்த கோயில்களைப் பற்றிய குறிப்புகளைப் பரிபாடல் மிகுதியாகத் தருகிறது. திருப்பரங்குன்றம், இருங்குன்றம் ஆகியவை அவற்றுள் குறிப்பிடப் பெற்றவை. மேலும் சிவபெருமான், முருகன், கண்ணன், அகலிகை முதலானவர்களைப் பற்றிய புராணக் கதைகள் பரிபாடலில் காணப்படுகின்றன.

## பலவகைக் கோயில் குறித்த சங்கப் பதிவுகள்

ஆனால் இத்திருக்கோயில்கள் முன்னர் கோட்டம், தேவகுலம் என்ற பெயரினவாக இருந்தன என்பதைச் சிலப்பதிகாரம் சுட்டுகிறது என்றாலும் இப்பெயர்கள் சங்க இலக்கிய காலத்திலேயே வழக்கில் இருந்து வந்தன என்பதைக் கீழ்க்காணும் சான்றுகள் உறுதிப்படுத்துகின்றன.

***புத்தேளிர் கோட்டம் வலம்செய்து*** ***(கலி)***

***அணங்குடை முருகன் கோட்டம்*** ***(புறம்)***

*தற்காலக் கேரளக் கோயில்கள் போலவே மரத்தால் அமைக்கப் பெற்ற கோயில்களும் சங்ககாலத் தமிழகத்தில் இருந்தன. இதை,*

***மணிப் புறாத் துறந்த மரஞ்சேர் மாடத்து***
***எழுது அணி கடவுள் போகலின்*** ***(அகம்)***

*என்னும் தொடர்களால் அறியலாம். மேலும் போற்றுவார் இன்றியும் வழிபடுநர் இன்றியும் சில கோயில்கள் பாழாகியதை,*

***இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென***
***..... கடவுள் போகலின்*** ***(அகம்)***

***கருவொடு பெயரிய காண்பின் நல்லில்*** ***(நெடுநல்வாடை)***

*என்ற அடிகள் குறிக்கின்றன.*

*இதுபோன்றே கருவறை - சிலை அமைத்து வழிபடும் வழக்கம் இருந்தது என்பதையும் சங்கப்பாடல்கள் குறிப்பிடுகின்றன.*

***நீடுகுலைக்***
***காந்தன் அம்சிலம்பில் களிறு படிந்தாங்கு***
***பாம்பு அணைப்பள்ளி அமர்ந்தோன்....***
***அருந்திறல் கடவுள் வாழ்த்தி*** ***(பெரும்பாணாற்றுப்படை)***

***முருங்கை மேய்ந்த பெருங்கை யானை***
***வெரிந் ஓங்கு சிறுபுறம் உரிஞ்ச ஒல்கி***
***இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென*** ***(அகம் - 157)***

***இப்பாடல்கள் அடிகளின்வழி மிக உயர்ந்த, கர்ப்பக்கிரகத்தோடு கூடிய திருக்கோயில்களைச் சங்ககாலத் தமிழர் அமைத்து, வழிபட்டு வாழ்ந்தனர் என்று அறிய முடிகிறது.***[6]

## கபிலர் பாடலில் கடவுட் குறியீடும் பக்தியின் தொடக்கமும்

*கபிலர் பாரியைப் புகழ்ந்து பாடும் பாடலில்,*

***நல்லவும் தீயவும் அல்ல குவிஇணர்ப்***
***புல்இலை எருக்கம் ஆயினும்***
***கடவுள் பேணேம் என்னா ஆங்கு***
***மடவர் மெல்லியர் செல்லினும்***
***கடவன் பாரி கைவண் மையே***[7]

*எனக் கடவுள் என்னும் சொல்லைக் குறிப்பிடுகிறார். இதற்குப் பொருள் கூறவந்த உ.வே.சா.* ***நல்லனவென்றும் தீயனவென்றும் சொல்லப் படுவன சூடும் பூவாதலால் அவை இரண்டினும் வைத்து எண்ணப்படாத குவிந்த பூங்கொத்தினையும் புல்லிய இலையையுமுடைய எருக்கம்பூவா-யினும் ஒருவனுடையவற்றைத் தெய்வங்கள் விரும்பேமென்னா***[8] *எனக் குறிப்பிடுவார்.*

## பாரிகாலத்துச் சிவவழிபாடு

*சிவபெருமான் அன்பால் அருச்சிக்கும் எருக்கம்பூவையும் ஏற்றுக் கொள்ளும் பேரருளாளன் என்பதை இப்பாடல் சிவமணம் கமழ எடுத்துரைக்கின்றது. எனவே,* ***பறம்புமலையில் வள்ளல் பாரி காலத்திலேயே (ஏறத்தாழ கி.பி. 120 - 160) சிவ சிந்தனை மலர்ந்துள்ளதை அறிகின்றோம். அக்காலத்தில் இத்திருமலையில் சிவன்கோயில் இருந்தது எனக் கூற முடியாதாயினும் சிவவழிபாடு இருந்தது***[9] *என்பதை இப்பாடல் கொண்டு உய்த்துணரலாம்.*

*இது தவிரவும் கபிலர் குறிஞ்சிக்கலிப் பாடலொன்றில்,*

***இமயவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணர்***[10]

*எனச் சிவபெருமான் கங்கையைத் தரித்துள்ள அருட்செயலைக் குறிப்பிட்டுப் போற்றியுள்ளமை இங்கு நினைக்கத்தக்கதாகும்.*

பாரியின் பெருமைகளாக, **கருநிறம் கொண்டு நிரம்பிய கூந்தல் உடைய மகளிரின் தந்தை - அசைகின்ற மூங்கில்கள் ஒலிக்கும் உயர்ந்த சிகரங்களையுடைய நாட்டின் வீரம் சிறந்தவன் - புலவர்கள் எவ்வளவு பாடினாலும் புகழ் ஓயாத நற்பண்புகளை உடையவன். பகைவர்கள் புறமுதுகிட்டு ஓடுகின்றமை கண்டு (அவர்பின் தொடர்வதற்கு வெட்கப்பட்டு) அவர்களின் (வீரக்) கழலின் ஆரவாரத்தைக் கேட்டு நிற்கும் வீரப் போரினை விரும்புகின்ற முருகனை ஒத்தவன்**[11] என்பதை,

***..... பகைவர்***
***ஓடுகழல் கம்பலை கண்ட***
***செருவெஞ் சேஎய் பெருவிறல் நாடே***[12]

என்னும் புறநானூற்றுப் பாடலில் கபிலர் பாரியை முருகக் கடவுளோடு இணைத்துக் காட்டுகிறார்.

இதன்மூலம் கபிலர் காலத்திலேயே கடவுள் வழிபாடுகளும், புராணக் கதைகளும் வழக்கில் இருந்தன எனக் கொள்ள முடியும். அவ்வழியே உணர்ந்தால் பறம்புமலையில் கோயில் இருந்திருக்கக் கூடும் எனவும் கருதுதற்கு இடமுண்டு.

பறம்புமலையும் பாரீச்சுரமும்

இதற்குச் சான்றாக, **பாண்டி நாட்டுத் தேவாரம் பெற்ற தலங்களுள் கொடுங்குன்றமென வழங்கும் இம்மலையிற் றிருக்கோயில்கொண்ட சிவபிரானுக்குப் பாரீசுவரமுடையார் என்றொரு திருநாமம் பழைய சாஸனமொன்றில் உள்ளதென்று தெரிகிறது. இதனால் அத்திருப்பதிக்குப் பாரீசுவரம் என்ற பெயரும் முன்னாளில் வழங்கி வந்தமை விளங்கும். பாரீசுவரர்க்குரிய தலம் பாரீசுவரம். பாரீசுவரர் என்பதற்குப் பாரி என்பானுக்கு அநுக்ரகம் புரிந்த ஈசுவரர். அல்லது பாரி பூசித்த ஈசுவரர் என்பன பொருளாகும்**[13] என்னும் கருத்தை இங்கு பொருத்திக் காணலாம்.

இதற்கான கல்வெட்டுச் சான்றுகள் இன்றும் இந்தக் கோயிலின்கண் உள்ளன என்பதைக் கீழ்க்காணும் சான்றுகள் மெய்ப்பிக்கின்றன.

பிரான்மலையின் மேலுள்ள விசுவநாதர் கோயில் கருவறை வடக்குப்புற அடிப்படைச் சுவரில்,

> **"...... இந்நாட்டு அறநூற்றுவனேரிப் பற்றில்**
> **பாரிசுரமும் இக்களங்களில்"[14]**

என்றும், அதே கோயில் கருவறையின் பின்புறம் அடிப்படை முகப்புப் பட்டைத் தொடரில்,

> **"......இந்நாட்டு அறநூற்றுவனேரிப் பற்றில்**
> **பாரிசுரமும் இவ்வூர்கள்....."[15]**

என்றும் இரு கல்வெட்டுக்கள் காணப் பெறுகின்றன.

கல்வெட்டாய்வாளர் சி.கோவிந்தராசனார், **பறம்புமலைக்குத் தென்கிழக்காக வேந்தன்பட்டிக்குச்செல்லும்அடிவாரச்சாலையின்இடையே ஏரிகளுடன் அமைந்த மலை வளம் நிறைந்த பகுதியே அறுநூற்றுவனேரிப் பற்றென்பதை அங்குள்ள சொக்கநாதர் கோயிற் கல்வெட்டுச் செய்தியால் அறிய முடிந்தது. எனவே அப்பகுதியிலேயே பாரீச்சுரமும் அமைந்திருக்க வேண்டும்' இவற்றையெல்லாம் கொண்டு பாரியின் பறம்புநாடு, பறம்புமலை ஆகியவற்றின் சார்பாகவே பாரீச்சுரமென்னும் பாரியூரும் மக்களாலோ, பிற மன்னராலோ தோற்றுவிக்கப்பட்டிருக்கும் உண்மை புலனாகும்[16]** என்று கூறுவார்.

இக்கருத்தை முன்மொழிந்தே, **பாரீச்சுரம் என்பது ஊர் என்று இக்கல்வெட்டுக்கள் உணர்த்தினாலும் பாரியின் பெயரால் அமைக்கப் பெற்ற சிவன் கோயில் என்ற பொருளே பொதுவாக அமைவதாகும். இந்தப் பாரீச்சுரம் அறநூற்றுவனேரிப் பற்றில் அமைந்திருப்பதாகக் கல்வெட்டுக்கள் குறிக்கின்றன[17]** என்பார் மரு. பரமகுரு.

பாரி எடுத்த கோயிலே பாரீச்சுரம்

**பாரிவள்ளல் சைவ சீலனாக விளங்கினான். அவ்வள்ளலுக்குரிய பறம்பு நாட்டிற் காணப்படும் பாரீச்சுரம் என்னும் சிவாலயம் அவன் எடுத்த**

**திருக்கோயிலாகக் கருதப்படுகிறது. பாரீச்சுரம் என்பது பாரியால் வழிபடப் பெற்ற சிவபிரான் கோயில் கொண்ட தலம் என்ற பொருளைத் தரும்.**

**அப்பாரீச்சுரம் தேவாரப் பாடல் பெற்ற கொடுங்குன்றத்துக்கு அருகேயுள்ளது. எனவே, இக்காலத்திற் பிரான்மலை யெனப்படும் கொடுங்குன்றத்தைத் தன்னகத்தேயுடைய பறம்பு நாடே பாரியின் நாடென்பதும் அங்குள்ள பாரீச்சுரம் அவன் எடுத்த திருக்கோயில் என்பதும் இனிது விளங்கும்**[18] என்னும் ரா.பி.சேதுப்பிள்ளையின் கூற்று தற்காலப் பிரான்மலையே சங்ககாலப் பறம்புமலை எனும் கருத்தை உறுதி செய்கிறது.

இக்கருத்தையொட்டியே, **பறம்புமலையின் ஓரிடத்தில் பாரி சிறிய அரண்மனையைக் கட்டிக் கொண்டிருந்தான். வேறு ஓரிடத்தில் சிவபெருமானுக்குரிய கோயில் இருந்தது**[19] என்று கி.வா.ஜகந்நாதன் குறிப்பிடுகிறார்.

மேலும், **கபிலர் பாரியைக் காணப் பறம்புமலைக்கு வந்தபோது, கபிலர் பாரியின் இயல்புகளை நன்குணர்ந்து கொண்டார். பறம்புமலையில் இருந்த பாரீசன் திருக்கோயிலுக்குச் சென்று இறைவனைத் தரிசித்தார்**[20] எனவும் பறம்புமலைக் கோயிலில் கபிலர் வழிபட்டதையும் குறிப்பிட்டுக் காட்டுகிறார்.

**பாண்டிநாட்டில் திருப்பத்தூர் அருகில் பாரீச்சுரம் என்ற கோயில் ஒன்று இருந்தது என்று பிரான்மலையில் உள்ள மங்கைபாகரது கோயிலில் காணப்படும் சுரபிநாட்டு அறுநூற்றுவனேரிப் பற்றில் பாரீசுவரமும் என்ற கல்வெட்டு வரியால் அறியலாம். பாரி வழிபட்ட கோயில் பாரீசுவரம் எனலாம். கடையேழு வள்ளல்களில் ஒருவனான பாரி தொடர்பான கோயில் இருந்தது நற்செய்தியாகும்**[21] என்னும் கருத்தையும் இங்கு ஒப்பு நோக்க வேண்டியுள்ளது.

இவ்வாறு சங்ககாலத்திலிருந்தே கோயில்கள் பற்றிய பதிவுகள் பறம்புமலையோடு தொடர்ந்து விளங்கின என்பதை உணர்ந்துகொள்ள முடிகிறது.

மூவர் முற்றுகைக்குப் பின்னர் இக்கோயிலின் நிலை பற்றிய தகவல்கள் கிடைக்கவில்லை. ஆயினும், இந்தக் கோயில் இருந்த இடத்திலேயே தற்காலத்திலிருக்கும் கோயில் தோன்றியிருக்க வேண்டும் என்பதும் உணரக் கூடியதே.

## கோயில் அமைப்புகள்

தமிழகத்தில் ஆதிகாலத்துக் கோயில்கள் மரத்தாலும் செங்கலாலும் கட்டப்பெற்றவை. அவை தற்போது இல்லை. எனினும் ஏழாம் நூற்றாண்டினவும் இதற்கு முற்பட்டவையான கோயில்கள் பல இருந்ததாகத் திருநாவுக்கரசு சுவாமிகள் தமது திருத்தாண்டத்தில் கோயில் கட்டிட வகைகளின் பெயர்களைக் குறிப்பிடுகிறார்.

**பெறுக்காறு சடைக்கணிந்த**
**பெருமன் சேரும் பெருங்கோயில்**
**எழுபதினோடு எட்டும் மற்றும்**
**கரக்கோயில் கடிபொழில் சூழ்**
**ஞாழல் கோயில் கருப்பறில்**
**பொருப்பனைய கொடுடிக் கோயில்**
**இருக்கோதி மறைவர்கள்**
**வழிபட்டு ஏத்தும் இளங்கோயில்**
**மணிக்கோயில் ஆலக்கோயில்**
**திருக்கோயில் சிவன் உறையும்**
**கோயில் சூழ்ந்து தாழ்ந்து இறைஞ்சத்**
**தீவினைகள் தீரும் அன்றே**[22]

இப்பாடலில் சோழன் செங்கணான் கட்டிய மாடக்கோயில்களாக எழுபத்தெட்டுக் கோயில்களைக் குறிப்பதோடு, கரக்கோயில், ஞாழற் கோயில், கொடுடிக் கோயில், இளங்கோயில், மணிக்கோயில், ஆலக் கோயில் என்ற ஆறுவகைக் கோயில்களைக் குறிப்பிடுகிறார் திருநாவுக்கரசர்.

## மலைக்கோயில்கள்

*மேற்கண்டவற்றில் மாடக்கோயில், பெருங்கோயில் எனும் மலைக்கோயில்கள் பற்றி மட்டும் இங்கு விளக்கப் பெறுகிறது.*

*பெருங்கோயில்கள் எல்லாம் செய்குன்றுகள் மேல் எடுக்கப் பெற்றதால் மலைக்கோயில் என்பர். சம்பந்தர் திருநெல்லூரில் உள்ள பெருங்கோயிலை* ***"மலை மல்கு கோயில்"*** *என்று குறிப்பிடுவார்.* ***நன்னிலத்துப் பெருங்கோயில், குடவாயில் முதலியன கூறப் பெறும். மாடக்கோயில் பெருங்கோயில் எனினும் ஒக்கும்.***[23]

*பறம்புமலையாகிய திருக்கொடுங்குன்றத்தில் அமைந்திருக்கும் கோயில் மலைக்கோயில் வகையைச் சேர்ந்ததாகும்.*

## பாண்டிப் பதினான்கு தலங்களுள் ஒன்று திருக்கொடுங்குன்றம்

*இடைக்காலமாகிய பக்தி இலக்கியக் காலத்தின் தோற்றம் கி.பி. 7ஆம் நூற்றாண்டாகும். அக்காலத்தில் பறம்புமலை திருக்கொடுங்குன்றம் என்னும் பெயரில் அழைக்கப் பெற்று, பாண்டிப் பதினான்கு தலங்களுள் ஒன்றாகப் பெயர் பெற்றது.*

*பாண்டிய நாட்டில் இறைவன் உறைவிடங்களாக உள்ள கோவில்கள் பலவாக இருந்தாலும், அவற்றுள் நால்வரால் பாடப்பட்ட பெருமை சான்ற தலங்கள் பதினான்காகும். அவையே* ***மதுரை, (இது திருவாலவாய் என்றும் கூறப்படும்.) திருவாப்பனூர், திருப்பரங்குன்றம், திருவேடகம், திருக்கொடுங்குன்றம், திருப்புத்தூர், திருப்புனவாயில், திருவிராமேச்சுரம், திருவாடானை, திருக்கானப்பேர், (இதனைக் காளையார்கோவில் என்பர்.) திருப்பூவனம், திருச்சுழியல், திருக்குற்றாலம், திருநெல்வேலி என்பன.***[24] *இதையே,*

> ***கூடல் புனல்வாயில் குற்றாலம் ஆப்பனூர்***
> ***ஏடகம் நெல்வேலி இராமேசம் - ஆடானை***
> ***தென்பரங்குன் றம்சுழியல் தென்திருப்புத் தூர்கானை***
> ***வன்கொடுங் குன்றம்பூ வணம்***[25]

*என்னும் பழம்பாடல், தேவாரம் பெற்ற பாண்டிநாட்டுச் சிவத்தலங்கள் பதினான்கையும் தொகுத்துரைக்கின்றது.*

### குன்றக் கோயில்கள்

*பாண்டி பதினான்கு திருத்தலங்களில் இரண்டு மட்டும் குன்றங் களாகும். ஒன்று திருப்பரங்குன்றம். மற்றொன்று இந்தத் திருக்கொடுங்குன்றம்.* **“கொடு’’ என்றால் வளைவு என்று பொருளாகும். இயல்பாகவே வளைந்த முகடுடைய குன்றம் என்ற பொருளில் திருப்பரங்குன்றத்தினின்றும் வேறு பிரித்துக் காட்டும் வகையில் இப்பறம்புமலையை ஆன்றோர் “கொடுங்குன்றம்’’ என்று வழங்கினர் எனலாம். பாரியது அருமையறியாப் பகைவர் செய்த கொடுமைக்குக் களமாக அமைந்துவிட்டதால், “கொடுங்குன்றம்’’ எனவும் பெயர் பெற்றிருக்கலாம் என்று அருள்நெறித் தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் நயம்படக் கூறுவார்.[26]**

### சதுர்வேதி மங்கலம்

*சுந்தரசோழன் காலத்தில் திருக்கொடுங்குன்றம் சதுர்வேதி மங்கலமாகவும் திகழ்ந்திருக்கிறது என்பதை அறிய முடிகிறது. திருக்கொடுங்குன்ற நாதர் கோயில் மண்டபச்சுற்றின் தென்புறச் சுவரில்* **“திருநெடுங்குன்றமான சுந்தரராசச் சதுர்வேதி மங்கலத்து’’ என்று பெயர் பெற்றிருப்பதும் இவ்வூர், “சுந்தரராசச் சதுர்வேதிமங்கலம்’’ என்று இரண்டாம் பராந்தகனாகிய சுந்தரச் சோழன் (கி.பி 957-970) பெயரால் சதுர்வேதி மங்கலமாகப் பெயர் பெற்றிருப்பதும் புலனாகின்றது[27]** *என்பார் சி.கோவிந்தராசனார். நான்கு வேதபாராயணம் செய்யும் மங்கல ஊராகப் பறம்புமலை விளங்கியதை இதன்வழி உணரலாம்.*

### வேறு பெயர்கள்

*இத்திருக்கோயிலில் உள்ள முதற் குலோத்துங்க சோழன் காலத்துக் (கி.பி 1070) கல்வெட்டு முதல் கி.பி 1743 வரையிலான கல்வெட்டுக்கள் பலவற்றில்* **திருக்கொடுங்குன்றம்** *என்றும் இதே பொருள்தரும்* **திருமலை** *என்றும் குறிக்கப்பெற்றுள்ளன.*

*கி.பி 15ஆம் நூற்றாண்டினராகிய அருணகிரிநாதர் சுவாமிகள் தம் திருப்புகழில்* **கொடுந்திண்குன்றம்** *என்று குறிக்கின்றார். இப்பெயர்,* **திணிநெடுங்குன்றம்** *என்று கபிலர் குறிப்பதோடு மிக நெருங்கிய தொடர்புடையதாக அமைந்துள்ளது.*

*எனவே,* ***சங்ககாலத்தில் இம்மலையைக் குறித்த "திணிநெடுங்குன்றம்" என்பது, 7 ஆம் நூற்றாண்டில் கொடுங்குன்றம் என்றும், 10 ஆம் நூற்றாண்டில் திருநெலக்குன்றம் என்றும், 11ஆம் நூற்றாண்டு முதல் இன்றுவரை "திருக்கொடுங்குன்றம்" (திருமலை) என்றும் திருத்தலப் பெயராக வழங்கப் பெற்று வருவது[28]*** *இதன்மூலம் உறுதிப்படுத்தப்படுகிறது.*

*பாண்டிய மன்னன் மெய்க்கீர்த்திகளில் வேள்விக்குடிச் செப்பேட்டில் பறம்பு பற்றிய குறிப்பினைக் காண முடிகிறது. மேலும் பொன்னமராவதியில் பராந்தக நெடுஞ்சடையன் (768-815) தங்கியிருந்த செய்தியும் குறிப்பிடப் பெற்றுள்ளது. இதனை,*

> ***உரிமைச்சுற்றமோ டவர்யானையும் புரிசையுமதிற் புலியூரும்***
> ***பகல்நாழிகை யிறவாமை இகலாழியுள் வென்றுகொண்டும்***
> ***வேலாழியும் வியன்பறம்பு மேலாமைசென் றெறிந்தழித்தும்***
> ***இரணியகர்ப்பமுந் துலாபாரமுந் தரணிமிசைப் பலசெய்தும்***
> ***அந்தணர்க்கும் அசக்தர்க்கும் வந்தணைகவென் றீத்தளித்த***
> ***மகரிகையணி மணிநெடுமுடி அரிகேசரி யசமசமன் சிரீமாறவர்மன்***
> ......................................
> ***பூங்கமல வாவிசூழ் பொன்னமரா பதியில்***
> ***ஒத்துலகந் தாங்கும் உயர்மா மேருவைக்***
> ***கொணர்ந்துவைத் தனையசோதி மணிமண்ட பத்திருந்து***
> ***சோலைமலி பழனச் சோணாடு தான்மழந்து[29]***

*என்னும் குறிப்பினால் உணரலாம்.*

கோயிலைக் கட்டியோர்

*சங்ககாலத்திலிருந்தே புகழ்பெற்றிருந்த பறம்புமலை - திருக்கொடுங்*

குன்றத் திருக்கோயிலை முதலில் கட்டியவர் பெயர் அறியப் பெறவில்லையா-யினும், இத்திருக்கோயிலுக்குப் பல மன்னர்களும், குறுநில மன்னர்களும், மக்கள் குடியினரும் பேதமின்றித் தொண்டு செய்து வந்திருக்கிறார்கள் என்பதை வரலாற்றின்வழி அறிய முடிகிறது.

திருக்கொடுங்குன்றமாகிய இந்தப் பிரான்மலையில் அமைந்துள்ள திருக்கோயில் முதன்முதலில் யாரால் கட்டடப் பெற்றது என்பது தெரிய வில்லை. திருஞானசம்பந்த சுவாமிகள் இத்திருத்தலப் பதிகத்தில் 'பழநகர்' என்று பாடியுள்ளார். **முதுகுடுமிப் பெருவழுதி காலத்தில் இருந்த சிவனுறையும் கோயில் 'முக்கட் செல்வர் நகர்' எனப் புறநானூறு பேசுகிறது. 'முக்கட் செல்வர் நகர்' என்பது 'முக்கட்செல்வர் திருக்கோயில்' என்று உரையாசிரியன்மார் பொருள் கொண்டுள்ளனர். எனவே, திருஞானசம்பந்தர் காலத்தில் 'பழைய கோயில்' இத்திருத்தலத்தில் இருந்தது என்பது அவர் வாக்கால் தெரிகிறது. வேறொரு பாடலில் 'பெருநகர்' என்று குறிப்பிடுவார் சம்பந்தப் பெருமான். எனவே, அப்பர் பெருமான் குறிப்பிடும் பழைய காலத்து எண்வகைக் கோயில்களில் ஒன்றான பெருங்கோயில் வகையைச் சேர்ந்த கோயிலாகவும் இருந்திருக்கலாம். பெருங்கோயில் என்பது செய்குன்றுகள் மேல் எடுப்பிக்கப் பெற்றதாகும். இதனை மலைக்கோயில்கள் எனவும் கூறலாம் என்பார் அறிஞர் தி.வை. சதாசிவப் பண்டாரத்தார். எனவே, திருஞான சம்பந்தர் காலத்தில் இங்கு கோயில் இருந்தது என்று உறுதிப்படுத்தலாம்**[30] என்பார் மரு.பரமகுரு.

இக்கோயிலில் கட்டுமானப் பணிகளும், புனரமைப்புப் பணிகளும் காலந்தோறும் நிகழ்ந்து வந்துள்ளன. ஆனால் இவற்றுக்கு முறையான வரலாறு இல்லை. இதனை,

**இக்காலத்துள்ள திருக்கொடுங்குன்றத் தலக்கோயில்கள் பிற்காலச் சோழமன்னர்களாலும், பாண்டிய மன்னர்களாலும் விஜய நகர மன்னர்களாலும், இராமநாதபுரம் மன்னர்களாலும், சிவகங்கை மன்னர்களாலும் அவரவர் காலங்களில் திருப்பணிகள் செய்யப் பெற்றுப் படிமுறையில் அமைந்துள்ளது என்பது தெளிவு. ஆனால் எந்தெந்த**

**மன்னர்கள் காலத்தில் என்பது தெரியவில்லை**[31] என்னும் கூற்றினால் உறுதிப்படுத்திக் கொள்ளலாம்.

## சோழரின் பங்கு

சோழ மன்னனாகிய கண்டராதித்தன் பாண்டி நாட்டையும் ஈழத்தையும் வென்றான் எனவும் இவன் கோவில்கள் எழுப்புவதிலும் அக்கோயில்களுக்குரிய கொடைகளாக ஊரைத் தானம் தந்ததையும் வழக்கமாகக் கொண்டிருந்தான் எனவும் அறிய முடிகிறது.

இவனது மனைவியாகிய **செம்பியன் மாதேவியாரும் தேவாரப் பாடல்கள் பெற்ற பல கோவில்களைக் கற்கோவில் ஆக்கினார். பல கோவில்களுக்கு ஆடை, அணிகள், வெள்ளிப் பாத்திரங்கள் முதலியன அளித்தார்**[32] எனவும் அறியலாம்.

இவ்வரிசையில் கி.பி. 957- 970 காலப்பகுதியில் ஆட்சிபுரிந்த இரண்டாம் பராந்தகன் என்னும் சுந்தரசோழன் இத்திருக்கோயில் திருப்பணிகளை மேற்கொண்டிருத்தல் வேண்டும் என்பதை,

**திருக்கொடுங்குன்ற நாதர் திருக்கோயில் மண்டபத்திருச்சுற்றில் தென்புற மதிலில் சிதைந்து போன கல்வெட்டு ஒன்று, "திருநெலக் குன்றமான சுந்தரராசச் சதுர்வேதி மங்கலத்து'' என இவ்வூரைக் குறிப்பிடுகிறது. எனவே, திருக்கொடுங்குன்றம் இரண்டாம் பராந்தகனாகிய சுந்தர சோழன் பெயரால் 'சதுர்வேதி மங்கல'மாகப் பெயர் பெற்றிருந்தது எனலாம் என்பர் அறிஞர். இந்தச் சோழன், பாண்டிய நாட்டில் படையெடுத்து வெற்றி கண்டவன். எனவே, இந்தச் சோழன் காலத்தில் இத்திருக்கோயிற் பணி ஏதேனும் நடந்திருக்கலாம்**[33] என்ற சான்றின்வழி அறிய முடிகிறது.

## துவராபதி வேளார் செய்த திருப்பணிகள்

தற்போதைய பிரான்மலைக்கு அருகிலுள்ள துவரங்குறிச்சிப் பகுதிகளில் உள்ள பழையபாளையம், செவல்பட்டி ஆகிய ஊர்களில் சிதிலமடைந்த இரு சிவன் கோவில்கள் காணப்படுகின்றன.

இக்கோயிலில் ***பாண்டியப் பேரரசர்கள் விக்கிரம பாண்டியன் (1186+2) 1188ஆம் ஆண்டு கல்வெட்டு, குலசேகர பாண்டியன் கல்வெட்டுக்கள், மாறவர்மன் சுந்தரபாண்டியன் கல்வெட்டுக்கள், சடையவர்மன் சுந்தரபாண்டியன் கல்வெட்டுக்கள், மாறவர்மன் முதலாம் குலசேகரன் கல்வெட்டுக்கள், சடையவர்மன் பராக்கிரம பாண்டியன் கல்வெட்டுக்கள், சடையவர்மன் வீரபாண்டியன் கல்வெட்டுக்கள் மற்றும் விஜய நகரப் பேரரசர் மல்லிகார்ஜுனதேவர் கல்வெட்டுக்கள் போன்றவை காணப்படுகின்றன. இக்கல்வெட்டுக்கள் மூலம் கி.பி.12 ஆம் நூற்றாண்டிலிருந்து ஏறக்குறைய 800 ஆண்டுகள் பழமை மிக்க கோயிலாக இக்கோயில் விளங்கியுள்ளமை***[34] புலப்படுகிறது.

விக்கிரம பாண்டியன் கல்வெட்டில் இப்பகுதியில் சிறப்புப் பெற்று ஆட்சி புரிந்த துவராபதி வேளார் என்பார் இக்கோயிலுக்கு நிலங்கள் கொடையாக அளித்துள்ளார். இந்த நிலங்கள் அலவயல், காந்தகப்பாடி நிலம், தேவகச்சிப் பெருமங்கல நிலம் என மூன்று இடங்களில் இருந்துள்ளன. இந்த நிலங்களுக்கான வரிகள் நீக்கப்பட்ட செய்தியும் இக்கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளது.

குலசேகர பாண்டியர் காலத்தில் துவராபதி வேளார் முதலி செல்வன் அவனி நாராயண தேவரின் பெண்டுகள் (பெண்கள்) இக்கோயிலுக்கு விளக்கெரிக்கப் பதினைந்து ஆடுகளைக் கொடையாக அளிக்கின்றனர்.இக்கோயில் கல்வெட்டுக்களில் அகத்தீஸ்வரர் கோயில் எனக் குறிக்கப்பட்டுள்ளது.

மேற்குறித்த கல்வெட்டுக்களில் இக்கோயில் இருந்த பகுதி மன்னுகுறிச்சி என்றும் மருங்கூர் என்றும் குறிக்கப்பட்டுள்ளது. செயங்கொண்ட சோழபுரம் என்றும் பிறிதொரு கல்வெட்டு இவ்வூரைக் குறிப்பிடுகின்றது. மருங்கூர் அக்காலத்தில் நாட்டின் தலைமையகமாகவும் செயல்பட்டுள்ளது. எனவே இக்கோயில் உள்ள பகுதி மருங்கூர் என்ற சிறந்த ஊர்ப்பகுதியாக இருந்து பிற்காலத்தில் அழிந்துள்ளமையை இக்கல்வெட்டுக்களின் மூலம் நம்மால் அறிய முடிகிறது. இன்றைய

மருங்காபுரி சமீன்களின் பூர்வீக ஊராக இது விளங்கியிருக்க வேண்டும். இக்கோயிலில் பல்வேறு பூஜைகள், விழாக்கள் நடந்துள்ளன. குறிப்பாகச் சிவராத்திரி என்னும் பெருவிழா நடப்பதற்கு பல்வேறு கொடைகள் அளிக்கப்பட்டுள்ளமையை கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. இக்கோ-யிலைச் சார்ந்த கோசாலை ஒன்றும், மடம் ஒன்றும் இருந்துள்ளமையைக் கல்வெட்டு ஒன்று குறிக்கின்றது. கோயிலின் செலவினங்களுக்குப் பல்வேறு கால கட்டங்களில் நிலங்கள் கொடையாக அளிக்கப்பட்டுள்ளன. திரு அகத்தீஸ்வரர் கோயில் என கல்வெட்டுக்களில் குறிக்கப்படும் இக்கோயில் பாண்டியர் காலத்தில் பன்னிரெண்டாம் நூற்றாண்டளவில் சீரும் சிறப்பும் பெற்று விஜய நகர காலத்திலும் அரசர்களின் ஆதரவைப் பெற்று சிறந்து விளங்கியிருந்தமையைக் கல்வெட்டுக்களின் மூலம் அறிய முடிகிறது.

## பைரவர் கோயிலைக் கட்டியவர் துவராபதி வேளார்

திருக்கொடுங்குன்றத்தில் இருக்கும் பைரவர் கோவிலையும் இதே துவராபதி வேளார்தான் கட்டியிருக்கிறார் என்பதை, **“ஸ்வதி ஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்தி கோனேரின்மை கொண்டான் உடையார் திருக்கொடுங் குன்றமுடைய நாயனார் கோயில் தானத்திற்கு இன்னாயானாற்கு துவாரபதி வேளார் கடை கட்டின பூபால புரந்தரன் சனத்திற்கு’’** (S.l.l Vol. VIII. 433) **என்று இக்கல்வெட்டு (கி.பி.1104) தெரிவிக்கிறது. ஆதலால் இங்குள்ள பைரவர் திருக்கோயிலை கி.பி. 1104க்கு முன்னர் துவராபதி வேளார் கட்டி-யிருக்கிறார்**[35] என்னும் கருத்தினால் உறுதிப்படுத்திக் கொள்ளலாம்.

மேலும் மேற்சுட்டிய பழையபாளையம், செவல்பட்டி, மேலூர் கோ-யில்களைப் போலவே திருக்கொடுங்குன்றத்திலிருக்கும் திருக்கோயிலுக்கும் பாண்டியர்களும், விஜயநகர அரசர்களும், வேளாரும் திருப்பணிகள் செய்து வந்தனர் என்னும் கருத்தும் உறுதிப்படுத்தப்படுகிறது.

## முதலாம் குலோத்துங்க சோழனின் திருப்பணிகள்

கி.பி 1070 ஆம் ஆண்டில் சோழ நாட்டின் ஆட்சி பீடம் ஏறிய அதிராஜேந்திர சோழன் சில மாதங்களிலேயே இறந்ததனால், நாட்டில்

அரசுரிமைப் பிரச்சினை உருவானது. அதிராஜேந்திரனுக்கு வாரிசு இல்லை. இந்தப் பின்னணியில், இரண்டாம் ராஜேந்திர சோழனின் மகள் வழிப் பேரனான கீழைச் சாளுக்கிய இளவரசன் ஒருவனைச் சோழ மன்னனாக்கினர். இவனே முதலாம் குலோத்துங்க சோழன் ஆவான்.

**முதலாம் குலோத்துங்க சோழன் சிறந்த சிவபக்தன். இவன் சிதம்பரம் கூத்தப்பிரானிடம் பேரன்பு பூண்டவன். அங்கு பல திருப்பணிகள் செய்தான். தில்லை அம்பலத்தைப் பொன் வேய்ந்தான். நூற்றுக்கால் மண்டபம், பெரிய திருச்சுற்று மாளிகை, தேவாரம் ஓதுவதற்குரிய மண்டபம், சிவகாம கோட்டம் முதலியன கட்டுவித்தான். தியாகவல்லி முதலிய சிற்றூர்களை இச்சிதம்பரம் கோவிலுக்குத் தேவதானமாக அளித்தான்**[36] என்பதை வரலாற்றுச் சான்றுகளினால் உணரலாம்.

இதன்மூலம் இவனால், சிவன்கோவிலுக்கு வழங்கப் பட்ட ஊர்களுக்கு வல்லி என்னும் பெயர் ஏற்பட்டிருப்பதை உணர முடிகிறது. இன்றைக்கும் கொடுங்குன்றத்துக்கு அருகிலுள்ள கோயில் நிலங்களை உடைய இடங்கள் மாணிக்கவல்லி, அபிராமவல்லி, சுவர்ண வல்லி, அமிர்தவல்லி, மரகதவல்லி என்ற பெயர்களில் அழைக்கப்படுவதால் குலோத்துங்கன் திருக்கொடுங்குன்றத்து ஆலயத்துக்குக் கொடைகள் வழங்கினான் என்பது புலப்படும்.

மண்டலப் பிரிவு

மேலும் இவன் **சோழநாட்டை மண்டலங்களாகவும், கோட்டங் களாகவும் பிரித்து ஆட்சி செய்திருக்கிறான். மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி ஆகிய பகுதிகளுக்கு இராஜஇராஜப் பாண்டி மண்டலம் எனப் பெயர் வழங்கினான்**[37] என்பதும் அறியப்படுகிறது.

மங்கைபாகர் குடைவரைக் கோயில் முகப்பு மண்டபப் பகுதியில் வலதுபுறப் பாறையில் உள்ள சிதைவடைந்த கல்வெட்டு **“ஸ்வதிஸ்ரீ சக்கரவர்த்திகள் ஸ்ரீ கொலொத்துங்க சொழ தேவற்கு யாண்டு 35 - வது (கி.பி. 1105) இராஜராஜப்பாண்டி நாட்டு’’ என்று தெரிகிறது. ‘இந்தக்**

**கல்வெட்டுக் குறிப்பின் அடிப்படையில் மங்கைபாகர் குடைவரைக் கோயில் குலோத்துங்க சோழன் அமைத்ததாகலாம்' என்று கருதுவார் சி.கோவிந்தராசனார். 'குடைவரையின் அமைப்பைக் கொண்டு இது பாண்டியர் காலத்துக் குடைவரைக் கோயிலாகலாம்' என்பார் இரா. கலைக்கோவன். இவ்விரு கருத்துக்களும் சிந்திக்கத்தக்கன.**[38]

அருவியூரார் திருப்பணிகள்

*இவனது காலத்திலேயே திசை ஆயிரத்து ஐநூற்றுவர் என்னும் வாணிகக் குழுவினர் இருந்தனர்.* **இக்குழுவின் பெயர் நாற்றிசையும் உள்ள ஆயிரம் ஊர்களிலிருந்து சென்ற நூறு வணிகர் என்னும் பொருளைக் கொண்டது**[39] *என்பதைச் சுமத்ராவில் கிடைத்த கல்வெட்டு உணர்த்துகிறது. இதனை இராசமாணிக்கனாரும் உறுதி செய்கிறார்.*

*இந்த அருவியூர் நகரத்தார்களே பின்னாளில் திருக்கொடுங்குன்றத்தின் தென்அடிவாரத்தில் இருந்த ஆற்றுப்படுகை நகரமாகிய அருவியூரில் வாழ்ந்த அருவியூர் நகரத்தார்கள் ஆவர். அவர்களும் இக்கோயில் திருப்பணியில் ஈடுபட்டிருந்ததோடு கோவில் உரிமைகளில் இன்றுவரை பங்கேற்று வருகின்றனர். ஆதலால் இவர்கள் விரும்பியவாறே திருக்கொடுங்குன்றத்துத் திருக்கோயிலை முதற்குலோத்துங்க சோழன் தானே இத்தலத்திற்கு வந்திருந்து எழுப்பியிருக்கக்கூடும் எனக் கருதுவதற்கு இடமுண்டாகிறது.*

*சோழர்களிடமும் பாண்டியர்களிடமும் தொடர்பு கொண்டு வணிகம் புரிந்துவந்த கடல் வணிகக் குழுவினராகிய அருவியூர் நகரத்தார்கள் தாங்கள் வாழ்ந்திருந்த அருவியூரிலிருந்து கொண்டு பிரான்மலையில் எழுந்தருளியிருக்கும் மங்கைபாகரையே தங்களது குலதெய்வமாகக் கொண்டார்கள். ஆதலால் அக்கோயில் திருப்பணிகளைத் தாங்களேயும், மன்னர்கள் துணையுடனும் செய்து வந்துள்ளனர் என்பதை, மிதிலைப்பட்டி முத்துராமலிங்கக் கவிராயர் பாடியுள்ளார்.*

**"வீறுகொள் வேடர் தன்பால் மிகுபொருள் நல்கி ஆறு**
**நூறுகொள் ஆண்டின் முன்னே நுண்ணிடை உமையா ளோடு**

**கூறுகொள் கொடுங்குன் றீசர் தம்மையும் கொண்டு பத்திப்**
**பேறுகொள் அருவியூரார் பிறங்கிடக் கோயில் செய்தார்''**

**என்பது அந்தப் பாடல். அன்னை குயிலமுத நாயகி கோயில் திருப்பணி இவர்கள் செய்ததே என்பதை அக்கோயில் திருச்சுற்றுத் தூண்களில் உள்ள அருவியூர் நகரத்துப் பெருமக்களின் உருவச் சிலைகள் மௌன மொழியில் சொல்லிக் கொண்டிருப்பதன்மூலம் அறிகிறோம்**[40] என்பார் மரு.பரமகுரு.

## கோட்டாற்றுத் தொடர்பு

இதற்கான மற்றொரு சான்றாக, **அரையன் மதுராந்தகன் ஆன குலோத்துங்க சோழ கேரளராசன் என்பவன் சேரநாட்டுப் போரில் சேனையை நடத்திச் சென்று வெற்றி பெற்றதால் கோட்டாற்றில் இராசேந்திர சோழேச்சுரம் என்ற கோவிலைக் கட்டினான். அக்கோவிற்குக் குலோத்துங்க சோழன் நிலதானம் செய்துள்ளான்**[41] என்பதையும் அறிய முடிகிறது.

இக்கோட்டாற்றிலேயே அருவியூர் நகரத்தாரின் மற்றொரு பிரிவினர் வாழ்ந்திருந்தனர் என்பதை இங்கே ஒப்புநோக்கினால், குலோத்துங்க சோழன் அருவியூர் நகரத்தாருக்குக் கோவில்கள் கட்டித் தருவதற்கு உதவியுள்ளான் என்பதையும் ஒத்துக் காணலாம். இதற்கு, **முதற் குலோத்துங்கசோழன் இக்கோயிலுக்கு வந்திருந்த செய்தி இக்கோயில் கல்வெட்டொன்றில் "குவகுதி ஸ்ரீ யாண்டு 34வது நாள் 228 குலவீர தாவளத்தில் எழுந்தருளி-யிருக்க நினைப்புடையார்'' என்று காணப்படுகிறது. இது கி.பி. 1104 ஆம் ஆண்டுக் கல்வெட்டு. இத்திருக்கோயிலுக்கு மேல்தளத்தில் வந்து தங்கி இருந்த இந்தச் சோழன் ஏதேனும் திருக்கோயில் விரிவாக்கத் திருப்பணி செய்திருக்கக் கூடும்**[42] என்ற கருத்து மேலும் வலுச்சேர்க்கிறது.

## கோயில் எழுப்பிய காரணம்

மாறவர்மன் சுந்தர பாண்டியன் தனது இளம் வயதில் மூன்றாம் குலோத்துங்கச் சோழன் பாண்டிய நாட்டின்மீது படையெடுத்துத் தரைமட்டமாக்கியதைக் கவனித்தே வளர்ந்தான். இதற்குப் **பதிலாக மூன்றாம் இராசராசனைப் பழிவாங்கிச் சோழநாட்டின் தலைநகராக விளங்கிய**

***தஞ்சையையும் உறையூரையும் தீக்கு இரையாக்கினான். கண்ணிற்பட்ட மணிமண்டபங்களையும் மாடமாளிகைகளையும் தரைமட்டமாக்கினான்*[43]** என்று வரலாறு குறிப்பிடுகிறது.

அத்தகு ஆவேசமுற்ற அவன், **சோழர்களின் இரண்டாம் தலைநகர மாகிய பழையாறை சென்று அங்கு வீராபிடேகம் செய்து கொண்டான். பின்னர்ப் பாண்டிய நாடு திரும்பிச் செல்லும் வழியில், பொன்னமராவதியில் உள்ள தனது அரண்மனையில் தங்கினான்[44]** என்பதையும் அறிய முடிகிறது.

இப்பொன்னமராவதி பறம்புநாட்டின் எல்லைப்பகுதியாகவும் பாண்டியனின் ஆட்சிக்குப்பட்ட கொடுங்குன்றநாடு எனவும் வழங்கப்படுவது முன்னர் அறிந்த செய்தியேயாகும். போர் முடிந்த வேளையில் தனது எல்லைக்குட்பட்ட கோயில்களைப் புனரமைத்தான் என்பதைக் கீழ்வரும் கருத்துகளோடு ஒத்துக் காணலாம்.

***இவன் ஆற்றலாலும், வீரத்தாலும் பாண்டிய நாட்டை நன்னிலைக்குக் கொண்டு வந்து பேரரசு நிறுவியவன். மூன்றாம் இராசராச சோழனை வென்றவன். ஆதலால் பாண்டிய நாட்டு எல்லையில் அமைந்த இத்திருக்கோயிலைச் சுற்றி மிகப்பெரிய சுற்றுமதில் எடுத்துள்ளான். கோட்டை போன்ற இந்தப் பெருமதில் கொத்தளமுடையது. மங்கைபாகர் கோயில் தேவசபா மண்டபத்திற்குக் கிழக்கே உள்ள மண்டபம் 'சுந்தர பாண்டியன் மண்டபம்'*[45]** எனப்படுகிறது.

## அழிந்த கோபுரம்

இவன் மேற்குறிப்பிட்ட மண்டபத்தைக் கட்டியதோடு மட்டுமல் லாமல், **இராஜநாராயணா என்னும் புவனேகவீரர், "கொடுங்குன்றனார் என்று அழைக்கப்படும் சந்ததிரிபதி (சிவம்) கோயிலுக்குப் பரந்த உயர்ந்த கோபுரத்தைக் கட்டினான்" என்று இக்கோயில் கல்வெட்டு கூறுகிறது. இது இராஜகோபுரமா? விமானமா? என்பது தெரியவில்லை. இராஜ கோபுரமாயின் அது அயலவர் படையெடுப்பால் அழிந்து விட்டதாகக் கொள்ள வேண்டும்[46]** என்பார் பரமகுரு.

சிவகங்கை மன்னர்களின் திருப்பணி

*சிவகங்கை மன்னர்களும் இந்த ஆலயத்திற்குத் திருப்பணி செய்திருக்கிறார்கள்.* ***இவர்கள் காலத்தில் அடிவாரத்தில் - திருவாசலுக்குத் தெற்கேயுள்ள துரைராஜ மண்டபம் கட்டப்பட்டுள்ளது.***[47]

பிரான்மலையில் சமணர்கள்

*பிரான்மலையில் சமணர்களும் இருந்திருக்கிறார்கள் என்னும் செய்தியையும் நாம் அறிய முடிகிறது.* ***அனல்வாதத்திலும், புனல் வாதத்திலும் சம்பந்தரிடம் தோல்வியுற்ற சமணர்கள் மதுரைக்குப் பிறகு அடுத்த புகலிடங்களாக, இளையான்குடி, ஆனந்தூர், அனுமந்தக்குடி, திருக்களாக்குடி, பிரான்மலை, கீழ்ப்பனையூர் ஆகிய இடங்களில் குடியேறினார்கள். இங்கு காட்சியளிக்கும் துறவிகளது கல் திருமேனிகள் இந்த உண்மையைப் புலப்படுத்துகின்றன.***[48]

செப்பேட்டுச் சான்றுகள்

*பாண்டியர் காலத்தில் திருக்கொடுங்குன்றக் கோயிலுக்கு அன்னதானப் பொருள்கள் அளித்ததற்கான செப்பேட்டுச் சான்றுகளும் உள்ளன. இதனை,*

***பிரான்மலை கோயிலில் அரிசி, பருப்பு முதலியவைகளை அளப்பதற்கு திருநாவுக்கரசு நாழி என்ற பெரும்படி பயன்படுத்தப்பட்டது. (கி.பி.1273) (ஏ.ஆர். 152-1903)***[49] *என்னும் குறிப்பு உணர்த்தும்.*

ஆலயத் திருமேனிகள்

*முன்னாள் ஆலயத்திருமேனிகள் கல்வெட்டுகளில் இடம்பெற்ற வரலாறும் இக்கோயிலுக்கு உண்டு.* ***பிரான்மலை திருக்கொடுங்குன்ற முடைய நாயனார் திருமேனியும் அதில் ஒன்றாகும்***[50] *என்பதை அறியலாம்.*

கோயில் அமைப்பு / பாடல் தலமாதல்

*பறம்புமலை எனச் சங்ககாலத்திலும் பிரான்மலை எனத்*

*தற்காலத்திலும் வழங்கப்படும் மலை பக்தி இலக்கியக் காலத்தில் திருக்கொடுங்குன்றம் என்ற பெயரில் வழங்கப்பெற்றது.*

*இங்கு அமைந்திருக்கும் கோயில் மலைக்கோயில் அமைப்பு முறையையும் குடைவரைக்கோயில் அமைப்பையும் பெற்றுள்ளது. பாறைகளைக் குடைந்து மண்டபங்களை எழுப்பிக் கருவறை சமைத்து இக்கோயில்கள் அமையும்.*

## பல்லவர் காலக் கோயில் அமைப்பு முறை

*இக்கோயில்கள் பெரும்பாலும் பல்லவர் பாணியில் அமைந்தவை எனினும், பிற்காலத்தில் பல்வேறு மன்னர்களால் வளர்த்தெடுக்கப் பெற்றுள்ளது என்பதை,*

***பல்லவர் பகுதிக் குடைவரைகளோடு ஒப்பிடும்போது, பிற பகுதிக் குடைவரைகளுள் ஒன்றிரண்டு தவிர, ஏனையன அனைத்தும் அளவில் சிறியனவே. மகிபாலன்பட்டி, பிரான்மலை, அரளிப்பட்டி, ஆனையூர், தேவர்மலை, பூவாலைக்குடி, குன்னத்தூர்க் குடைவரைகள் போல் அளவில் மிகச் சிறிய குடைவரைகள் பல்லவர் பகுதியில் ஒரு சிலவே உள்ளன*[51]**

*என்னும் சான்றினால் அறியலாம்.*

## கோயில் என்னும் சொல்லும் அதன் அமைப்பும்

*சங்ககாலத்தில் வழங்கப்பட்ட பாரீசுரம் என்னும் பெயரோடு திருக்கொடுங்குன்றீசர் என்னும் பெயரும் பெற்று இந்த ஆலயம் விளங்குகிறது. திருஞானசம்பந்தரால் இப்பெயர் வழங்கப்பட்டதாகத் தெரிகிறது. அக்காலத்தில் பறம்புமலை திருக்கொடுங்குன்றம் என்னும் பெயரில் வழங்கியதையும் அறிய முடிகிறது.*

***கோவில் என்ற சொல் சங்ககாலத்தில் தெய்வங்கள் உறையும் கட்டடத்தையும் அரசன் அரண்மனையையும் குறித்தது. இதனால் அரசன் வாழ்ந்த அரண்மனையும் கோவிலும் பல பகுதிகளில் ஒத்திருந்தன என்று கொள்ளுதல் பொருந்தும். இரண்டும் சுற்று மதில்கள் உடையவை. உயர்ந்த***

***வாயில்களை உடையவை. வாயில்கள்மீது உயர்ந்த கோபுரங்களைப் பெற்றவை***[52] என்று கோவிலுக்கான விளக்கம் தருவார் இராசமாணிக்கனார்.

கோயிலின் வகைகள்

*சங்ககாலத்திலிருந்தே கோயில்கள் விளங்கியிருக்கின்றன. அது போலவே தன் காலத்திலிருந்த கோயிலின் வகையும் அவற்றின் அளவும் குறித்து,*

***தேவார காலத்தில் தமிழகத்தில் ஏறத்தாழ 500 கோவில்கள் இருந்தன. அவை அனைத்தும் மரம், செங்கல், மண், உலோகம் இவற்றால் ஆனவை. அவை 1.பெருங்கோவில், 2. இளங்கோவில், 3. மணிக்கோவில், 4. ஆலக்கோவில், 5. தூங்கானை மாடம் முதலிய பலவகைப்படும். இவற்றுள் தம் காலத்தில் பெருங்கோவில்கள் 78 இருந்தன என்று அப்பரே அறைந்துள்ளார்***[53] என்பதையும் இங்கு ஒப்பு நோக்கலாம்.

திருக்கொடுங்குன்றம் கோயில் அமைப்பு

*இத்திருத்தலம் பாதாளம், பூமி, கயிலாயம் என மூன்று நிலையாக விளங்குகிறது.*

1. ***அருள்தரு திருக்கொடுங்குன்ற நாதர் திருக்கோயில் - பாதாளம்,***
2. ***அருள்தரு பைரவ சுவாமி திருக்கோயில் - பூமி,***
3. ***அருள்தரு மங்கைபாக சுவாமி திருக்கோயில் - கயிலாயம்.***

திருக்கொடுங்குன்ற நாதர் திருக்கோயில்

*இத்திருக்கோயிலுக்குச் செல்லும் வழி, மலையின் அடிவாரத்தில் தென்மேற்கு மூலையில் கிழக்கு நோக்கித் தொடங்குகிறது. இந்த வழியின் வடபால் கபிலர் பறம்பு நாடு குறித்துப் பாடிய புறநானூற்றுச் செந்தமிழ் பாடற் கல்வெட்டு, தமிழ் மணம் கமழ்ந்து கொண்டிருக்கிறது.*

*அதற்குக் கிழக்கே திருக்கோயிலுக்குச் செல்லும் பாதையின் வடபால் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்தின் கிளைமடம்*

உள்ளது. தென்பால் பாண்டிநாட்டு ஈசான சிவம் மடம் உள்ளது. அதற்கு எதிரே வடபால் கீழ்மேலாடிய நீண்ட பெருமதில் உள்ளது. திருக்கோயில் தெற்குத் திருமதில் இது. தென்பால் கட்டுமானமுள்ள 'அடைய வளஞ் சான்' எனப்படும் குளம் உள்ளது. அடுத்து மேற்கு முகமாக உள்ளது

### மண்டபங்கள்

கோயில்களில் கலைகள் வளர்ப்பதற்கு மண்டபங்கள் எழுப்பப் பெற்றன. இம்மண்டபங்கள் பலவகைளில் விளங்கின என்பதை,

**கோவிலில் செல்வாக்குப் பெருகப் பெருக நாளடைவில் அவற்றுக்கு மண்டபங்கள் ஏற்பட்டன. நடன மண்டபம், நாடக மண்டபம், திருப்பதிகம் பாடவும், எழுதவும் பயன்பட்ட திருக்கைக் கோட்டி மண்டபம் என்பன பல கோவில்களில் இடம் பெற்றன**[54] என்னும் கூற்றால் உணரலாம்.

திருக்கொடுங்குன்றத்துத் திருக்கோயிலில் பல மண்டபங்கள் அமைந்துள்ளன. அவை பல பெயர்களாலும் வழங்கப்படுகின்றன. ஒவ்வொரு மண்டபமும் ஒவ்வொருவரால் எழுப்பப் பெற்ற சிறப்புக்குரியதாகும்.

### துரைராஜ மண்டபமும் நாலுகால் மண்டபமும்

கோயிலின் நுழைவாக உள்ள மண்டபம் துரைராஜ மண்டபம் ஆகும். இம்மண்டபம் சிவகங்கை மன்னரால் அமைக்கப் பெற்றதாகும். இந்த மண்டபத்தின் நடுவே, கிழக்குச் சுவரையொட்டி நாலுகால் மண்டபம் மேற்கு முகமாக உள்ளது. சித்திரைத் திருவிழாவின்போது அம்பிகை, தபசுக்கு எழுந்தருளியிருக்கும் மண்டபம் இது. இதற்குத் தென்பால் யானை மகால் உள்ளது. அதற்கு அடுத்து கிழக்கே ஆதீன அறக்கட்டளை நிர்வாகத்திலுள்ள வள்ளல்பாரி மேல்நிலைப்பள்ளி உள்ளது.

துரைராஜ மண்டபத்திற்கு வடபால் உள்ள பெருமதிலுக்கிடையே திருக்கோயிலுக்குச் செல்லும் பெரிய திருவாயில் (குடைவரைவாசல் என்கின்றனர்) உள்ளது. இத்திருவாயிலைக் கடந்ததும் கிழக்கு மேற்காகத் திருக்கோயில் தெற்கு மதிலுக்கும் வடபால் மலையின் அடிவாரப்

பாறையோடு சேர்த்துக் கட்டப்பெற்றுள்ள ஒட்டுச் சுவருக்கும் இடையே கல்தளமிடப் பெற்ற பாதை உள்ளது. இந்தப் பாதையின் கிழக்குக் கோடியில் தேனாடி தீர்த்தம் (மதுபுஷ்கரணி)உள்ளது. மேற்குக் கோடியில் திருக்கொடுங்குன்ற நாதர் கோயில் உள்ளது.

### முகமண்டபமும் மகாமண்டபமும்

திருக்கொடுங்குன்ற நாதர் சந்நிதி கிழக்கு நோக்கி உள்ளது. சந்நிதிக்கு நேரே கிழக்குத் திருச்சுற்றில் கொடி மரமும், பலிபீடமும் உள்ளன; முக மண்டபத்தில் நந்தி உள்ளது. முக மண்டபத்தில் தெற்கே விநாயகரும், வடக்கே மயில்வாகனராய் சுப்பிரமணியரும் கிழக்கு முகமாக உள்ளனர். மகாமண்டபத்தின் உள்வாயிலுக்கருகில் தெற்கே சூரிய பகவான் மேற்கு முகமாக உள்ளார். மகா மண்டபத்தின் மேற்கே சந்நிதியில் நந்தி, பலிபீடம், சூரியப் பிரபை ஆகியவை உள்ளன. இந்தச் சூரியப் பிரபை சிறப்பானதோர் அமைப்பாகும். திருக்கொடுங்குன்ற நாதரின் பிம்பம் இந்தச் சூரியப் பிரபையில் தரிசிக்கும்படி அமைந்துள்ளது.

முக மண்டபத்தில் உள்ள நந்திக்குக் குறுக்கே சில சமயம் நடமாட்டம் இருப்பதால் திருக்கொடுங்குன்றநாதர் திருவுருவம், இந்தப் பிரபையில் தங்கும்படி அமைக்கப் பெற்றுள்ளது.

### ஜ்வராபக்நா மூர்த்தி

மகாமண்டபத்தின் மேற்கே சந்நிதிக்குத் தெற்கே ஜ்வராபக்நா மூர்த்தி கிழக்கு முகமாக எழுந்தருளியிருக்கிறார். இந்த மூர்த்தி மூன்று திருமுகமும் நான்கு திருக்கரமும், மூன்று திருப்பாதமும் உடையவர்.

**ஒரு காலத்தில் மாவலிச் சக்கரவர்த்தியின் மைந்தனும் சிறந்த சிவபக்தனுமாகிய வாணாசுரனுக்குச் சார்பாக சிவபெருமான், கண்ணபிரானொடு போர் செய்தார் எனவும் அப்போது கண்ணபிரான், சீதளசுரத்தைச் சிவபெருமான்மீது ஏவ, அந்தச் சீதளசுரத்தை அழிக்க, சிவபெருமான் ஏவிய வெப்ப சுரமானது மூன்று சிரம், நான்கு கரம், ஒன்பது விழி, மூன்று கால்களுடன் சென்று கணத்தில் மாய்த்தது எனவும்,**

**கண்ணபிரான் விடுத்த சுரத்தின் வீறு போக்கியமையால் சிவபெருமான் “ஜ்வரா பக்நா மூர்த்தி’’ யெனப் பெயர் பெற்றார் எனவும் இந்த மூர்த்தி பற்றி சிவபராக்கிரமம் கூறுகிறது; தீராச் சுரமுற்றோர் இப் பெருமானை வழிபட்டால் சுகமுறுவர் என்றும் கூறுகிறது. இந்த மூர்த்தி மிகச்சில தலங்களில் மட்டுமே உள்ள அரிய மூர்த்தியாவார்**[55] என விளக்கம் தருவார் மரு.பரமகுரு.

அர்த்த மண்டபத்தின் மேற்கே சந்நிதிக்குத் தெற்கில் செல்வ விநாயகர் உள்ளார். கருவறைக்குள் எம்பெருமான் ஈசன் திருக்கொடுங்குன்ற நாதர் கொழும்பவளச் செங்குன்றாய் எழுந்தருளியுள்ளார்.

## அறுபத்து மூவரும் திருநாவுக்கரசு மண்டபமும்

தெற்குத் திருச்சுற்றின் தென்பக்கம் வரிசையாக அறுபத்து மூன்று நாயன்மார்கள் உள்ளனர். இவர்கள் வரிசையில் மேற்கே நால்வர் மட்டும் தனி வரிசையாக உள்ளனர். நால்வருக்கும் மேற்கே சப்தகன்னியர் உள்ளனர். தெற்குச் சுற்றின் வடபால் மூலவர் கோயிலையொட்டித் தென்முகப் பரமன் சனகாதி முனிவரோடு எழுந்தருளியுள்ளார். இவருக்கு அருகில் கிழக்கே மூலவர் கோயில் கற்சுவரின், வெளிப்புறத்தில் மார்பளவுப் புடைப்புச் சிற்பமாகத் திருநாவுக்கரசு சுவாமிகள் தென்முகமாக உள்ளார்.

இக்கோயில் கல்வெட்டு (கி.பி. 1264) **“திருக்கொடுங்குன்ற முடைய நாயனார் திருக்கோயிலில் திருநாவுக்கரசு மண்டபத்து’’ என்று தெரிவிக்கிறது. எனலே, அக்காலத்தில் இந்தத் தெற்குத் திருச்சுற்று மண்டபம் திருநாவுக்கரசு மண்டபம்’’ என அழைக்கப் பெற்றது**[56] எனலாம்.

மேற்குத் திருச்சுற்றில் - தென்மேற்கு மூலையில் முக்குறுணி விநாயகர் கிழக்கு முகமாக உள்ளார். அவருக்கு வடக்கே உற்சவ மூர்த்திகள் - பஞ்ச மூர்த்திகள் உள்ளனர். அடுத்து பூசைப் பொருள்கள் வைக்கும் அறை இருக்கிறது. அதற்கும் வடக்கே காளத்தி நாதர் சந்நிதி மீனாட்சி சுந்தரேசுவரர், சந்நிதி விசுவநாதர் - விசாலாட்சி சந்நிதி ஆகியன கிழக்கு முகமாக உள்ளன. அதற்கும் வடபால் திருநாள் மண்டபம் திருக்கல்யாண மண்டபம். மூலவர் கோயில் மேற்குச் சுவரின் நடுவில் லிங்கோற்பவர் உள்ளார்.

## வாகன மண்டபம்

*வடக்குத் திருச்சுற்றில் வடபால் மேற்குக் கோடியில் வாகன மண்டபமும், அந்த வரிசையில் கிழக்கே திருமுறைக் கோயிலும் உள்ளன. அதற்குக் கிழக்கே ஆடல் வல்லான் எழுந்தருளியுள்ளார். அதற்குக் கீழே யாக சாலையும் மூர்த்தி நாயனார் சந்தன அறைவை அறையும் உள்ளன. அதற்கும் கீழே வடகிழக்கு மூலையில் காலபைரவர் சந்நிதி தெற்கு முகமாக உள்ளது. வடக்குத் திருச்சுற்றில் மூலவர் கோயிலுக்கு வடமேற்கு மூலையில் வடக்கு முகமாகத் துர்க்கையம்மன் சந்நிதி உள்ளது. அதற்கும் கிழக்கே சண்டீசர் உள்ளார். வடகிழக்கு மூலையில் ஒன்பான் கோள்கள் (நவக்கிரகங்கள்)உள்ளன. அதற்குத் தெற்கே மூலவர் சந்நிதி உள்ளது. கருவறை தனி விமானம் உடையது.*

## குயிலமுதநாயகி திருக்கோயில்

*பல்லவர் காலத்தும் பிற்காலச் சோழர் காலத்து முதற்பகுதியிலும் சிவன் கோவிலில் அம்மனுக்கென்று தனிக்கோவில் ஏற்படவில்லை. இறைவன் கருவறையிலேயே போக சக்தி அம்மன் எனத் தனித்திருமேனி வைத்து வழிபடப்பட்டது.* ***கி.பி.11ஆம் நூற்றாண்டில் முதல் இராசேந்திரனது எண்ணாயிரங் கல்வெட்டே முதல் முதலாக அம்மன் தனிக்கோவிலைப் பற்றிக் குறிக்கின்றது***[67] *என்பார் இராசமாணிக்கனார்.*

*திருக்கொடுங்குன்ற நாதர் திருக்கோயிலோடு இணைந்து வடபால் அமைந்துள்ளது இத்திருக்கோயில். திருக்கொடுங்குன்ற நாதர் திருக்கோயில் திருச்சுற்றின் வடமேற்கு மூலையில் இத்திருக்கோயிலுக்குச் செல்லும் திருவாயில் உள்ளது.*

*இத்திருக்கோயில் திருச்சுற்றுடையது. வடமேற்கு மூலையில் திருச்சுற்றுக்கு வெளியே தீர்த்தக் கிணறு உள்ளது. வடக்குத் திருச்சுற்றில் சண்டீசுவரி எழுந்தருளியுள்ளாள். முன் மண்டபத்தில் மேற்கு நோக்கி நந்தியும் கொடிமரமும் உள்ளன. அர்த்த மண்டபத்தில் அம்பாள் சந்நிதிக்கு வலப்புறம் கிழக்கு நோக்கி இலட்சுமி கணபதி அமர்ந்துள்ளார். கருவறையில்*

*அருளாரமுதத்தை வாரி வழங்கிக் கொண்டு அன்னை குயிலமுத நாயகி நின்ற திருக்கோலத்தில் கிழக்கு முகமாக எழுந்தருளியிருக்கிறாள். அம்பாள் சந்நிதிக்கு தென்கிழக்கில் மடைப்பள்ளி உள்ளது. அம்பாள் கருவறை தனி விமானமுடையது.*

## சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில்

*கபிலர் தனது புறநானூற்றுப் பாடலில் (143) பேகனைப் பற்றிப் பாடும்பொழுது குறிஞ்சிக் கடவுளைக் குறித்துக் காட்டுகிறார்.*

***மலைவான் கொள்கென உயர்பலி தூஉய்***
***மாரி ஆன்று மழைமேக்கு உயர்கெனக்***
***கடவுட் பேணிய குறவர் மாக்கள்***
***பெயல்கண் மாறிய உவகையர், சாரல்***
***புனத்தினை அயிலும் நாட***[58]

*என்பது அப்பாடல். இதன்மூலம் கபிலர் காலத்திலிருந்து பறம்பிலும் முருகவழிபாடு இருந்திருக்கலாம் என உணர முடிகிறது.*

*திருக்கொடுங்குன்றத்திலும் பாலசுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் உள்ளது. இத்திருக்கோயில், அருள்தரு குயிலமுதநாயகி திருக்கோயில் திருச்சுற்றுடன் இணைந்துள்ள தனிக்கோயில். இதன் திருவாயில் இந்நாளில் தெற்குமுகமாக உள்ளது. இந்த வாயிலுக்குக் கிழக்கே வடக்குச் சுவரில், இத்தலத்துக்குரிய கல்வெட்டுச் செய்து 8.7.1962 இல் பதிக்கப் பெற்றுள்ளன. முன் மண்டபத்தில் வடக்குச் சுவரையொட்டித் தெற்கு முகமாக பாலசுப்பிரமணிய சுவாமி உள்ளார். அவருக்கு வலப்பக்கத்தில் ஒரு லிங்கேசுவரரும் உள்ளனர். இந்த மண்டபத்தின் கிழக்கே அர்த்த மண்டபமும் கருவறையும் உள்ளன. அருள்தரு சுப்பிரமணிய சுவாமி நின்ற திருக்கோலத்தில் வள்ளியம்மையார், தெய்வானையம்மையார் இருவரோடும் மேற்கு நோக்கி எழுந்தருளியிருக்கிறார். திருக்கோயில் மேற்குச் சுவரில் (இச்சுவர் பிற்காலத்தில் அமைக்கப் பெற்றதாகலாம்.)*

சந்நிதிக்குச் சாளரம் அமைந்துள்ளது. இதற்கும் மேற்கே சந்நிதி நோக்கி இவரது வாகனமாகிய யானையும் அடுத்து பலிபீடமும், கொடி மரமும் உள்ளன. இந்த யானை அழகிய வடிவமுடையது. இத்திருக் கோயிலில் எழுந்தருளியுள்ள முருகப் பெருமான் அருணகிரிநாத சுவாமிகளின் திருப்புகழ்ப் பாடல் பெற்றவர். இக்கோயில் மூலவர் கருவறை தனி விமானம் உடையது.

## பைரவசுவாமி திருக்கோயில்

திருக்கொடுங்குன்ற நாதர் சந்நிதிக்கு நேர்கிழக்கே பதினாறு கால் மண்டபம் உள்ளது. அந்த மண்டபத்தின் வடக்கே படிக்கட்டு உள்ளது. அதற்கு மேலே புதிதாக எழுப்பப் பெற்ற இராசகோபுரம் உள்ளது. இராசகோபுர வாயில் திருநிலைக்கு இருபுறமும் - கிழக்கிலும் மேற்கிலும் நீண்ட மிகப் பெரிய கல்கட்டுமான மேல்தளம் உள்ளது. இராஜகோபுர வாயில் மண்டபத்தில் தெற்கு முகமாக வலம்புரி விநாயகர் உள்ளார். இவருக்கு வலப்புறம் பதினெட்டுப்படிகள் உள்ளன. ஆதலால் இவரைப் பதினெட்டாம்படி விநாயகர் என்று அழைக்கின்றனர். பதினெட்டுப் படிகளுக்கும் மேலே நேர் வடக்கே ஒரு படிக்கட்டு உள்ளது. இதற்கும் மேலே மலைச்சரிவின் மடியில் திருக்கோயில் சமதளம் உள்ளது.

படியிலிருந்து நேர்வடக்கில் ஆலமர் செல்வர் சந்நிதி தெற்குமுகமாக உள்ளது. இந்த மூர்த்தி சனகாதி நால்வருடன் வீற்றிருக்கிறார். இதற்கு மேற்கே பைரவர் சந்நிதி தெற்கு முகமாக உள்ளது. பைரவர் முன் மண்டபத்தின் முன்னால் உள்ள மேற்குத் தூணில் கிழக்கு முகமாகக் கருப்பர் சுவாமியும் கிழக்குத் தூணில் மேற்கு முகமாகச் சன்னாசிக் கருப்பர் சுவாமியும் உள்ளனர். இத்தூண்களுக்கிடையில் இந்தச் சுவாமிகள் இருவரின் ஆயுதங்களாகிய சூலம், அரிவாள் முதலிய நிறுத்தி வைக்கப் பெற்றுள்ளன; திருவடிகளும் உள்ளன. பைரவர் சந்நிதி முக மண்டப வாயிலின் இருபக்கமும் துவார பாலகர்கள் உள்ளனர். இவர்களின் வடிவங்கள் தனித்தனியே ஒவ்வொரு கல்லில் வடிக்கப் பெற்ற அற்புதமான வடிவங்களாகும். மகா மண்டபத்தின் வடக்கே சந்நிதிக்குக் கிழக்குப் பக்கம் பைரவர் உற்சவ மூர்த்தி உள்ளார்.

அர்த்த மண்டபத்திற்கு அப்பால் கருவறையில் நின்ற திருக்கோலத்தில் நான்கு திருக்கரங்களுடன் எழுந்தருளி அருள்பொழிந்து கொண்டிருக்கிறார் பைரவ சுவாமி. இவர் வலது திருக்கரங்களில் சூலமும், உடுக்கையும் இடது திருக்கரங்களில் நாக பாசமும், கபாலமும் கொண்டு விளங்குகிறார். இவர் அருளாற்றல் நிறைந்த மூர்த்தி ஆதலால் இவர் சந்நிதி புகழ் பெற்று விளங்குகிறது.

## விசுவநாதர் திருக்கோயில்

இத்திருக்கோயில், பைரவர் கோயிலோடு இணைந்து கருவறை, மேற்கே தனி விமானத்துடன் திகழ்கிறது. மகா மண்டபத்தின் கிழக்குப் பக்கம் வெளிப்புறச் சுவர் எழுப்பப் பெற்று அடைக்கப் பெற்றுள்ளது. அந்தச் சுவருக்குக் கிழக்கே விசுவநாதர் சந்நிதிக்குரிய நந்தி, பலிபீடம், கொடிமரம் ஆகியன உள்ளன. விசுவநாதர் சந்நிதிக்கு நேரே, அந்த வெளிப்புறச் சுவரில் சாளரம் அமைக்கப் பெற்றுள்ளது.

விசுவநாதர் கிழக்கு நோக்கி உள்ளார். விசுவநாதர் சந்நிதிக்குத் தெற்கே விசாலாட்சி சந்நிதி உள்ளது. விசுவநாதர் கோயிலின் தென்பக்கம் ஆலமர் செல்வரும், வடபக்கம் சண்டீசுவரும் உள்ளனர். இந்தத் தளத்தில் முன்னர்க்கூறிய ஆலமர்செல்வர் தனிச் சந்நிதிக்குக் கிழக்கே மடைப்பள்ளி உள்ளது. இவ்விரண்டுக்குமிடையே அருள்தரு மங்கைபாக சுவாமி திருக்கோயிலுக்குச் செல்லும் படிக்கட்டு உள்ளது.

## அருள்தரு மங்கைபாகர் திருக்கோயில்

## இலட்சுமி மண்டபம்

அருள்தரு மங்கைபாகர் திருக்கோயில் மேலே சொல்லப்பட்ட அந்தப் படிக்கட்டுக்கும் மேலே உள்ளது. இத்திருக் கோயிலின் தென்பகுதி மண்டபம் இலட்சுமி மண்டபம் எனப்படுகிறது. இந்த மண்டபத்தின் மேற்குச் சுவரையொட்டி கஜலட்சுமி திருவுருவம் கிழக்கு நோக்கி உள்ளது. கஷலட்சுமிக்கு வடக்கே சிறிய வடிவில் ஒரு விநாயகரும், பெரிய வடிவில் ஒரு விநாயகரும் கிழக்கு முகமாக உள்ளனர். இவ்விரு விநாயகரும் வீற்றிருக்குத்

*தளம் கல்தளமாகும். இந்தத் தளக்கற்களின் நெற்றியில் - வரிசையாக நான்கு விநாயகர் திருவுருவங்கள் புடைப்புச் சிற்பங்களாக உள்ளன. இந்த விநாயகர் திருவுருவங்களில் ஒன்று நின்ற திருக்கோலமாகவும், இரண்டாவதாகவும் நான்காவதாகவும் உள்ளவை இருந்த திருக்கோலமாகவும், மூன்றாவதாக உள்ளது நடனத்திருக் கோலமாகவும் உள்ளன.*

## ஆறுகால் மண்டபம் - ஏகாந்த மண்டபம்

*இலட்சுமி மண்டபத்திற்குக் கிழக்கே உள்ள மண்டபம் ஆறுகால் மண்டபம். இது ஏகாந்த மண்டபம் எனவும் அழைக்கப் பெறுகிறது. இந்த மண்டபத்தின் சுவரில் மேற்கு முகமாகத் திருஞான சம்பந்த சுவாமிகள் அருளிய இத்திருத்தலப் பாடல்கள் கல்வெட்டு 14. 2. 1960 இல் பதிக்கப் பெற்றுள்ளது. இந்த மண்டபத்தின் வடபுறச் சுவரில் சிறிய வடிவில் ஒரு விநாயகர் தெற்கு முகமாக உள்ளார். அவர் ஏகாந்த விநாயகர் எனப் பெறுகிறார்.*

## பெரிய மண்டபம் - சுந்தர பாண்டியன் மண்டபம்

*இந்த ஏகாந்த மண்டபத்திற்கு வடக்கே மூலவர் சந்நிதிக்கு நேரே ஒரு பெரிய மண்டபம் உள்ளது. இந்த மண்டபம் மாறவர்மன் சுந்தர பாண்டியனால் கட்டப் பெற்றதால் சுந்தர பாண்டியன் மண்டபம் எனப் பெறுகிறது. இந்த மண்டபத்தின் தென் மேற்குப் பகுதியில் ஒரு குறட்டின் மீது வல்லபை விநாயகர் கிழக்கு முகமாக உள்ளார். இந்தக் குறடு, செம்பன் என்பவரால் கட்டுவிக்கப் பெற்றதால் செம்பன் குறடு எனப் பெற்றுள்ளது. இந்த மண்டபத்தின் வடக்குப் புறச் சுவரையொட்டி, ஆடல் வல்லான் உற்சவ மூர்த்தி, தென்முகமாக எழுந்தருளியுள்ளார்.*

## வாத்திய, நிருத்த- மண்டபங்கள்

*சுந்தர பாண்டியன் மண்டபத்தின் தென்பகுதி வாத்திய மண்டபம்; சந்நிதிக்கு நேரில் உள்ள நடுப்பகுதி நிருத்த மண்டபம் ஆகும். சுந்தரபாண்டியன் மண்டபத்துக்கு மேற்கே அருள்தரு மங்கைபாக சுவாமி சந்நிதி முக மண்டபத்துக்கும் இடையே உள்ளது தேவசபா மண்டபம்.*

## தேவசபா மண்டபம்

*இந்த மண்டபம் கலைச் சிறப்புடைய அழகிய மண்டபம். இறைவன் - இறைவியின் திருமணக்கோலம் காண, தேவர்கள் கூடியிருந்த இடம் இது என்பது ஐதீகம். ஆனால், இவை பண்டைக்கால, கலை தொடர்பான சிற்பங்கள் என்பார் இரா.கலைக்கோவன். இந்த மண்டபத்தின் வடபுறம் உள்ள மேடையில் திருஞானசம்பந்த சுவாமிகள், வள்ளல்பாரி இவர்களின் உற்சவத் திருவுருவங்கள் தென்முகமாக உள்ளன. வள்ளல் பாரி சிலைக்கு மேலே சுந்தர மூர்த்தி சுவாமிகள் பாடியருளிய ''கொடுக்கிலாதானைப் பாரியேயென்று கூறினும் கொடுப்பாரில்லை'' என்னும் திருப்பாடல் கல்வெட்டு* ***7.5.1968*** *-இல் பதிக்கப் பெற்றுள்ளது. தேவசபா மண்டபத்தின் மேற்குச் சுவரில் சந்நிதிக்கு வலப்புறத்தில் ''நல்லவும் தீயவும் அல்ல'' எனத் தொடங்கும் கபிலர் பாடல்* ***7.5.1968*** *- இலும் இடப்புறத்தில் ''மேகத்திடி குரல் வந்தெழ'' எனத் தொடங்கும் திருப்பாடல்* ***5.4.1969*** *- இலும் கல்வெட்டுச் செய்து பதிக்கப் பெற்றுள்ளன.*

## அர்த்த மண்டபமும் மகா மண்டபமும்

*தேவசபா மண்டபத்திற்கு மேற்கே அர்த்த மண்டபம் உள்ளது. அர்த்த மண்டபத்திற்கும் கருவறைக்குமிடையே மேடையமைந்த சந்நிதி முக மண்டபம் உள்ளது. இதற்குத் தென் மேற்கே கற்பலகையில் செதுக்கப் பெற்ற அருள்தரு மங்கைபாக சுவாமியின் பிறிதொரு திருவுருவம் கிழக்குமுகமாக உள்ளது. இது அயலவர் படையெடுப்பின்போது, மூலவர் திருவுருவத்திற்கு மாற்றாகச் செய்து வைக்கப் பெற்றதெனக் கூறப்படுகிறது.அதற்கு மேற்கு கிழக்கு நோக்கி உள்ளது குடைவரைக் கோயில். இந்தக் குடைவரைக் கோயில் விமானம் உடையது. இந்தக் குடைவரை தூண் அமைப்பு இல்லாதது. நீண்ட சதுர வடிவில் அமைந்துள்ளது. அதன் வெளியே ஒரு சிறு முன் மண்டப அமைப்பையும் கொண்டுள்ளது. முன் மண்டபச் சுவரில், கருவறை நுழைவாயிலில் இரு பக்கங்களிலும் துவார சக்திகள் உருவங்கள் பாறையிலே செதுக்கப் பெற்றுள்ளன. கருவறைக்குள் குடைவரைப் பாறை-யிலே செதுக்கப் பெற்ற திருமேனி கொண்டு சிவபெருமான் திருமணக் கோலத்தில் எழுந்தருளியிருக்கிறார்.*

## திருமுறைக் காலப் பறம்புமலை

பன்னிரு திருமுறைகளுள் முதல் மூன்று திருமுறைகளை அருளிச் செய்தவர் திருஞானசம்பந்தர். இவர் பதிக மரபைப் பெரிதும் கையாண்டுள்ளார். பதிகம் என்பதற்குப் பத்துப் பாடல்களைக் கொண்டது என்பது பொருள். பெரும்பாலான பதிகங்கள் பத்துப் பாடல்களைக் கொண்டும், சில குறைந்தும் சில கூடியும் அமைந்துள்ளன.

திருஞானசம்பந்தரின் திருக்கொடுங்குன்றத் திருப்பதிகம் பத்துப் பாடல்களோடு பதினொன்றாம் பாடலையும் கொண்டுள்ளது. ஞானசம்பந்தர் பதினாறாயிரம் பதிகங்கள் அருளிச் செய்தார் என நம்பியாண்டார் நம்பிகள் கூறுகின்றார். சம்பந்தரின் திருப்பதிகங்களில் எட்டாவது பாடல், இராவணன் செய்த பிழையைப் பெருமான் மன்னித்து அவனுக்கு அருள் புரிந்ததைத் தெரிவிக்கின்றது. ஒன்பதாவது திருப்பாடல் திருமால் பிரமன் அடிமுடி தேடியறிய இயலாது எய்த்தமையை இயம்புகிறது.

பத்தாவது திருப்பாடல், சமணம், புத்தம் ஆகிய புறச் சமய நெறிகளைக் கடிந்துரைக்கிறது. பதினொன்றாவது பாடல் திருக்கடைக்காப்பு எனப் பெறும். பலசுருதி எனச் சொல்லப்பெறும் பதிகப் பயன் கூறும் பாடலாக, இத் திருக்கடைக்காப்பு விளங்குகின்றது. இதுபற்றியே அவர் அருளிய தேவாரத்திற்குத் திருக்கடைக்காப்பு எனப் பெயர் வழங்கலாயிற்று. அதில் பாடியவர் பெயரும் பதிகப்பயனும் கூறப்படுகிறது.

## தேவாரமும் மலைச்சிகரமும்

வளம் பொருந்தியதாக விளங்கிய பறம்புமலை என்னும் திருக்கொடுங்குன்றத்தைத் திருஞானசம்பந்தர் புகழ்ந்து பாடியிருக்க, தேவாரப் பதிகங்களை மலையாகவும், சிகரமாகவும் காண்போரும் உண்டு. இதனை,

**தேவாரத் திருப்பதிகங்கள் சமயநூல்களாகவும் இலக்கிய நூல்களாக வும், இசை நூல்களாகவும் காட்சியளிக்கின்றன. ஒவ்வொரு வகையிலும் அவ்வவ்வகை நூல்களில் தலைசிறந்தவைகளாகத் தேவாரத் திருப்பதிகங்கள்**

**விளங்குகின்றன. தேவாரத் திருப்பதிகங்கள் வெட்ட வெளியில் தனித்து இலங்கும் கம்பங்கள் போல் அல்லாது முன்னும் பின்னம் பக்கங்களில் விளங்கும் அழகிய மலைத்தொடர்களின் நடுவே ஓங்கி வளர்ந்து சிறப்புடன் திகழும் சிகரங்கள் போன்றவை**[59] என்பார் க.வெள்ளைவாரணர்.

## திருஞானசம்பந்தரின் பாடல்களில் புலனாகும் இயற்கை எழில்

இயற்கையழகோடு கூடிய பக்திச் சுவை உடையவை திருஞான சம்பந்தரின் பாடல்களாகும். அவற்றுள் மேலும் பல்விதமாகிய கருத்துகளும் உண்டு என்பதை, **சம்பந்தர் பாடல்களில் தலங்களின் இயற்கையழகு, பல வரலாற்றுச் செய்திகள், இசை, நடனம், சமணம், பௌத்தர் பற்றிய செய்திகள், தமக்கு முன்னிருந்தவரும் தம் காலத்தவருமான நாயன்மாரைப் பற்றிய குறிப்புகள் தம்முடைய வாழ்க்கை நிகழ்ச்சிகள், கோவில்களில் நடைபெற்ற விழாக்கள், வழிபாட்டு முறைகள், புராணக் கதைக்குறிப்புகள், சைவ சமயக் குறிப்புகள் முதலியவற்றைக் காணலாம். தலத்தின் இயற்கையழகை விளக்கும் பாடல்களில் செடிகள், கொடிகள், மரங்கள், மலர்கள் யாவும் குறிக்கப்பட்டுள்ளமை சம்பந்தரது கவனிக்கும் ஆற்றலையும் இயற்கை அழகை அனுபவிக்கும் மனப்பண்பையும் நன்கு விளக்கும்**[60] என்னும் குறிப்பினால் அறியலாம்.

இதன்வழியாக, கபிலர் காலத்துப் பறம்பின் வளம் திருஞானசம்பந்தர் காலத்துப் பாடலிலும் பதிவாகியுள்ளதை ஒத்துக்காண இயலுகிறது.

## திருஞானசம்பந்தரின் திருக்கொடுங்குன்ற வருகை

பாண்டிநாட்டின் பலபகுதிகளிலும் உள்ள குன்றுகளில் சமணர்கள் தங்கியிருந்து தங்களது நெறிகளைப் பரப்பிக் கொண்டிருந்தனர். அவற்றுள் திருக்கொடுங்குன்றமும் ஒன்று என்பதைச் சான்றுகள் மெய்ப்பிக்கின்றன. சைவத்தைப் பரப்புதற்காகச் சோழ நாட்டிலிருந்து பாண்டி நாட்டுக்கு வந்த திருஞானசம்பந்தர் பாண்டி நாட்டுத் தலங்களில் முதலில் பாடியது பறம்புமலையாகிய திருக்கொடுங்குன்றத்தையே என்பது குறிப்பிடத்தக்கது. இதனைச் சேக்கிழாரும் உறுதிப்படுத்துகிறார்.

***பாண்டி நாட்டிலுள்ள ஆனைமலை முதலிய மலைகளைத் தங்களுக்குரிய இருப்பிடமாகக் கொண்டு வாழ்ந்த சமணர்கள், தங்கள் சமயத்தைப் பரப்புவதுடன் பிற சமயத்தவர்களை யிகழ்ந்தும் வந்தனர். பாண்டிநாட்டிலிருந்து திருமறைக் காட்டிற்கு வந்த பரிசனங்கள், அங்கிருந்த திருஞானசம்பந்தரைப் பணிந்து தம் நாட்டின் நிலைமையை எடுத்துக் கூறிச் சிவநெறி பரப்பப் பாண்டி நாட்டிற்கு எழுந்தருள வேண்டும் என வேண்டினார்கள். திருஞானசம்பந்தர் அடியார்கள் புடைசூழச் சிவிகை-யிலமர்ந்து அகத்தியான்பள்ளி, கோடிக்குழகர் முதலிய தலங்களை வணங்கிச் சோழ நாட்டிலிருந்து தென்மேற்றிசையை நோக்கிச் சென்று தென்பாண்டி நன்னாட்டையடைந்தருளித் திருக்கொடுங்குன்றத்து இறைவனை வணங்கி மதுரை நகரத்தின் மருங்கே வந்தடைந்தார்***[61] என்னும் குறிப்புத் திருஞான சம்பந்தரது திருக்கொடுங்குன்ற வருகையைக் கூறுகிறது.

## திருஞானசம்பந்தரின் திருக்கொடுங்குன்றத் தேவாரத் திருப்பதிகம்

திருஞானசம்பந்தரின் திருக்கொடுங்குன்றத் தேவாரப்பதிகப் பாடல் ஒவ்வொன்றும் முதல் இரண்டு அடிகள் திருக்கொடுங்குன்ற இயற்கை எழிலைப்போற்றியும், இறுதி இரண்டு அடிகள் சிவபெருமானின் பெருமையைப் போற்றியும் பாடுகின்றது. நிறைவில், அம்மையப்பனாக இறைவன் எழுந்தருள்புரியும் திருநகரமாகத் திருக்கொடுங்குன்றத்தைப் போற்றுகிறது.

இப்பதிகத்தின் பாடல்தோறும் கொடுங்குன்றம் என்ற திருப்பெயர் இரண்டாம் அடியின் இறுதியிலும், நகரே என்னும் சொல், ஈற்றடியின் கடையிலும் இடம்பெறுகின்றன. ஆக, இத்திருத்தலம், சங்ககாலப் பறம்புமலையின் வளர்ச்சிகளைத் தொடர்ந்து சமயகாலத்திலும் தக்க வைத்துக் கொண்டிருந்திருக்கிறது என்பதற்குத் திருஞானசம்பந்தரின் தேவாரப்பதிகப்பாடல்கள் சான்றுபயக்கின்றன எனலாம். அவற்றைப் பின்வருமாறு தொகுத்தும் பகுத்தும் காணலாம்.

## இயற்கைவழியே இறைமையைப் போற்றுதல்

திருஞானசம்பந்தரின் திருக்கொடுங்குன்றத் தேவாரப்பதிகம்,

**வானிற்பொலி வெய்தும்மழை மேகங்கிழித் தோடிக்**

**கூனற்பிறை சேருங்குளிர் சாரற்கொடுங் குன்றம்[62]**

என்பதாகத் தொடங்குகிறது. இது குறித்து, இத்திருக்கோயிலின் பரம்பரை அறங்காவலராகவும், குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்தின் 45ஆவது குருமகாசந்நிதானமாகவும் திகழ்ந்த தவத்திரு குன்றக்குடி அடிகளார் பின்வருமாறு விளக்கம் அளிக்கிறார்.

**குளிர்சாரற் கொடுங்குன்றம் திருக்கொடுங்குன்றம் மிக உயர்ந்த மலை; வானைத் தொட்டுத் தழுவி உயர்ந்திருக்கும் மலை. மலை முகட்டில் மஞ்சு தவழ்கிறது. மழைபொழி மேகம் மலை முகட்டைத் தழுவித் தவழ்ந்து கிடப்பதாலும் மலை குளிர்ச்சி பொருந்தியிருக்கிறது. ஆங்கு வெப்பமில்லை; குளிர் சாரலாக விளங்குகிறது. கரும் புயலைப் பிறைச் சந்திரன் கிழித்துக்கொண்டு முன்னேறிச் செல்கிறது! ஆம்! முழுமதியன்று; ஆனாலும் முழுமதி ஆகக்கூடியது. குறை வடிவம் நீங்கி நிறை நல் வடிவம் பெற விரைந்து முன்னேறுகிறது கூனற்பிறை. இந்த இனிய காட்சியைத் திருஞானசம்பந்தர் பார்க்கிறார். வண்மைத் தமிழில் எழிலுற இனிய கவிதை பிறக்கிறது! இயற்கை எழிலில் தோய்ந்து கவிதை வருகிறது! நம்மையும் கவிதைவழி மலையழகில் ஈடுபடுத்துகிறார். இல்லை, திருஞானசம்பந்தர் ஞானத்தின் திருவுரு புறத்தியல் இயற்கையில் மட்டும் தோய்பவரல்லர். அந்த இயற்கையில் உயிராக விளங்கும் தத்துவத்திலும் திளைப்பவர். நம்மையும் திளைக்கச் செய்பவர். பிரான்மலை என்ற திருக்கொடுங்குன்றத்தில் எழுந்தருளியுள்ள நல்ல மங்கைபாகன், இன்பத் திருவுருவன்; தாயிற் சிறந்த தயாவுடையவன். நல்லறிவு கொளுத்துபவன். நன்னெறியில் நிறுத்துபவன். இன்பங்கள் வழங்குபவன். ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த இன்பத்தையும் அருளுபவன். நல்ல மங்கை பாகனின் திருவடிகள் ஆணவ வெப்பக்காற்றில் தவிக்கும் உயிர்களுக்குத் தண்ணிழல்; குளிர் நிழல். அத்திருவடிகளே நமது உயிர்க்கு உற்ற துணை! அத் திருவடிகளையடைந்து அயரா அன்பில் வாழ்த்தி வணங்குவோமாக[63]**

இக்குறிப்பானது இயற்கையைப் போற்றுதல் வழியாக இறைவனைப்போற்றும் மரபு வளர்ந்ததைச் சுட்டிக்காட்டுகிறது.

அதுமட்டுமன்றி, சங்ககாலத்துப் பாரிமகளிர் பாடிய வெண்ணிலவு, சமயக்காலத்துச் சம்பந்தர் பாடலில், கூனற்பிறையாக இடம்பெறுவதையும் பொருத்திப் பார்க்கலாம்.

பிறைசூடிய பெம்மானை மனத்திருத்தி, அவன் வீற்றிருந்து அருள்பாலிக்கும் இத்திருத்தலம், தென்கயிலாயம் எனப்போற்றும் அளவிற்கு உயர்ந்திருக்கிறது. இத் திருக்கொடுங்குன்றம்,

**ஆனிற்பொலி யைந்தும்அமர்ந் தாடியுல கேத்தத்**
**தேனிற்பொலி மொழியாளொடு மேயான்திரு நக**[64]

ராகத் திருஞானசம்பந்தர் காலத்தில் விளங்கியிருக்கிறது என்பதும் இப்பதிகத்தால் அறிய முடிகிறது. மங்கை பாகர் என்றும் தேனம்மை என்றும் இறைத்திருநாமங்கள் இங்கு எழுந்தருளியிருக்கும் அப்பனுக்கும் அப்பனுக்கும் உண்டு. தேனிற்பொலிமொழியாளொடு உலகேத்த இறைவன் திருவோலக்கம் கொண்டிருக்கும் பாங்கு இப்பாடலில் பொருத்தமுறச் சுட்டப்பெறுதல் சிறப்பு எனலாம்.

## குளிர்சாரற் கொடுங்குன்றத்தின் இயற்கை எழில்

குறிஞ்சி நிலமாகிய இத்தலத்தில் அந்நிலத்திற்குரிய கருப்பொருள்கள் இயல்பாகவே அமைந்திருக்கின்றன. மயில், குயில், யானை, சிங்கம் உள்ளிட்ட விலங்குகள், பறவைகள் இத்திருப்பதிகத்தில் இடம்பெற்றுள்ளன. கடம்பு, குருக்கத்தி, முல்லை ஆகியவற்றின் நாள் அரும்புகள் குரவமலர்களோடு விண்டு மணம் விரவும் பொழில் சூழ்ந்த தண்ணிய கொடுங்குன்றமாக விளங்கியதை, இப்பதிகச் செய்யுள்கள் பதிவுசெய்கின்றன.

மேகத்திடம் இடிக்குரல் தோன்றக் கேட்டுக் கோட்டான் என்னும் பறவை இனங்கள் அஞ்சி மலையினின்றும் இறங்கி வந்து ஓடித் திரிகின்றன. துதிக்கையை உடைய கரிய மதயானைகளின் கூட்டம் இடிக்குரல் அதிரக்கேட்டு அஞ்சிக் கொய்யத்தக்க மண மலர்களை உடைய சோலைகளில் புகுந்து ஒளிந்துகொள்கின்றன.

இத்தகு கொடுங்குன்றத்தின் அருவிகள், ஒளிவீசும் மணிகள், பசும்பொன், மணமுள்ள மலர்கள் ஆகியவற்றைத் தள்ளிக்கொண்டு வந்து நீரைச் சொரிகின்றன. யானைக் கூட்டங்கள் யாரும் தடுப்பார் இன்றி முதிய மூங்கில்களை உண்டு வெறுத்துப் பிறரால் அகழப்படாது இயற்கை-யிலேயே ஆழமாக உள்ள சுனைகளில் இறங்கி நின்று நீராடுகின்றன.

சிங்கத்தின் கர்ச்சனை ஓசையைக் கேட்டு அஞ்சிக் கொல்லும் தன்மையினவாகிய யானைகள் மன எழுச்சி குன்றி மலையிடையே உள்ள குகைப் பகுதிகளில் மறைந்து வைகும் கொடுங்குன்றம் எனவும், மதம் பொருந்திய யானைகள் தம்மின் வலிய சிங்கம் வருதலைக் கண்டு அஞ்சி மலையைக் குத்திப் பெருமுழையாக்கி, அதனிடை வைகும் கொடுங்குன்றம் எனவும் இத்திருத்தலத்தின் இயல்புகளை, இசைகொண்டு பாடியிருக்கிறார் திருஞானசம்பந்தர்.

***மயில்புல்குதண் பெடையோடுட னாடும்வளர் சாரல்***
***குயிலின்னிசை பாடுங்குளிர் சோலைக்கொடுங் குன்றம்***[65]

***மிளிரும்மணி பைம்பொன்னொடு விரைமாமல ருந்திக்***
***குளிரும்புனல் பாயுங்குளிர் சாரற்கொடுங் குன்றம்***[66]

***பருமாமத கரியோடரி யிழியும்விரி சாரல்***
***குருமாமணி பொன்னோடிழி யருவிக்கொடுங் குன்றம்***[67]

***மேகத்திடி குரல்வந்தெழ வெருவிவ்வரை யிழியும்***
***கூகைக்குல மோடித்திரி சாரற்கொடுங் குன்றம்***[68]

***கைம்மாமத கரியின்னின மிடியின்குர லதிரக்***
***கொய்ம்மாமலர்ச் சோலைபுக மண்டுங்கொடுங் குன்றம்***[69]

***மரவத்தொடு மணமாதவி மௌவல்லது விண்ட***
***குரவத்தொடு விரவும்பொழில் சூழ்தண்கொடுங் குன்றம்***[70]

***முட்டாமுது கரியின்னின முதுவேய்களை முனிந்து***
***குட்டாச்சுனை யவைமண்டிநின் றாடுங்கொடுங் குன்றம்***[71]

***அறையும்மரி குரலோசையை யஞ்சியடு மானை***
***குறையும்மன மாகிம்முழை வைகுங்கொடுங் குன்றம்***[72]

***மத்தக்களி றாளிவ்வர வஞ்சிம்மலை தன்னைக்***
***குத்திப்பெரு முழைதன்னிடை வைகுங்கொடுங் குன்றம்***[73]

என்றவாறு, திருக்கொடுங்குன்றத்து இயற்கை எழிலைப் பாடும் இப்பதிகத்து எட்டாம் பாடலின் இரண்டாம் அடியில் சுட்டப்பெறும் குட்டாச்சுனையை இப்போதும் இத்திருக்கொடுங்குன்றத் திருக்கோயில் மலைப்பகுதியில் காணலாம்.

இயற்கையைப்போற்றும் இந்த வைப்புமுறைக்கேற்ப, இறைவனின் அருளாடல் திறத்தையும், அவனது இயல்புகளையும் முறைப்பட விளக்குகிறது இப்பதிகம். வழக்கம்போல், இப்பதிகத்தின் எட்டாவது பாடல், இராவணனைப் பற்றிப்பாடுகிறது. தன்னோடு மனம் பொருந்தாது கயிலை மலையை எடுத்த அரக்கனாகிய இராவணனின் முடியணிந்த பத்துத் தலைகளையும் அடர்த்து ஒடித்தவனாகிய சிவபெருமான் உமையம்மையோடு மேவும் பெருநகராகும் எனப்பொருள் தரும் அப்பாடல் அடிகள் பின்வருமாறு.

***ஒட்டாவரக் கன்றன்முடி யொருபஃதவை யுடனே***
***பிட்டானவ னுமையாளொடு மேவும்பெரு நகரே***[74]

இப்பாடல் அடிகளோடு, இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணர் என்று இராவணனை முன்னிறுத்திச் சிவனைப் பாடிய கபிலரின் கலித்தொகைப் பாடலையும் ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

பத்தாம் பாடல், புத்தர்களும் பொல்லா மனமுடைய சமணர்களும் புறங்கூறத் தன் பக்தர்கட்கு அருள் செய்பவனாகிய சிவபிரான் மேவிய பழமையான நகராகும் என்று போற்றுகிறது. இத்தலத்தில் சமணர்கள் இருந்ததற்கான குறிப்புகளும் காணப்பெறுகின்றன.

பிறையைப் பாடுகிற முதற்பாடலில் தொடங்கிய இப்பதிகம், நிறைவாய் அமையும் பதினொன்றாவது பாடலிலும் பிறைபாடி

மகிழ்கிறது. வளைந்த பிறை மதியைச் சடைமுடிமீது அழகு மிகுமாறு அணிந்த சிவபிரானது திருக்கொடுங்குன்றைக் கடற்கரைச் சோலைகளால் சூழப்பட்ட கழுமலமாநகரின் தலைவனும் நல்ல கவுணியர் கோத்திரத்தில் தோன்றியவனுமாகிய ஞானசம்பந்தன் பாடிய தமிழ்மாலைகளை ஓதி வழிபட வல்லவர் தம்மிடமுள்ள குறைபாடுகள் நீங்கித்துன்பங்கள் அகன்று உலகம் போற்றும் புகழுடையோராவர் என்று முடிகிறது.

கூனற்பிறை சேரும் குளிர்சாரற்கொடுங்குன்றம் என்ற முதற்பாடலடியை நினைவூட்டும் இப்பதிகத்தின் இறுதிப்பாடல், கூனற் பிறை என்றே பின்வருமாறு தொடங்கி நிறைகிறது.

**கூனற்பிறை சடைமேன்மிக வுடையான்கொடுங் குன்றைக்**
**கானற்கழு மலமாநகர் தலைவன்னல கவுணி**
**ஞானத்துயர் சம்பந்தன நலங்கொள்தமிழ் வல்லார்**
**ஊனத்தொடு துயர்தீர்ந்துல கேத்தும்மெழி லோரே**[75]

வளைந்த பிறை மதியைச் சடைமுடிமீது அழகு மிகுமாறு அணிந்த சிவபிரானது திருக்கொடுங்குன்றைக் கடற்கரைச் சோலைகளால் சூழப்பட்ட கழுமலமாநகரின் தலைவனும் நல்ல கவுணியர் கோத்திரத்தில் தோன்றிய வனுமாகிய ஞானசம்பந்தன் பாடிய தமிழ்மாலைகளை ஓதி வழிபட வல்லவர் தம்மிடமுள்ள குறைபாடுகள் நீங்கித்துன்பங்கள் அகன்று உலகம் போற்றும் புகழுடையோராவர்.

இப்பதிகத்தில் மட்டுமன்றி, திருஞானசம்பந்தர் தமது திருச்சேத்திரக் கோவையிலும் திருக்கொடுங்குன்றம் குறித்துப் பாடியிருக்கின்றார். இறைவன் வீற்றிருந்து அருள்பாலிக்கும் மலைக்கோயில்களைப் பட்டியலிடும் திருஞானசம்பந்தர் தாம் பாடிய திருச்சேத்திரக்கோவைப் பாடலில்., திருக்கொடுங்குன்றத்தைப் பின்வருமாறு சுட்டிக் காட்டுகிறார்.

**அண்ணாமலை யீங்கோயு மத்திமுத்தா**
**றகலாமுது குன்றங் கொடுங்குன்றமுங்**
**கண்ணார்கழுக் குன்றங் கயிலை**

**கோணம் பயில்கற்குடி காளத்தி வாட்போக்கியும்**
**பண்ணார்மொழி மங்கையோர் பங்குடையான்**
**பரங்குன்றம் பருப்பதம் பேணிநின்றே**
**எண்ணாயிர வும்பகலு மிடும்பைக்**
**கட னீந்தலாங் காரணமே.[76]**

## திருக்கொடுங்குன்றம் பாடிய பிற அருளாளர்கள்

திருஞானசம்பந்தர் திருக்கொடுங்குன்றத்தின்மீது பதிகம் பாடிச் சிறப்பித்துள்ளதைப் போல, ஏனைய நாயன்மார்களில் திருநாவுக்கரசரும் சுந்தரரும் மாணிக்கவாசகரும், சேக்கிழார்பெருமானும், அருணகிரி நாதரும், திருஅருட்பிரகாச வள்ளலாரும் திருக்கொடுங்குன்றத்து இறைவனைப் பாடிப் போற்றியுள்ளார்கள். இக்குறிப்புகள் முறையே தேவார, திருவாசக, திருப்புகழ், திருவருட்பா நூல்களில் காணக் கிடைக்கின்றன. கொடுங்குன்றத்துத் திருத்தலத்தின் சிறப்பினை இப்பதிவுகள் எடுத்துக்காட்டும் சான்றுகளாக அமைகின்றன.

## திருநாவுக்கரசர் திருத்தாண்டகத்தில் திருக்கொடுங்குன்றம்

திருநாவுக்கரசர் தாம் இயற்றிய திருவாரூர்த் திருத்தாண்டகத்தில் திருக்கொடுங்குன்றத்து இறைவனைப் போற்றிப் புகழ்கிறார். திருவாரூர்ப் பெருமான் பார்வதி பாகனாய்ச் சுடுகாட்டில் இருப்பவனாய்ப் பிறை சூடியவனாய், இலைகளிடையே வளர்ந்த கொன்றை மலர் மாலையைச் சூடியவனாய், எல்லோருக்கும் தலைவனாய்க் கடலில் தோன்றிய நஞ்சினை உண்டவன். முல்லை நிலத் தலைவனான திருமாலை இடபமாக உடைய அப்பெருமான் கொடுங்குன்றத்தும் உறைபவன். கொல்லும் முத்தலைச் சூலத்தை உடைய அப்பெருமான் வில்லில் பூட்டிய அம்பினைச் செலுத்தும் ஆற்றலுடையவன். அவன் என் சிந்தையான் என்று போற்றிப் பாடுகிறார். அப்பாடல் பின்வருமாறு.

**மலைவளர்த்த மடமங்கை பாகத் தான்காண்**
**மயானத்தான் காண்மதியஞ் சூடி னான்காண்**
**இலைவளர்த்த மலர்க்கொன்றை மாலை யான்காண்**

***இறையவன்காண் எறிதிரைநீர் நஞ்சுண் டான்காண்***
***கொலைவளர்த்த மூவிலைய சூலத் தான்காண்***
***கொடுங்குன்றன் காண்கொல்லை யேற்றி னான்காண்***
***சிலைவளர்த்த சரந்துரந்த திறத்தி னான்காண்***
***திருவாரூ ரான்காண்என் சிந்தை யானே***[77]

சுந்தரர் திருஇடையாற்றூர்ப் பதிகத்தில் திருக்கொடுங்குன்றம்

*சுந்தரர் தமது தேவாரத்தில் திருஇடையாற்றூர்ப் பதிகத்தில் திருக்கொடுங்குன்றத்து இறைவனைக் குறித்துப் பாடுகிறார்.*

***நிறைய னூர்நின்றி யூர்கொடுங் குன்ற மமர்ந்த***
***பிறைய னூர்பெரு மூர்பெரும் பற்றப் புலியூர்***
***மறைய னூர்மறைக் காடு வலஞ்சுழி வாய்த்த***
***இறைய னூரெய்த மானிடை யாறிடை மருதே***[78]

*எங்கும் நிறைந்தவனும், விரும்பிச் சூடிய பிறையை உடையவனும், வேதத்தை ஓதுபவனும், வலஞ்சுழியில் பொருந்தியுள்ள கடவுளும், யாவராலும் அடையப்படும் பெருமானும் ஆகிய இறைவனது ஊர்கள், நின்றியூர், கொடுங்குன்றம், பெருமூர், பெரும் பற்றப்புலியூர், மறைக்காடு, இடையாறு, இடைமருது என்னும் இவைகளே எனப் புகழ்ந்து பாடுகிறார்.*

பாரியைப் பாடிய பாங்கு

*மேலும் பறம்புமலையாண்ட பாரியின் கொடை வன்மையை முன்னிறுத்தித் திருப்புகலூர்த் திருத்தலத்துப் பாடலில் குறிப்பிடுகிறார்.*

***“புலவர்காள், வலியும் வீரமும் இல்லாதவனை, இவன் மல்லுக்கு வீமனே போல்வான், வில்லுக்கு வெற்றியையுடைய அருச்சுனனே போல்வான் என்றும், கொடுத்தற்குணம் இல்லாதவனை, இவன் கொடைக்குப் பாரியே போல்வான் என்றும் இல்லது கூறிப்பாடினும், நீவிர் வேண்டுவதை நுமக்குக் கொடுப்பார் இவ்வுலகில் ஒருவரும் இல்லை; ஆதலின், நீற்றைக்கொண்ட திருமேனியையுடைய எம் புண்ணிய வடிவினனாகிய சிவபிரானது***

***திருப்புகலூரைப் பாடுமின்; பாடினால், பல உலக அடுக்கிற்கும் மேல் உள்ள அமரரது உலகத்தை ஆளுதல் உளதாம் என்றற்கு ஐயுறற் காரணம் யாதும் அறுதியாக இல்லை"***[79] *எனப் போற்றிப் பாடுகிறார்.*

***மிடுக்கி லாதானை வீம னேவிறல் விசய னேவில்லுக் கிவனென்று***
***கொடுக்கி லாதானைப் பாரி யேயென்று கூறி னுங்கொடுப் பாரிலை***
***பொடிக்கொள் மேனியெம் புண்ணி யன்புக லூரைப் பாடுமின் புலவீர்காள்***
***அடுக்கு மேலம ருலகம் ஆள்வதற் கியாதும் ஐயுற வில்லையே***[80]

*என்பதாக அப்பாடல் அமைகிறது.*

மாணிக்கவாசகர் திருச்சிற்றம்பலக் கோவையாரில் திருக்கொடுங்குன்றம் பாடியது

*தேன் ஒத்த திருவாசகம் அருளிய மணிவாசகர் தம் திருக்கோவையாரில், திருக்கொடுங்குன்றத் தேனை ஓர் அரிய உவமையாக்கிக் காட்டுகிறார்.*

*"இனி இயலாது உனது ஆயுள் முடிந்தது எனவந்த காலனைத் தடுக்க முடியாது ஓலமிட்டுக் கொண்டு ஓடும்படி அடித்த கூத்தன் வாழும்* ***கொடுங்குன்றின் நீண்ட சிகரங்களின்மேல் இருக்கும் தேன்விரும்பும் முடவனைப் போல*** *அக்கூத்தனை அடைய விரும்பி மெலிகின்ற நெஞ்சே" என்று நின்று நெஞ்சுடைந்து பாடுகிறார். அப்பாடல்,*

***மாற்றே னெனவந்த காலனை யோல மிடஅடர்த்த***
***கோற்றேன் குளிர்தில்லைக் கூத்தன் கொடுங்குன்றின் நீள்குடுமி***
***மேற்றேன் விரும்பு முடவனைப் போல மெலியுநெஞ்சே***
***ஆற்றே னரிய அரிவைக்கு நீவைத்த அன்பினுக்கே***[81]

*என்னுமாறு கொடுங்குன்றத்தின் தேனின் சுவையைப் போற்றியமைகிறது.*

சேக்கிழார் திருக்கொடுங்குன்றம் பாடியது

*திருஞானசம்பந்தர் சோழநாட்டிலிருந்து பாண்டியநாட்டிற்குள் திருக்கொடுங்குன்றத்தை முதலாகக் கொண்டு எழுந்தருளியதைச் சேக்கிழார் தமது பெரியபுராணத்தில் இரண்டு பாடல்களில் குறிப்பிட்டுக்*

காட்டுகிறார். அவற்றுள் வரலாற்றோடு, இத்திருத்தலத்தின் இயற்கை எழிலும், அரணமைப்பும் இணைந்து ஒளிவீசுகின்றன.

**நறுமணமுடைய பூக்குவியல்களை இருமருங்கிலும் அலைகளால் வீசி வருகின்ற பல ஆறுகளையும் கடந்து சென்று, முறுக்குடைய கொம்புகள் பொருந்திய கலைமான்களும் அவற்றுடன் இணைந்து வரும் பெண்மான்களும் அவற்றின் கன்றுகளும் கூட்டமாய்த் துள்ளிப் பாய்கின்ற நாடுகளின் இடையே உள்ள வழிகளைக் கடந்து, கொன்றை மலர்களின் மணமுடைய சடையை யுடைய இறைவர் வீற்றிருக்கும் திருக்கொடுங்குன்றத்தைச் சேர்ந்தார்**[82] என்ற பொருள் தரும் பெரியபுராணப்பாடல்,

**மன்றல்மலர்ப் பிறங்கல்மருங் கெறிந்துவரு நதிகள்பல**
**சென்றணைந்து கடந்தேறித் திரிமருப்பின் கலைபுணர்மான்**
**கன்றுதெறித் தெனவுகைக்கும் கானஅதர் கடந்தணைந்தார்**
**கொன்றைநறுஞ் சடைமுடியார் மகிழ்ந்ததிருக் கொடுங்குன்றம்**[83]

என்பதாகச் சேக்கிழார் வாக்கில் எழுந்து வருகிறது.

கொடுங்குன்றத்து நாதரைப் பாடிய பின்னர், திருஞானசம்பந்தர் மதுரை வந்தணைந்தார் என்பதைக் குறித்துக் காட்டும் சேக்கிழார். மீண்டும், திருக்கொடுங்குன்றத்தைப் பாடுகிறார். இப்போது இத்திருத்தலத்து நாதரே பவளமலை போல் தோற்றம் தருகிறார். அந்த அளவிற்கு இந்த மலை, அருளாளர்களை ஈர்த்திருக்கிறது என்பது தெளிவாகிறது. இதனை,

**கொடுங்குன்றத் தினிதமர்ந்த கொழும்பவளச் செழுங்குன்றை**
**அடுங்குன்றம் உரித்தானை வணங்கிஅருந் தமிழ்பாடி**
**நெடுங்குன்றம் படர்கானும் நிறைநாடுங் கடந்துமதி**
**தொடுங்குன்ற மதில்மதுரைத் தொன்னகர்வந் தணைகின்றார்**[84]

என்னும் சேக்கிழார் பாடல் தெளிவுபடுத்துகிறது.

## கபிலதேவர் சிவபெருமான் திருஇரட்டை மணிமாலையில் திருக்கொடுங் குன்றம் பாடியது

*பதினோராம் திருமுறையில் திருஇரட்டை மணிமாலையில் திருவாலவாயுடையார் திருமுகப்பாசுரத்திலும் திருக்கொடுங்குன்றம் குறித்த பதிவு உள்ளது.*

*ஒடுக்கக்காலத்தில் இறைவனைச் சார்ந்து நிற்கும் உயிர்களே அவ்விடத்து உள்ளன` என்னும் உண்மைப் பொருளை விளக்க வந்த கபிலதேவர், திருக்கொடுங்குன்றத்து நாதரை நோக்கி,*

***நட்டம்நீ ஆடும் பொழுதத்து நல்லிலயம்***
***கொட்டக் குழிந்தொழிந்த வாகொல்லோ அட்டுக்***
***கடுங்குன்ற மால்யானைக் காருரிவை போர்த்த***
***கொடுங்குன்ற பேயின் கொடிறு***[85]

*என்று பாடுகிறார்.*

*இப்பாடல், யானை உரி போர்த்த தேவனை, 'கொடுங்குன்ற நாத, உனது திருக்கூத்திற்குக் கொட்டி முழக்கப் பேய்கள் தவிரப் பிறர் இல்லையோ?' என விளித்து வினவி நகைக்கிறது.*

## அருணகிரிநாதர் திருப்புகழில் திருக்கொடுங்குன்றம்

*திருவண்ணாமலையில் பிறந்து திருமுருகனைத் தலந்தோறும் சென்று பாடிப்பரவுகிற அருணகிரிநாதர் திருக்கொடுங்குன்றத்திற்கும் வருகை தருகிறார். இத்தலத்திலங்கும் மூர்த்தியை முருகனாய்க் கண்டு பாடுகிறார்.*

*காம இன்பத்தில் களிப்பதை விடுத்து, முருகனது திருத்தொண்டில் தன்னை ஈடுபடச் செய்தருள வேண்டிப் பாடும் இப்பாடலின் சந்தத்தில் பறம்புமலையாகிய திருக்கொடுங்குன்றத்தின் இயற்கை எழில், வண்டுகள் வடிவில் இசை பாடுகிறது.*

***அனங்க னம்பொன் றஞ்சுந் தங்குங் கண்களாலே***
***அடர்ந்தெ ழும்பொன் கும்பக் கொங்கையாலே***

**முனிந்து மன்றங் கண்டுந் தண்டும் பெண்களாலே**
**முடங்கு மென்றன் தொண்டுங் கண்டின் றின்புறாதோ[86]**

என்ற வினாவை, ‘தெனந் தெனந் தெந்தெந்தெந் தெந்தெந்தெந்தென் என்ற ஒலிகளைச் செய்து, கூடி நெருங்கிச் சென்று, நல்ல முறையில் வண்டுகள் இசைக்க, வளைந்து விளங்கும் கிளைகளும், பூங்கொத்துகளும் நெருங்கிய சோலைகள் (சூழ்ந்துள்ள) செழுமையான திண்ணிய கொடுங்குன்றம் என்னும் பிரான்மலையில் வீற்றிருக்கும் தம்பிரானிடத்தில்’ பின்வருமாறு சந்தத் தமிழ் கொண்டு அருணகிரிநாதர் விடுக்கிறார்.

**தெனந்தெ னந்தெந்தெந்தெந் தெந்தெந் தெந்தனானா**
**செறிந்த டர்ந்துஞ் சென்றும் பண்பின் தும்பிபாடக்**
**குனிந்தி லங்குங் கொம்புங் கொந்துந் துன்றுசோலைக்**
**கொழுங்கொ டுந்திண் குன்றந் தங்குந் தம்பிரானே![87]**

காமத்திலிருந்து விடுபட்டுக் கடவுளை நோக்கிப் பயணிக்கும் அருள்வேட்கை அருணகிரிநாதருக்கு உண்டு. தன்னனுபவத்தோடு தமிழார் வமும் உந்தித்தள்ளச் சந்தப் பாடலில், திருக்கொடுங்குன்றத்துறையும் தம்பிரானைப் பாடிப் பரவுகிறார். இப்பாடலில் திருக்கொடுங்குன்றம், கொடுந்திண்குன்றம் எனப் பெயர் கொண்டமைகிறது.

மதயானை நிகர்த்த பொருட்பெண்டிரின் மயக்குறு தோற்றமும், அதனிடை முயங்கி, இந்திரிய ஒழுக்கம் தவறி, மானுட உடலம் அழியும் அவலத்தில் இருந்து விடுவிக்க வேண்டிய விண்ணப்பப் பாடலாக, பறம்புமலையாகிய திருக்கொடுங்குன்றத்து அருவி ஒத்த ஓசையுடன் எழுந்து ஒலிக்கிறது.

**எதிர்பொருது கவிகடின கச்சுக்களும் பொருது**
**குத்தித்தி றந்துமலை**
**இவைகளென வதிம்ருகம தப்பட்டு நின்றொழுகி**
**முத்துச்செ றிந்தவட**
**மெனுநிகள மவையறவு தைத்திட்ட ணைந்துகிரி**
**னிற்கொத்து மங்குசநெ ருங்குபாகர்**

எதிர்பரவ உரமிசைது கைத்துக்கி டந்துடல்ப
 தைக்கக்க டிந்துமிக
 இரதிபதி மணிமவுலி யெற்றித்ரி யம்பகனு
 முட்கத்தி ரண்டிளகி
 இளைஞுருயிர் கவளமென மட்டித்த சைந்தெதிர்பு
 டைத்துச்சி னந்துபொரு கொங்கையானை
பொதுவில்விவை யிடுமகளிர் பத்மக்க ரந்தழுவி
 யொக்கத்து வண்டமளி
புக இணைய வரிபரவு நச்சுக்க ருங்கயல்கள் செக்கச்சி வந்தமுது
பொதியுமொழி பதறஅள கக் கற்றை யுங்குலைய
 முத்தத்து டன்கருணை தந்துமேல் வீழ்
 புதுமைதரு கலவிவலை யிற்பட்ட மூந்தியுயிர்
 தட்டுப்ப டுந்திமிர
 புணரியுத தியில்மறுகி மட்டற்ற இந்திரிய
 சட்டைக்கு ரம்பையழி
பொழுதினிலும் அருள்முருக சுத்தக்கொ டுங்கிரியி
 னிர்த்தச்ச ரண்களைம றந்திடனே
 திதிதிதிதி திதிதிதிதி தித்தித்தி திந்திதிதி
 தத்தத்த தந்ததத
 தெததெதெத தெததெதெத தெத்தெத்தெ தெந்தெதெத
 திக்கட்டி கண்டிகட
ஜெகணகெண கெண ஜெகுத தெத்தித்ரி யந்திரித
 தக்கத்த குந்தகுர்த திந்திதீதோ
திகுடதிகு தொகுட தொகு திக்கட்டி கண்டிகட
 டக்கட்ட கண்டகட
 டிடிடுடுடு டிடிடுடுடு டிக்கட்டி கண்டிகட
 டுட்டுட்டு டுண்டுடுடு
 திகுகுதிகு திகுகுதிகு திக்குத்தி குந்திகுகு
 குக்குக்கு குங்குகுகு என்றுதாளம்
 முதிர்திமிலை கரடிகையி டக்கைக்கொ டுந்துடியு

***டுக்கைப்பெ ரும்பதலை***

***முழவுபல மொகுமொகென வொத்திக்கொ டும்பிரம***

***கத்திக்க ளும்பரவு***

***முகடுபுகு வெகுகொடிகள் பக்கத்தெ ழுந்தலைய***

***மிக்கக்க வந்தநிரை தங்கியாட***

***முதுகழுகு கொடிகருட னொக்கதி ரண்டுவர***

***வுக்ரப்பெ ருங்குருதி***

***முழுகியெழு பயிரவர்ந டித்திட்ட கண்டமும்வெ***

***டிக்கத்து ணிந்ததிர***

***முடுகி வரு நிசிசரரை முட்டச்சி ரந்திருகி***

***வெட்டிக்க ளம்பொருத தம்பிரானே!***[88]

விராலிமலைத் திருப்புகழில் திருக்கொடுங்குன்றம் (பிரான்மலை)

*விராலிமலைத் திருப்புகழிலும் பிரான்மலை பற்றிய குறிப்பு காணப்படுகிறது. அதில், வள்ளியின் மணவாளனாகிய முருகன், வயலூர், திருச்சிராப்பள்ளி, பிரான்மலை என்னும் கொடுங்குன்றம், மற்றும் விராலி மலையிலும் வாழ்கின்ற பெருமாளாகப் போற்றிப் பரவுகிறது.*

*திருப்புகழின் 118ஆவது பாடலான இச்செய்யுளில், இம்மலையைப் பிரான்மலை என்றே குறிப்பிடுகிறார். இதன்மூலம் அருணகிரிநாதர் காலத்திலேயே பறம்புமலையானது, திருக்கொடுங்குன்றம் எனவும் பிரான்மலை எனவும் வழங்கியதை அறியலாம். அப்பாடல் பின்வருமாறு.*

***இலாபமில் பொலாவுரை சொலாமன தபோதன***

***ரியாவரு மிராவுபக ...... லடியேனை***

***இராகமும் விநோதமு முலோபமு டன்மோகமு***

***மிலானிவ னுமாபுருஷ ...... னெனஏய***

***சலாபவ மலாகர சசீதர விதாரண***

***சதாசிவ மயேசுரச ...... கலலோக***

***சராசர வியாபக பராபர மநோலய***

***சமாதிய நுபூதிபெற ...... நினைவாயே***

***நிலாவிரி நிலாமதி நிலாதவ நிலாசன***

***நியாயப ரிபாலஅர ...... நதிசூடி***

***நிசாசர குலாதிப திராவண புயாரிட***

***நிராமய சரோருகர ...... னருள்பாலா***

***விலாசுகம் வலாரெனு முலாசவி தவாகவ***

***வியாதர்கள் விநோதமகள் ...... மணவாளா***

***விராவுவ யலார்புரி சிராமலை பிரான்மலை***

***விராலிம லைமீதிலுறை ...... பெருமாளே***[89]***.***

## திருவருட்பிரகாச வள்ளலார் திருவருட்பாவில் திருக்கொடுங்குன்றம்

*திருவருட்பிரகாச வள்ளலார் எனப்பெறும் இராமலிங்க சுவாமிகளும் திருக்கொடுங்குன்றத்து இறைவனை வணங்கிப் பாடியுள்ளார். இவ்வுலகில் நல்ல தவம் உடையவரும் கற்றறிந்த நவசித்தரும் வாழ்த்தி மகிழ்கிற கொடுங்குன்றத்து ஊதியமாக இறைவனைப் போற்றுகிறார்.*

*'உற்ற கொடுங்குன்றத்து எம் ஊதியமே' என்பது அவர் வாக்கு.*

***ஞானபரங் குன்றமென நண்ணிமகிழ் கூர்ந்தேத்த***

***வானபரங் குன்றலின்பா னந்தமே - வானவர்கோன் ...***

***தேமே டகத்தனொடு சீதரனும் வாழ்த்துஞ்சீ***

***ராமே டகத்தறிவா னந்தமே - பூமீதில் ...***

***நற்றவருங் கற்ற நவசித்த ரும்வாழ்த்தி***

***உற்றகொடுங் குன்றத்தெம் ஊதியமே - முற்றுகதிர் ...***

***இத்தூர மன்றி யினித்தூர மில்லையெனப்***

***புத்தூர் வருமடியார் பூரிப்பே - சித்தாய்ந்து ...***

***நாமீச ராகும் நலந்தருமென் றும்பர்தொழும்***

***ராமீசம் வாழ்சீவ ரத்தினமே - பூமீது***[90]

*என வரும் இப்பாடல், இராமலிங்க சுவாமிகளின் திருவருட்பா மூன்றாம் திருமுறையில் 2. விண்ணப்பக் கலிவெண்பாவில் (1961 - 1962) இடம் பெறுகிறது.*

*இவ்வாறு பல அருளாளர்களால் பாடப்பெற்ற தலமாகப் பாரீச்சுரம் விளங்கியுள்ளது. இக்கோயில் பற்றிய புராணச் செய்திகள் பலவும் கிடைக்கின்றன. அவற்றின் வழியாகவும் இனி இத்தல வரலாறு கூறும் புராணக் கதைகளையும் தொடர்ந்து காணலாம்.*

## புராணங்கள் கூறும் கதைகள்

*பறம்புமலையாகிய, திருக்கொடுங்குன்றத்தில் அருள்பாலிக்கும் இறைவருக்குப் புராண வரலாறுகள் காணக்கிடைக்கின்றன. வடமொழி-யிலுள்ள பிரமாண்ட புராணத்தில் 18 அத்தியாயங்கள் கூறப்பெற்றுள்ளன. இது தமிழில் சிவத்திரு. கே. ஆபத்துத்தாரணய்யரால் 1941-இல் பதிப்பிக்கப் பட்டுள்ளது.*

## தலம் தோன்றிய புராணக் கதை

*மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற வகையில் பெருமைக்குரிய கோயில்கள் பல உண்டு. அவற்றுள் ஒன்று திருக்கொடுங்குன்றம் என்றழைக்கப்படும் பிரான்மலை ஸ்ரீ கொடுங்குன்ற நாதர் ஆலயமாகும்.* **ஒருசமயம் வாயு, ஆதிசேஷனுக்கிடையே தங்களில் யார் பலசாலி என்ற சர்ச்சை எழுந்தது. இருவரும் தங்களுக்குள் போட்டி வைத்துக்கொண்டனர். ஆதிசேஷன் மேருமலையைச் சுற்றிக்கொள்ள வேண்டும், அதை வாயு பகவான் தனது பலத்தால் பெயர்க்க வேண்டும் என்பது போட்டி.**

**ஆதிசேஷன், மலையை இறுகப் பற்றிக்கொண்டார். வாயு அதைப் பெயர்க்க முயன்றார். காற்று பலமாக வீசியதில், மேருமலையிலிருந்து சில துண்டுகள் பெயர்ந்து விழுந்தன. அவ்வாறு விழுந்த ஒரு துண்டே, இங்கே மலையாக திருக்கொடுங்குன்றம் என்ற பெயரில் உள்ளது.**[91]

## அகத்தியக் கதைத்தொடர்பு

*மலை அடிவாரம், மலையின் நடுப்பகுதி, மலை உச்சி எனும் மூன்று நிலைகளிலும் சந்நிதிகள் கொண்டு காணப்படும் ஒரே ஆலயம் பிரான்மலை கொடுங்குன்றநாதர் ஆலயம்தான். தென்திசையை நேராக்க*

வந்த அகத்திய முனிவர் தான் விரும்பும் போதெல்லாம் இறைவனின் திருமணக் கோலத்தைக் கண்டு மகிழும் வரத்தைப் பெற்றார். அவ்வாறு அவர் வேண்டுதலுக்கிணங்க, இறைவன் மங்கையொரு பாகனாகக் காட்சி அளித்த பல தலங்களுள் இதுவும் ஒன்றாகும்.

இங்குள்ள மங்கைபாகர் எதிரில் நந்தி இல்லை. சிவன், அகத்தியருக்கு திருமணக் காட்சி கொடுத்தபோது, நந்திதேவர் கைலாயத்தில் இருந்தார். எனவே, சிவன் இங்கு நந்தி இல்லாமல் காட்சி தருகிறார். கொடிமரம், பலிபீடமும் கிடையாது. இலிங்க வடிவம் இன்றிச் சிவபெருமான் மங்கைபாகர் என்ற பெயரில் உருவத் திருமேனியுடன் காணப்படும் சிலை நவ மூலிகைகளின் சாறு கொண்டு செய்யப்பட்டதாகும். எனவே, இவருக்கு அபிஷேகம் செய்வதில்லை. பௌர்ணமியன்று புனுகு, சாம்பிராணித் தைலம் மட்டுமே சாத்துகின்றனர்.

**மங்கைபாகர், இத்தலத்தில் போக நிலையில் காட்சி தருகிறார். ஒவ்வொரு முறையும் இவருக்குப் புத்தாடையையே அணிவிக்கின்றனர். ஒரேநாளில் பலமுறை வஸ்திரம் மாற்ற வேண்டி வந்தாலும், புது வஸ்திரமே அணிவிக்கப்படும். கையில் வேதங்களுடன் காட்சி தருவதால் இவருக்கு, "வேதசிவன்" என்றும் பெயருண்டு. இந்தச் சன்னதியின் முன்மண்டப மேற்சுவரில் கைலாயத்தில் சிவ, பார்வதி திருமணம் காணச்சென்ற தேவர்கள், அசுரர்களின் சிற்பங்கள் வடிக்கப்பட்டிருப்பது சிறப்பான அமைப்பு**[92] ஆகும்.

## பைரவர் குறித்த புராணக் கதை

பிரான்மலையின் இன்று புகழ்பெற்று விளங்குவது பைரவர் சந்நி-தியாகும். இங்குள்ள பைரவர் வடுக பைரவராய் எழுந்தருளியிருக்கிறார். வடுகன் என்றால் பிரம்மச்சாரி என்ற பொருள் உண்டு. வீரன் என்ற பொருளும் கூறப்படுகின்றது. இந்தப் பைரவர் குறித்தும் புராணக் குறிப்புகள் உண்டு.

**முண்டாசுரன் என்னும் அரக்கன், சிவனைத் தவிர வேறு யாராலும் தனக்கு அழிவில்லை என்ற வரம் பெற்றதால், ஆணவத்துடன் அனைவரையும்**

**கொடுமைப்படுத்தினான். பிரம்மனையே அவன் போருக்கு அழைக்க, அவன் செருக்கை அழித்து அவனை அழிக்க, சிவன் ஏற்ற திருக்கோலமே ஸ்ரீ வடுகபைரவர் ஆகும். ஏவல், பில்லி, சூனியம் போன்றவற்றையும், காரியத்தடைகளையும் களைபவர் இத்தலத்து பைரவர். கருப்பு வஸ்திரம் சார்த்தி, எலுமிச்சை மாலை அணிவித்து இவரிடம் வேண்டிக் கொண்டால் பலன் கிடைக்கும்**[93] என்பது ஐதீகமாகச் சொல்லப்படுகிறது.

உமாதேவியின் புராணக்கதை

ஒருகாலத்தில் கயிலையில் உமாதேவியார், சிவபெருமானிடம் கேட்டுத் தவநெறிகளை உணர்ந்து கொண்டாள்; தவம் செய்ய விரும்பி இத்தலத்திற்கு வந்து பாதாளக்குகையில் கடுந்தவம் இயற்றினாள். அப்போது அம்பிகையின் சிரத்தைப் பிளந்து கொண்டு வெளிப்பட்ட அக்கினிப் பிழம்பு தூண்போல ஒளிமயமாய் நின்றது. இதன் கொடிய வெப்பத்தைத் தாங்க இயலாமல் அரிபிரமாதி தேவர்கள் நடுங்கினர். கயிலாயம் சென்று சிவபெருமானிடம் தெரிவித்தனர். சிவபெருமான் இத்தலத்திற்கு எழுந்தருளினார். தேவியின் தவாக்கினிப் பிழம்பு இறைவன் கருணையால் ஒளிமயமான லிங்கமாயிற்று. தேவி தன் திருக்கண்களால் இறைவனைத் தரிசித்து மகிழ்ந்தாள். தவாக்கினிப் பிழம்பு ஒளிமயமான லிங்கமானதால் அது உக்கிரலிங்கம் எனப் பெயர் பெற்றது. இந்த உக்கிரலிங்கத்தை அரிபிரமாதி தேவர்கள் வழிபட்டு உய்ந்தனர். சப்தமாதர்களுக்குக் காட்சியளிக்கும்படி தேவி வேண்டிக் கொள்ள, சிவபெருமான் பாதாள முகத்திற்கு வெளியே லிங்க வடிவமாகக் காட்சியளித்தார். சப்தமாதர்கள் அதுபோது இறைவனுக்குரிய உபசாரங்கள் செய்தனர். ல்அப்போது சிவபெருமான் உக்கிர லிங்கத்திற்கு வடக்கில் மூன்று திருவுருவத்துடன் காட்சி தந்தார். ஒரு திருவுருவத்தில் பவழங்களும், மற்றொரு திருவுருவத்தில் இரத்தினங் களும் முத்துக்களும், பிறிதொரு திருவுருவத்தில் அமுதமும் உண்டாயின. சப்தமாதர்கள் இவை யாவற்றையும் அவரவர் விருப்பப் படி மற்றவர்களுக்கு வழங்கினர். அம்பிகையின் அருளால், சிவபெருமான் அமுதபானம் அளித்தார். இதன் காரணமாக இங்கு எழுந்தருளியுள்ள அம்பிகை அமிர்தேசுவரி எனப் பெயர் பெற்றாள்.

*பின், திருமாலின் முயற்சியால், பிரமாதி தேவர்கள் முன்பில் அமிர்தேசுவரி- உக்கிரேசர் திருக்கல்யாணம் நடைபெற்றது. இத்திருக் காட்சியைக் கண்டு வழிபட்டு அரிபிரமாதி தேவர்கள் உய்தி பெற்றனர்.*

## இறைவனின் திருநடனம்

*சிவபெருமான் இத்திருத்தலத்தில், பாதாளத்திலும் கடோரகிரித் தாழ்வரையிலும் இரத்தின சபையிலும் நடனமாடுகின்றார். ஒரு காலத்தில் தேவியின் மகிழ்வுக்காகக் கயிலாயத்தில் சிவபெருமான் நடனமாடினார். தேவியும் பிரமாதி தேவர்களும் அட்டமாநாகங்களும் அந்த நடனத்தைக் கண்டு மகிழ்ந்தனர். அதுபோது அட்டமாநாகங்களுள் ஒன்றாகிய வாசுகி, இறைவனை நோக்கி, பாதாளத்திலுள்ள மற்ற எல்லா நாகங்களும் இந்த நடனத்தைக் கண்டு மகிழுமாறு பாதாளத்தில் ஆடியருள வேண்ட, அவ்வேண்டுகோளைச் சிவபெருமான் ஏற்றருளினார். பாதாளத்தில் இறைவன் நடனத்திற்கு ஏற்ப நாகங்களெல்லாம் தத்தம் தலைமணியாகிய இரத்தினங்களைக் கொண்டு ஒளிமயமான அரங்கத்தினை அமைத்தன.*

## இரத்தின சபை

*சிவபெருமான் இந்த இரத்தின சபையில் எழுந்தருளி, திருமாலும் பிரம்மாவும் தேவர்களும் வாத்தியங்கள் இசைக்க நடனம் ஆடினார். எல்லாரும் கண்டு இன்புற்றனர். இந்த இரத்தின சபையில் எப்போதும் இறைவன் தேவியோடு நடனம் செய்து கொண்டிருக்கிறார். இந்த இரத்தின சபை திருக்கொடுங்குன்ற நாதருக்குக்கீழே பாதாளத்தில் உள்ளது என்பது ஐதீகம்.*

## கடோரகிரி - பிரசண்டகிரி

*முற்காலத்தில் ஆதிசேடனுக்கும் வாயு பகவானுக்குமிடையே யார் வலிமையுடையவர் என்ற போட்டி எழுந்தது. அதனால் அவ்விருவரும் நூறு ஆண்டுகள் போர் புரிந்தனர். ஆதிசேடன் தனது ஒளிமயமான விரிந்த படங்களால் மகாமேருவின் சிகரங்களை மூடிக் கொண்டு வாயுபகவானை நோக்கி, ''வாயுவே! உனக்கு வலிமையிருந்தால் என் படங்களை விலக்கி*

இந்த மேருவின் சிகரங்களைப் பெயர்த்துச் செல்க! என்றார். இதைக் கேட்ட வாயுபகவான் மிகக் கோபம் கொண்டார்; தன் வியாபகத்தைச் சுருக்கிக் கொண்டார்; மேருவின் சிகரத்தைத் தன் ஆற்றல் முழுதும் கொண்டு பெயர்க்க முயன்றார். இதனால் உலக முழுதும் பரவியிருக்கிற காற்று அடங்கி விட்டது. ஆதிசேடனுக்கும் வாயுதேவனுக்கும் இடையே தொடர்ந்து போர் நடந்தது. அப்போது உலகங்களெல்லாம் உயிரற்றுப் போயின.

பிரம்மா அங்கு வந்தார். அவ்விருவரையும் நோக்கி, ''நீங்கள் இருவரும் உலகிற்கு முக்கிய ஆதாரமாயுள்ளவர்கள். உங்களால் இப்பொழுது உலகம் கொல்லப்படுகின்றது; இந்தப் போர் வேண்டாம்!'' என்று கூறி அமைதிப்படுத்த முயன்றார். இதனைக் கேட்ட வாயு பகவான், ''மேரு மலையின் சிகரத்தை நான் பெயர்க்காவிடில், எனக்கு அவமானம் ஏற்படும்;'' என்றார். ஆதிசேடன், ''நாங்கள் இருவரும் நிச்சயித்துக் கொண்டு இந்தப் போர் நடக்கிறது; ஆதலால், விடமுடியாது'' என்றார்.

பிரம்மா ஆலோசித்தார்; தேவர்கள் அனைவரையும் அழைத்தார்; ஆதிசேடனைத் துதி செய்யுமாறு கூறினார். தேவர்கள் ஆதிசேடனை நோக்கி, ''நீதான் உலகிற்கு ஆதாரமானவன் உலகத்தைக் காக்கும் பொருட்டு மேருவின் கொடுமுடிகளை விட்டுவிடு!'' என்று துதித்தனர். ஆதிசேடன் தேவர்களின் வேண்டு கோளைக் கேட்டு அந்தக் கொடுமுடிகளை விட்டான். வாயுபகவான் தன் முழுவலிமை கொண்டு அந்தச் சிகரங்களைப் பெயர்த்தார்; அவற்றுள் கடினமாகிய ஒரு சிகரத்தை அதிவேகத்துடன் தூக்கிக் கொண்டு வானவீதியில் சென்றார். அதனால் கடோரகிரிக்குப் பிரசண்டகிரி எனும் பெயர் வந்தது.

## கொடுமுடியே கொடுங்குன்றம்

இவ்வாறு தூக்கிக் கொண்டு வந்த இந்தக் கொடுமுடியின் பளுவைத் தாங்க மாட்டாமல் வலிமையற்று வாயு பகவான் ஆகாயத்திலிருந்து அதனை எறிந்தார். அக்கொடுமுடி சிவலிங்க வடிவில் பூமியில் வீழ்ந்தது. இந்த மலை, மிக உயரமாக வானளாவி நின்றது. அதனால், சூரியனின்

பாதை தடையுற்றது. இதனைக் கண்ட தேவர்கள் கவலை கொண்டு, கயிலையை அடைந்து சிவபெருமானை வணங்கி உண்மையை உரைத்தனர். யாவற்றையும் அறிந்த எம்பெருமானாகிய இறைவன் புன்முறுவல் பூத்து, பைரவரைத் தம்பக்கம் அழைத்தார். ‘‘அந்தக் கொடுமுடியை அந்த இடத்திலேயே நிறுவிச் சூரியனுக்கு வழியுண்டாக்கித் தருக!’’ என்று திருவாய் மலர்ந்தருளினார். பைரவர் கையில் சூலமேந்தி இந்த மலைக்கு அருகில் வந்தார்; சிகரத்தில் சூலத்தை நாட்டி அந்த மலையின் மூலத்தைப் பிளந்து வெளியே வந்தார். அச்சமயம் உலகில் உள்ள மலைகளெல்லாம் ஆடின. பிறகு சூலத்தைக் கையிலேந்தி, புன்முறுவலோடு விளங்கினார் பைரவமூர்த்தி.

பின், தேவர்கள் அனைவரும் அங்கே வந்து பைரவரைத் துதித்தனர். பைரவர் அங்கேயே எழுந்தருளி அருளினை வாரி வழங்கிக் கொண்டிருக் கிறார். இந்தக் கடோரகிரி சிவசக்தி வடிவமானது. அதனால் இத்திருத்தலம் மிகவும் மேன்மையானது. இதனை வழிபடுவோர் எல்லாப் பேறுகளையும் எய்துவர் என்கிறது புராணக்கதை.

## தென் கயிலாயம்

ஆதிசேடனுக்கும் வாயு தேவனுக்கும் ஏற்பட்ட போரினால், மேருவின் கொடுமுடி வாயுதேவனால் பெயர்க்கப்பட்டபோது, ஆதிசேடன் தலையிலிருந்த ஒரு மணி, அந்தக் கொடுமுடியுடன் சேர்ந்து தவம் செய்து கொண்டிருந்த காலாக்கினிருத்திரன் முன்பில், சிவபெருமான் ஆணையால் வீழ்ந்தது. அதைப் பார்த்த காலாக்கினிருத்திரன் அதன் அழகைக் கண்டு அதைச் சிவலிங்கமாகச் செய்து பூசிக்க எண்ணி, கயிலாயத்துச்சியானைத் திண்மையான எண்ணத்துடன் தியானம் செய்தார். தியான மகிமையால் அந்த மணி ஈசுவரத் தன்மையுடன் கயிலாய வடிவம் ஆகி கடோரகிரிக்கு மூலமாக அமைந்து விட்டது. அதுதான் தேவி எழுந்தருளியுள்ள இடம்; ஈசனின் நடன குதானம். அங்கு, தேவியுடன் பிரியாமல் பரமசிவன் இருப்பதால் இதற்குத் தென்கயிலாயம் என்று பெயர் ஏற்பட்டது. சிவாசலம் என்றும் இதற்குப் பெயர். இவ்வாறு இம்மலையின் பல பெயர்களைப் புராணங்களின் வழி அறிய முடிகிறது.

## தலவிருட்சங்களும் அதன் சிறப்பும்

*திருக்கொடுங்குன்றத்துத் திருத்தலத்தின் தலவிருட்சங்கள் குறித்துப் பல கருத்துகள் நிலவுகின்றன.*

*இத்திருத்தலத்திற்குரிய* ***தலவிருட்சம் பலா*** *என்று குறிப்பிடும் மரு.பரமகுரு* ***வேறு இரண்டு மரங்களும் சிறப்பாகச் சொல்லப்படுகின்றன***[94] *என மற்றொரு கருத்தையும் சுட்டுகிறார்.*

*இதனை உறுதி செய்யும் விதமாக,* ***இத்தலத்தின் தலவிருட்சங்களாக உறங்காப்புளி மரம், பெயரில்லா மரம் என்று இரண்டு மரங்கள் உள்ளன. உறங்காப்புளி மரம் கோயிலுள் உள்ள தீர்த்தத்தின் கரையில் உள்ளது. பெயரில்லா மரம் மலைமீது சுவாமி (மங்கைபாகர்) சந்நிதிக்குப் பக்கத்தில் மலைக்கற்களின் இடுக்கில் உள்ளது. இதுவரை இம்மரத்தை என்ன பெயர், எந்த வகையைச் சார்ந்தது என்பதை யாராலும் அறிந்து கொள்ளமுடியாததால் இதனைப் பெயரில்லா மரம் என்று அழைக்கின்றனர்***[95] *என்னும் குறிப்பு விளங்குகிறது.*

## திருக்கொடுங்குன்றத்துத் தீர்த்தங்கள்

*வானில் இருக்கும் விண்மீன்களின் எண்ணிக்கையை விடவும் அதிகமானவை எனக் கபிலரால் சுட்டப்பட்ட பறம்பின் சுனைகள் பக்தி இலக்கியக் காலத்தில் திருக்கொடுங்குன்றத்துத் தீர்த்தங்களாகப் பதிவு பெற்றிருக்கின்றன. இதனை,* ***இத்திருத்தலம் தீர்த்தச் சிறப்பு மிக்குடையது. திருக்கோயிற் பகுதியிலுள்ள தீர்த்தங்களன்றி மலைமேல் பல தீர்த்தங்கள் உள்ளன. தல புராணத்தில் 108 தீர்த்தங்கள் சொல்லப்படுகின்றன***[96] *என்னும் கூற்றினால் உணரலாம். அவற்றுள் முக்கியமானவை பின்வருமாறு;*

### தேனாடி தீர்த்தம் (மது புஷ்கரணி)

*இது மகத்தான பெருமையுடையது. திருக்கொடுங்குன்ற நாதர் சந்நிதிக்குக் கிழக்கேயுள்ளது. இத்தீர்த்தத்தில் ஆடி, பெருமானை வழிபட்டால் மகப்பேறு, நோய் நீக்கம், செல்வம் முதலிய எல்லாப் பேறுகளும் எய்தலாம்.*

### குஷ்ட நிவார தீர்த்தம்

இது திருக்கொடுங்குன்ற நாதர் சந்நிதியின் இடப்பக்கம் பாறையில் உள்ளது. தொழுநோயுற்ற புண்டரீக முனிவர் என்பார், இத்தீர்த்தத்தில் மூன்று நாள் மூழ்கியெழுந்து இறைவனை வழிபட்டு நோய் நீங்கினார். அது முதல் இந்தத் தீர்த்தத்திற்குக் "குஷ்டாபகம்"எனும் பெயர் உண்டானது. இதில் குளித்து இறைவனை வழிபட்டால் எல்லாப் பிணியும் நீங்கும்.

### அம்பாள் தீர்த்தம்

இது குஷ்ட நிவாரண தீர்த்தத்திற்கு வடக்கே பாறையில் உள்ளது. இதில் குளித்து அம்மையை வழிபட்டால் எல்லாப் பேறுகளும் இனிது கிடைக்கும்.

### சுப்பிரமணிய தீர்த்தம்

அம்பாள் தீர்த்தத்திற்கு வடக்கே பாறையில் உள்ளது. இதில் மூழ்கி முருகனை வழிபட்டால் மூண்ட துன்பமெலாம் நீங்கிச் சுகம் பெறுவர்.

### பைரவ தீர்த்தம்

இந்தத் தீர்த்தம் பைரவர் கோயிலுக்குப் பின்பக்கம் உள்ளது. இதில் மூழ்கி இறைவனை வழிபட்டால் எல்லாப் பேறுகளும் எய்துவர்.

### சித்த தீர்த்தம்

இந்தத் தீர்த்தம் மலையின் சிகரத்தில் உள்ளது. அபூர்வமான மூலிகைகள் கலந்துள்ள இத்தீர்த்தத்தைப் பருகினால் பிணிகள் நீங்குகின்றன. உடலுறுதி பெறுகின்றனர். இதற்கு அருகில் பல தீர்த்தங்கள் (சுனைகள்) உள்ளன. அவற்றில் குளிப்பவர் பிணிகள் நீங்கி நலம் பெறுவர்.

### குரு தீர்த்தம்

இது மலையின் கிழக்குப் பகுதியில் உள்ளது. சந்திரனின் தோஷத்தால் பீடிக்கப்பட்ட குருவின் பத்தினி, இதில் நீராடி அத்தோஷத்தினின்றும் நீங்கினாள். வியாழக்கிழமையிலும், வெள்ளிக்கிழமையிலும், ரேவதி

நட்சத்திரத்திலும் பரதாரம் விரும்பிய ஆடவரோ, பர ஆடவரை விரும்பிய பெண்களோ இத்தீர்த்தத்திலாடி இறைவனை வழிபட்டால் அத்தோஷம் நீங்கும் என்று தல புராணம் கூறுகிறது.

### சோம தீர்த்தம்

இது உக்கிரலிங்கத்தின் வடமேற்கில் உள்ளது. இதில் சப்த முனிவர்களின் பத்தினிகள் நீராடி இறைவனைப் பூசித்துப் பேறு பெற்றனர். இதில் குளித்து வழிபாடு செய்தவர் சகல செல்வங்களும் பெற்று, சிவப் பேறடைவர்.

### தண்டத் தீர்த்தம் (வேளார் குளம்)

இந்தத் தீர்த்தம் ஊருக்கு மேற்கே உள்ளது. சிவபெருமானின் தண்டத்தின் நுனியால் பூமியில் தோண்டப்பட்ட தீர்த்தம் இது. அதனால் தண்டநீ எனவும் தண்டத்தின் நுனியால் (கோடியால்) ஏற்பட்டதால் கோடி தீர்த்தம் எனவும் வழங்கப்பெறுகின்றது. பைரவர் திருக்கோயிலைக் கட்டிய வாட்படைத் தலைவனான துவாரபதி வேளார் பெயரால் இது வேளார் குளம் என்று வழங்கப் பெற்று இருக்கலாம். இறைவன், இறைவி திருமஞ்சனத்துக்கு நாள்தோறும் இக்குளத்திலிருந்து யானை மீது தீர்த்தம் கொண்டு வரப் பெறுகின்றது. தீர்த்தத் திருவிழா இங்கு நடைபெறுகிறது. நாலாம் திருநாள் ஆதீன மண்டபப்படியன்று இதன் கிழக்குக் கரையில் உள்ள சங்கரலிங்க விநாயகருக்குச் சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது.

பறம்புமலை பற்றிய இலக்கிய, புராண ஆதாரங்கள் இவற்றுடன் கல்வெட்டு ஆதாரங்களும் கிடைக்கின்றன. இவை பக்தி இலக்கியக் காலத்தில் இருந்த பறம்புமலை பற்றிய பல செய்திகளைச் சுட்டுகின்றன.

### கல்வெட்டு ஆதாரங்கள்

தமிழகத்தின் பல இடங்களில் குடவரைக் கோயில்களைக் காணலாம். முன்னர் களப்பிரர், சமண மதம் தழுவிய பல்லவ,சோழர்களாலும், பின்னர் சைவம் தழுவிய முற்காலப் பாண்டியர்களாலும் குடைவரை குகைக்கோ-யில்கள் உருவாக்கப்பட்டுள்ளன.

**சிவகங்கை மாவட்டத்தில் அனைவரும் அறிந்த பிள்ளையார்பட்டி கற்பக விநாயகர் கோயில். திருக்கோளக்குடி, குன்றக்குடி, பிரான்மலை, அரளிப்பாறை, மகிபாலன்பட்டி... என்று வரிசையாக பல குடவரைக் கோ-யில்கள் உள்ளன. இங்குள்ள கல்வெட்டுகளில் சிந்துசமவெளி எழுத்துக்களின் எச்சமாகக் 'தமிழி' எனப்படும் கி.மு.3 ம் நூற்றாண்டைச் சேர்ந்த தமிழ் பிராமிக் எழுத்துக்கள் கல்வெட்டுக்களாக உள்ளன.[97]**

## கல்லெட்டுகளில் அருவியூரும் திருக்கொடுங்குன்றமும்

சோழர்களின் காலத்தில் சோழ நாட்டிலிருந்து குடிபெயர்ந்த வணிகப்பிரிவின் ஒரு குழுவினர் பறம்புமலையாகிய பிரான்மலைக்கு அருகில் குடியேறினர். அருவியூர் எனும் பெயர் பெற்ற அவ்வூரில் வாழ்ந்ததால் நகரத்தார் என அழைக்கப்பட்டனர். இவர்களின் வாழ்வியலோடு கூடிய கல்வெட்டு ஆதாரத் தொடர்பு பறம்புமலையை இணைப்பதாக அமைகிறது.

**பண்டைக்காலத்தில் தென்னிந்தியாவில் ஒருபெரிய வணிகக் குழுவினர் இருந்தனர். இவர்கள் நாலாதிசையும் சார்ந்தவர்கள் அல்லது நானாவித பொருள்களை விற்கும் வணிகர்கள் என்ற பொருளில் நானா தேசிகள் எனப்பட்டனர். இக்குழுவில் ஐந்நூறு பேர்களிருந்ததால் ஐந்நூற்றுவர் எனவும் குறிக்கப்பெற்றனர். நாவலந்தீவாகிய இந்தியாவிலும் கடல்கடந்த நாடுகளிலும் எல்லாத்திசைக்கும் சென்று வாணிபம் செய்து வந்தனர். ஆகவே, திசையா-யிரத்தைந்நூற்றுவர் என்றபெயரும் இவர்களுக்குண்டு. இவர்களின் தலைமை நகரம் ஐய்யப்பொழில் என்றவூராகும். அது இன்றைய கர்நாடக மாநிலத்திலுள்ள ஐஹோல்** (Ihol) **என்ற ஊராகும். இவர்கள் தங்களூர்களுக்கு எறிபடை நல்லூர், எறிவீரபட்டினம் என்று பெயரும் இட்டுக் கொள்வர். பிரான்மலைக்கு வடக்கே புழுதிபட்டியை அடுத்துச் செட்டி குறிச்சி எனும் ஊருள்ளது. அவ்வூர் முன்பு எறிபடை நல்லூர் என்று அழைக்கப்பட்டது[98]** என்னும் பதிவு இவர்களுக்கும் பிரான்மலைக்கும் உள்ள தொடர்பை எடுத்துக் காட்டுவதாக அமைகிறது.

இவ்வகைக் குழுவினர் தங்களைப் பூமிதேவி புத்திரர், இராசபரிபாலகர், சித்திரமேழியினர், ஸ்ரீ வாசுதேகசகாயர், ஸ்ரீ ஐயப்பொழில் பரமேஸ்வரிக்கும் பூமிதேவிக்கும் புத்திரர் எனக் குறித்துள்ளனர்.

பிரான்மலைக் கல்வெட்டில், **திசைவிளங்கு திசையாயிரத்து ஐநூற்றுவரோமும், அறங்கள் தரங்களில் திசை விளங்குதிசையாயிரத்து ஐநூற்றுவரோமும் நாடுநகரங்களில் திசையாயிரத்து ஐநூற்றுவரோமும் கேரளசிங்கவளநாட்டு அருவிமாநகரமான குலசேகரப் பட்டினத்து நகரத்தோமும்**[99] எனத் திசையாயிரத்து ஐநூற்றுவருடனாகிய அருவியூர் நகரத்தார்களும் குறிக்கப்பெறுகின்றனர்.

ஐநூற்றுவ மங்கலம் எனும் ஐநூற்றுப்பட்டிக் கல்வெட்டு

மேலும் பழைய அருவிமாநகருக்கு வடமேற்கே ஐந்நூற்றுவமங்கலம் என்ற வணிகப்பெருநகரமிருந்தது. அது இன்று ஐநூத்திப்பட்டி என வழங்கப்பெறுகிறது. இவைகளிலிருந்து திசையாயிரத்து ஐந்நூற்றுவர்கட்கும், அருவியூர் நகரத்தாருக்கும் உள்ள தொடர்பை நன்கு அறியலாம்.

**அருவியூர் நகரத்தார் வழிபட்ட தெய்வம் தேசிவிநாயகர். பிள்ளையார்பட்டிக் கோவிலிலுள்ள கல்வெட்டுகளின்படி (கி.பி. 1228, 1305) அக்கோவிலிலுள்ள விநாயகரின் பெயர் தேசியவிநாயகரே! கற்பகவிநாயகர் என்பது பின்னாலிடப்பெற்ற பெயர். அருவியூரில் தேசிவிநாயகர் கோவி-லிருந்தது. சிவபுரிப்பட்டியில் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் (கி.பி. 1233) அருவியூரார் தேசிவிநாயகரை எழுந்தருளுவித்தனர். அதே மன்னனின் கி.பி. 1228 ஆம் ஆண்டுக் கல்வெட்டு பிள்ளையார்பட்டி விநாயகரை தேசிவிநாயகர் எனக்குறிக்கிறது. ஆகவே, அருவியூர் நகரத்தாருக்கும் பிள்ளையார்பட்டி தேசிவிநாயகருக்கும் உள்ள தொடர்பை அறியலாம். அருவியூரார், கோட்டாற்றில் கோவில் கட்டி வழிபட்ட விநாயகர் கோவில், தேசிவிநாயகர் என்ற மரகதவிநாயகர் கோவிலே என்பதும் குறிப்பிடத்தக்கது.**[100] இவற்றால் விநாயகர் வழிபாட்டிற்கும் அருவியூர் நகரத்தாருக்குமுள்ள தொடர்பையும் இவற்றை இணைக்கும் நிலையாக பறம்புமலை விளங்கியதையும் அறியலாம்.

இது குறித்த மற்றொரு தகவலாக, **அருவியூரார், சுந்தரத்தார் என்ற குழுமங்கள். இவர்கள் அனைவருமே தாங்களும் மணிபல்லவத்-திலிருந்து வந்து, காவிரிப்பூம்பட்டினத்தில் குடியேறி, அங்கிருந்து பாண்டிய**

***மன்னனின் அழைப்பில் பாண்டிநாடு வந்ததாகக் கூறுவார்கள். சுந்தரத்தார் என்போர் புதுக்கோட்டை மாவட்டத்தைச் சேர்ந்த சுந்தரப்பட்டணத்தில் குடியேறியவர்கள். அருவியூரார் என்போர் அருவியூர் குலசேகரன்பட்டினம் என்னும் ஊரில் மையம் கொண்டவர்கள். வெளிநாடுகளிலும் பாரதத்தின் பலபாகங்களிலும் வர்த்தகம் செய்தவர்கள் இந்த குழுமங்கள்தாம். "திசை ஆயிரத்து ஐந்நூற்றுவர்", "நானாதேசி", "மணிக்கிராமம்", என்ற பெயர்களில் மிகப்பெரிய வர்த்தக அமைப்பை அவர்கள் வைத்திருந்தார்கள். இது இப்போது உள்ள*** chamber of commerce ***என்பதை விட இன்னும்*** corporate ***தன்மைகள் கொண்டதாகும். அதன் செயல்பாட்டுத்திறம் வியக்கவைக்கக் கூடியதொன்று. அவர்கள்தாம் தாய்லந்தில் உள்ள "தாக் குவாப் பா" என்னும் இடத்தில் நந்திவர்மபல்லவனின் பெயரால் "அவனிநாராயணம்" என்ற தடாகத்தை நிறுவினர். சுமாத்ராவின் பாலெம்பாங்க் என்னும் இடத்தில் இவர்களின் கல்வெட்டு காணப்படுகிறது. "அப்படியே கப்பல் கப்பல்களாக ஒரே நாளில்*** on cash terms ***வாங்கிவிற்கிறார்கள்", என்று பதினாறாம் நூற்றாண்டில் மலேசியாவின் மலாக்காப்பேரரசின் தலைநகருக்கு வந்த போர்த்துகீஸ் பயணி எழுதியிருக்கிறான். அவர்கள் வசித்த நகரப்பகுதியே பெரும் வளத்துடன் திகழ்ந்ததாம். இன்று மலாக்கா நகரின் ஒரு பகுதி "தஞ்சொங் கெலிங்க்" என்ற பெயரிலேயே விளங்குகின்றது. இவர்களின் முக்கிய தெய்வங்கள் தேசி-விநாயகர், ஐந்நூற்றீசர் என்னும் சிவன். சுந்தரப்பட்டனம் பல காலத்திற்கு முன்பே எடுபட்டுப்போனது. ஆனால் அருவியூர் 14ஆம் நூற்றாண்டு வரைக்கும் இருந்து, அதன் பின்னர் அழிந்துவிட்டது***[101] என்று ஜெயபாரதி குறிப்பிடுகிறார்.

மற்றொரு கல்வெட்டுச் சான்று

முந்தைய சான்றுகளில் கூறப்பட்ட பறம்புநாடு - முத்தூற்றுக் கூற்றத்தின் எல்லைகளை ஒட்டியே அருவியூர் நகரத்தாரின் வரலாறும் கல்வெட்டு ஆதாரங்களோடு அமைவது இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாகும்.

முந்தைய தமிழ்ச் சமுதாயத்தின் வணிகப் பிரிவினர்களின் குடியிருப்பு நகரம் என்றும் நேமம் எனவும் குறிக்கப்பெற்று வந்தது. அந்த மரபினரின் வழியினர் என்பதற்காகவே இவர்கள் நகரத்தார் என வழங்கப்பெற்றனர்.

இந்த மாவட்டத்தில் திருப்புத்தூர், காரைக்குடி, தேவகோட்டை, சிவகங்கை ஆகிய வட்டங்களில் இவர்கள் ஆங்காங்கு வாழ்ந்து வந்த பொழுதிலும் இவர்களது பூர்வீகம் சோழவளநாட்டு பூம்புகார் எனச் சொல்லப்பட்டு வருகிறது. ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னர் புகார்நகரம் கடற்கோளினால் அழிவு எய்தியபொழுது, அங்கிருந்து வெளியேறிய மக்கள் கூட்டத் தொகுதியினரின் வழியினராக இவர் கள் கருதப்படுகின்றனர். **தென் புலத்தில் பாண்டிய நாட்டில் வைகை ஆற்றுக்கு வடக்கேயும், பிரான்மலைக்கு கிழக்கேயும், வெள்ளாற்றுக்குத் தெற்கேயும் இவர்களது குடியேற்றங்கள் ஏற்பட்டன. ஆனால், முதலில் இன்றைய இளையாத்தங்குடியில் சிறிது காலம் தங்கி இளைப்பாறிய பிறகு, சிறுசிறு தொகுதியினராக ஒன்பது ஊர்களில் குடியேறினர். இன்று அந்த ஒன்பது ஊர்களையே தங்கள் பூர்வீகங்களாகக் கொண்டு மணவினை உறவினை உருவாக்கிக் கொள்கின்றனர். ஒரே கிளையினர் தங்களுக்குள் மன உறவுகள் கொள்வது இல்லை. ஆனல் பங்காளிகளாக பாந்தத்துடன் பழகிக் கொள்கின்றனர். இளையாத்தங்குடி, மாத்தூர், இரணியூர், பிள்ளையார்பட்டி, வைரவன்கோவில், இலுப்பக்குடி, நேமம், சூரக்குடி, வேலங்குடி ஆகியவைகளே அந்த ஒன்பது ஊர்களாகும். இன்னும் இந்த மக்கள் அருவியூர் என்ற குலசேகர பட்டணத்திலும், பிரான்மலையிலும் பன்னெடுங் காலம் நிலைத்து இருந்தமைக்குச் சான்றாக அந்த ஊர்களில் பல கல்வெட்டுக்கள் உள்ளன.**[102]

## பெருவணிக நகர் அருவியூர் எனும் கல்வெட்டு

சோழநாட்டிலிருந்து பாண்டிய நாட்டிற்கு வந்த இந்த வணிகக் குழுவினரால் அவர்கள் தங்கியிருந்த அருவியூர் என்பது பெரு வணிக நகராகவே விளங்கியிருக்கிறது என்பதை அறிய முடிகிறது. இதனை,

**அருவியூர் என்ற குலசேகரபுரம், பிரான்மலை, தீர்த்தாண்டதானம், பெரியபட்டினம் ஆகிய ஊர்களில் உள்ள கல்வெட்டுக்களும், வெளிநாட்டாரது வாணிகச்சாத்துக்கள் இங்கு நிலைகொண்டிருந்ததை வலியுறுத்துகின்றன**[103] என்னும் சான்றின் மூலம் உறுதிப்படுத்தலாம்.

## அருவியூரில் இருந்த பலதொழில் மக்கள் குறித்த கல்வெட்டு

*ஐநூற்றுவர் என்பவர்கள் பல்வேறு பிரிவு வணிகர்களும் இதரத் தொழில்களைச் சேர்ந்தவர்களும் அடங்கிய விரிவான அமைப்பு என்று தெரிகிறது. இலங்கையிலுள்ள விஹாரச்சின்னா கல்வெட்டு (12ஆம் நூற்றாண்டு) வணிகர்களையும் பிரமுகர்களையும் பாதுகாத்த வீரர்களின் துணிவு பற்றியும் ஐநூற்றுவர் எடுத்த முடிவு குறித்தும் கூறுகிறது. அந்த முடிவை எடுக்கத் திரண்டவர்கள் குறித்து,*

***தவலத்துச் செட்டி (அப்பகுதியைச் சேர்ந்த வணிகர்கள்), செட்டி புத்திரன் (வணிகர்கள்), கவரை (வணிகர்கள்), கத்ரிபன் (வெற்றிலை வணிகர்கள்), காமுண்ட சுவாமி (நிலச் சொந்தக்காரர்களின் தலைவர்), ஒட்டன் (தூது செல்பவர்), உள்பசும்பாய்க்காரன் (சாக்கில் பொருட்களை விற்பவர்), அங்கங்காரன் (போராளிகள்), ஆவணக்காரன் (கடைக்காரர்), வீரன், பாவாடை வீரன் மற்றும் மேலும் இரண்டு குழுக்கள் குறிப்பிடப்படுகின்றன. "சமஸ்கிருதமும் தமிழும் பேசுபவர்கள்" - (புரோகிதர்களாக இருக்கலாம்) "கழுதையில் பயணம் செய்வோர்" (போக்குவரத்து ஊழியர்கள்) கூடியிருந்தோரில் வணிகக் குழுக்கள் மட்டுமல்லாமல், நில உரிமையாளர்கள், படைவீரர்கள் மற்றும் இதரத் தொழில் சார்ந்தவர்களும் இருந்தனர் என நீளமான பட்டியல் பிரான்மலை கல்வெட்டில் காணப்படுகிறது[104]*** *என்று நோபுரு கராஷிமா குறிப்பிடுகிறார்.*

## பிரான்மலையில் காணப்பெறும் கல்வெட்டு வகை

*பட்டினப் பகுடி நன்கொடைகளைப் பற்றிக் கூறும் கல்வெட்டுகளில் பெரும்பாலானவை 13-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை. எனினும் 11-ஆம் நூற்றாண்டு முதல் அத்தகைய கல்வெட்டுக்களைக் கர்னாடகத்திலும் காண முடிகிறது.*

***பட்டினப் பகுதி என்றால் பட்டினத்தில் ஒரு "பாகம்" அல்லது "பகுதி" என்று பொருள். அந்தப் பகுதி சில வேளைகளில் "மகமை" என்றும் கல்வெட்டுகளில் அழைக்கப்பட்டது. கன்னடக் கல்வெட்டுகளில்***

**இதற்கு "தர்மாயம்" என்ற சொல் பயன்படுத்தப்படுகிறது. இத்தகைய கல்வெட்டுகள் எறிவீரப்பட்டணம் கல்வெட்டுகளைக் காட்டிலும் அதிகமாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. சர்க்கார், பெரியபாளையம், பிரான்மலை, கோவில்பட்டி ஆகிய இடங்களில் கண்டுபிடிக்கப்பட்ட இத்தகைய கல்வெட்டுக்களை நல்ல உதாரணங்களாகக் கொள்ளலாம்**[105] எனக் குறிப்பிடும் நோபுரு கரோஷிமா மேலும்,

***பிரான்மலை கல்வெட்டில்*** (SII, vii, 422: Rm, Tn, c.1300) ***ஐநூற்றுவரின் புகழ்மாலைக்கும், குழுக்களின் பட்டியலுக்கும் பிறகு, பதினெண் விஷயம், ஐநூற்றுவர் ஆகிய பெயர்கள் முதல் நிலையில் குறிப்பிடப்படுகின்றன***[106] என்று ஐநூற்றுவருக்குப் பிரான்மலையோடு கூடிய தொடர்பினைப் புலப்படுத்துகிறார்.

## மணிக்கிராமம் குறித்த கல்வெட்டுகள்

*மணிக்கிராமத்தை வகைப்படுத்துவது சற்றுக் கடினமானது. 9-ஆம், 10-ஆம் நூற்றாண்டுகளில் தமிழ்நாடு, கேரளம் ஆகியவற்றில் மட்டும் இயங்கிய ஒரு தனிப்பட்ட அமைப்பாக அதைக் கருதலாம்.*

எனினும், ***அதன் பிற்காலக் கல்வெட்டுகள் கோவில்பட்டியிலும் (கி.பி.1305) பிரான்மலையிலும் (கி.பி.1300) கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. கோவில்பட்டிக் கல்வெட்டின் சபைக்கூட்டக் குறிப்பில் கையொப்பமிட்டுள்ள கணக்காளர், கொடும்பலூர் மணிகிராமம் நகரத்தின் கணக்காளர் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அந்தக் கொடும்பாலூர் மணிகிராமம் நகரம் சபைக்கூட்டத்தில் கலந்து கொண்டதாகப் பிரான்மலைக் கல்வெட்டுக் கூறும் பதினொரு நகரங்களில் ஒன்றாகும். அதன்மூலம் மணிகிராமம் அமைப்பின் மையமாகக் கொடும்பாலூர் இருந்தது***[107] என்று தெரிய வருகிறது.

## அருவியூர் குறித்த திரண்ட கருத்து

நாட்டுக்கோட்டை நகரத்ததார் பூம்புகாரில் இருந்த காலத்தில் பாண்டியன், தன்னாட்டுக்கு நற்குடிகள் வேண்டுமென்று சோழனிடம் வேண்ட அவன் இக்குலத்தினரையும் பாண்டி நாட்டுக்கு அனுப்பினான்

*என்பது வரலாறு. சாலிவாகன சகாப்தம் 629(கி.பி.707) இல் இவர்கள் பாண்டி நாட்டிற்கு வந்தனர். காவிரிப்பூம்பட்டினத்தில் மேலத்தெரு ஆறுவழியாராக இருந்த வணிகப்பெருமக்கள் ஆரியூரை வாழ்விடமாகக் கொண்டும் பிரான்மலைக் கோயிலை வழிபட்டுக் கோயிலாகக் கொண்டும் வசிக்கலாயினர் எனவும் அறிகின்றோம். பிற்காலத்தில் "அரியூர்ப்பட்டணம் சாலிவாகன 1210(கி.பி.1228) இல் கலகத்தில் அழிந்து போனதால் அங்கு வாழ்ந்திருந்த 64 வைசியர்களும் திசை தப்பிப் போய் மலையாளம் சேர்த்து கோட்டாரற்றங்கரையில் குடியிருப்பு அமைத்து, மரகத விநாயகருக்குக் கோயிலும் கட்டி, வழிபட்டு வருகிறார்கள்" என்று நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாற்றில் கூறப்பெற்றுள்ளது. இக்காலத்தும் இந்த அருவியூர் நகரத்தார் சமூகத்து மரபினர் கோட்டாற்றில் வாழ்ந்து வருவதாகத் தெரிகிறது. ஆயினும் அரியூர்ப்பட்டனம் கலகத்தால் அழிந்த காலத்தில் திசை தப்பிப் போனவர்களில் சிலகுடியினர் சில காலம் கழித்துப் பிரான்மலைப் பகுதியில் குடியேறியுள்ளனர் என்பதும் வரலாற்றுண்மை. இது, இக்காலத்தும் மரகத விநாயகர் பூசைக்கு ஆண்டுதோறும் பிரான்மலை வட்டாகை அருவியூர் நகரத்தார் சமூகத்தினருக்கு அழைப்பு வருவதாக இச்சமூத்தினர் கூறுவதால் உறுதியாகிறது.*

*இக்குலத்தினர் வாழ்ந்திருந்த அரியூர் எவ்விடத்தில் இருந்ததென அறிய முடியவில்லை. இவ்வூர் கல்வெட்டுக்களில் அரியூர் என்றும் அருவியூர் என்றும் குறிக்கப்பெற்றுள்ளது. பிரான்மலையிலுள்ள குலசேகரபாண்டியன் ஆட்சியாண்டு 16 (கி.பி.1226) கல்வெட்டு* **"கேரள சிங்க வளநாட்டு அருவியூரான குலசேகரப்பட்டினம்"** (S.I.I.Vol.VII.No.440) *என்றும், பிரான்மலை-யிலுள்ள சொக்கநாதர் கோயில் உள்ள கல்வெட்டு* **"கேரள சிங்க வளநாட்டு அருவிமானகரமான குலசேகரப்பட்டினத்து நகரத்தோடும்"** (S.I.I.Vol.VII. No.442) *என்றும் குறிக்கின்றன. திருப்பத்தூர்க் கல்வெட்டுக்கள்* **"கேரள சிங்கவளநாட்டு அருவியூரான குலசேகரப்பட்டணம்"** *(167 1935-36) என்றும்,* **"அருவியூரான குலசேகரப்பட்டினம்"** *(112/1908) என்றும் கூறுகின்றன. இந்த அருவியூர் முதல் மாறவர்மன் குலசேகரபாண்டியன் காலத்தில் (கி.பி.1268-1310) அவன் பெயரால் குலசேகரப்பட்டினம் என்று வழங்கப்பெற்றதாக*

அறிகின்றோம்.இந்நகரம் சாலிவாகன சகாப்தம் 1210 (கி.பி.1288) இல் கலகத்தால் அழிவுற்றது என்று நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு கூறுகிறது. கி.பி.1288 குலசேகரபாண்டியன் கொடிகட்டியாண்ட காலமாகும். எனவே, அருவியூர் நகரம் அழிவுற்றது எந்த ஆண்டு என்பது சிந்திக்கத்தக்கது.

குலசேகரபாண்டியனுக்குப்பின் வந்த அவன் மகன் சுந்தரபாண்டியன் தந்தையின் மீதிருந்த தீராத சினத்தால் கி.பி.1310 இல் குலசேகரபாண்டியனைக் கொன்று பட்டத்திற்கு வந்தான். இந்தச்சுந்தரபாண்டியனும் மற்றொரு பாண்டியனான வீரபாண்டியனும் ஒரே காலத்தில் வெவ்வேறிடங்களில் இருந்து ஆட்சி புரிந்தனர். இவ்விருவருக்கும் நிகழ்ந்த போரில் தோல்வியுற்ற சுந்தரபாண்டியன் அலாவுதீன் கில்ஜியின் படைத்தலைவனான மாலிக்காபூரைத் தென்னாட்டின்மீது படையெடுத்து வருமாறு அழைத்தான். இது கி.பி.1310 ஆம் ஆண்டின் இறுதியில் நிகழ்ந்தது என்று மகமதிய சரித்திர ஆசிரியன் "வாகப்" என்பவன் கூறியுள்ளான் என்பார் வரலாற்றாசிரியர். எனவே **சுந்தரபாண்டியனும் மாலிக்காபூரும் சேர்ந்து குலசேகரபாண்டியன் பெயரால் அமைந்திருந்த அருவி மாநகரை கி.பி.1310 இல் அழித்துவிட்டனர் என்பதே வரலாற்றுக்கு இசைந்ததாகும்.[108]**

பிரான்மலைக் கோயில் கல்வெட்டுகள் - செப்பேடுகள்

பழைய இராமநாதபுரம் மாவட்டத்தின் பல இடங்களில் பாண்டியப் பேரரசின் கல்வெட்டுகள் மட்டுமல்லாது சோழர்கள், மதுரைச் சுல்தான்கள், நாயக்கர்கள், வானாதிராயர்கள், சேதுபதிகள் ஆகிய முடியுடை மன்னர் பலரது ஆட்சிக்கால கல்வெட்டுகள் பலவும் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

**இவற்றில் பெரும்பாலான கல்வெட்டுகள் திருப்பத்துார் திருத்தளிநாதர் திருக்கோயிலிலும், பிரான்மலை மங்கைபாகர் ஆலயத்திலும், இராமேஸ்வரம் இராமநாதசுவாமி ஆலயத்திலும் படியெடுக்கப்பட்டுள்ளன. எட்டு, ஒன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த தொன்மையான புராதனமான கிரந்த எழுத்தில் எழுதப்பட்ட சில கல்வெட்டுகள் பெருங்கருணை, பிரான்மலை, இராமேஸ்வரம், திருப்புத்துார் ஆகிய ஊர்களில் உள்ளன.[109]**

பிரான்மலைக் கோயில் வழிபாட்டிற்கு வழங்கப்பட்ட கொடை விவரங்கள் குறித்த கல்வெட்டுச் சான்றுகளும் செப்பேடுகளும் கிடைக்கப் பெறுகின்றன.

***பிரான்மலை கோயிலில் அரிசி, பருப்பு முதலியவைகளை அளப்பதற்கு "திருநாவுக்கரசு நாழி" என்ற பெரும்படி பயன்படுத்தப் பட்டது (கி.பி. 1272) (ஏ.ஆர். 152-1902)[110]*** என்று செப்பேடுகள் குறிக்கின்றன.

பிரான்மலைக் கோயிலிலுள்ள கல்வெட்டுகள்

இத்தலத்தைப் பற்றியனவாக இருபத்தொரு கல்வெட்டுக்கள் கி.பி. 1903 ஆம் ஆண்டில் படியெடுக்கப் பெற்றுள்ளன. அவற்றுள் எட்டுக் கல்வெட்டுகள் ஆராய்ந்து முடிவுகட்டடப்பெற்றன. ஏனையவை அறியப் பெறாதன. நான்கு கல்வெட்டுக்கள் குலசேகர பாண்டியனுடைய ஆட்சி 10, 13 ஆம் ஆண்டுகளில் நிகழ்ந்தவை. இவற்றை இங்ஙனம் வரையறுத்து எழுதியவர் ஸெவல் பாதிரியார்.

***இத்தலத்தில் சுந்தரபாண்டியன் மண்டபம் (இது கருப்பக் கிருக வாயிலில் உள்ளது)***

1. ***ஆறுகால் மண்டபம்*** (-144 of 1903)**,**
2. ***லக்ஷ்மி மண்டபம்***(-142 of 1903)**, *முதலிய மண்டபங்களும்,***
3. ***விசுவநாதர் கோயில்***(-146 of 1903)**,**
4. ***சுப்பிரமணிய சுவாமி கோயில்*** (-152 of 1903) ***முதலியனவும் கோயிலுக்குள் இருக்கின்றன.***
5. ***பிரான்மலைக் கிராமத்தில் ஸ்ரீசொக்கநாதர் கோயில் உள்ளது*** (-154 of 1903)**.**
6. ***இறைவன் மங்கைநாதர்***(-138 of 1903) ***எனவும்,***
7. ***கொடுங்குன்றமுடைய நாயனார்***(-140 of 1903) ***எனவும்,***
8. ***நல்லமங்கைபாகர் எனவும்,*** (-154 of 1903)

9. **குன்றாண்ட நாயனார் எனவும்,**( -202 of 1924) **குறிப்பிடப் பெறுகின்றார்.**[111]

பாண்டிய மன்னர்கள் குறித்த கல்வெட்டுகள்

*பாண்டிய மன்னர்களில் சுந்தரபாண்டியன்* I, *சுந்தரபாண்டியன்* II, *பராக்ரம பாண்டியன், குலசேகர பாண்டியன், வீரபாண்டியன் இவர்கள் விளக்குக்காகப் பசுக்களும், பொன்னும், சேவார்த்திகட்கு உணவிற்கும், விளக்குத் தண்டு செய்தற்குமாகப் பொன்னும் நிலமும் அளித்த செய்திகளை அறிவிக்கின்றன.*

பிற ஆட்சியாளர்களின் கொடை குறித்த கல்வெட்டுகள்

***கி.பி. 1251 - 1264க்குள் ஆண்ட கோனேரின்மை கண்டான் காலத்தில் துவராபதி வேளார், பிரபாவபுரந்தரன் ஆகிய இருவரும் நிலம் அளித்தனர். இம்மடி நரசிங்கராயர் காலத்தில் பிரான்மலைச்சீமை என்றும், திருமலை நாட்டுப்பகுதியான பிரான்மலை என்றும் குறிக்கப் பெறுகின்றது.***[112]

*திப்பரசரையன் நன்மைக்காகக் கேரளசிங்க வளநாட்டு இப்புலி நாயகர் நிலம் அளித்தார். இங்கு ஒரு வியாபாரிகள் சங்கம் இருந்ததாகவும் கல்வெட்டுக் கூறுகிறது.* (-154 of 19n n 03)

பாண்டிய - விசய மன்னர்கள் கல்வெட்டுகள்

*1924 ஆம் ஆண்டில் படியெடுக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் பதினாறாகும். அவற்றுள் ஐந்து, பாண்டியர்கள் காலத்தன. ஏனையவை விசயநகர அரசர்கள் காலத்தன.*

1. ***சடாவர்மன் வீரபாண்டியன் ஆட்சி 9ஆம் ஆண்டில், திருஞானம் பெற்ற பிள்ளையார் படிமத்தை எழுந்தருள் வித்துக் கேரளசிங்க வளநாட்டுக் குலசேகரன் பட்டினத்து அருவியூரானான கொடுங்குன்றமுடையான் ஒருவன் பூசைக்கு நிபந்தமும் அளித்தான்*** (-208 of 1934).

2. **குலசேகர பாண்டியன் காலத்தில் கீழ்வேம்புநாட்டு இராசவல்லி புரத்துக் கொன்றைசேர் முடியானும், திருநெல்வேலி யுடையானும் விளக்குக்கு ஆடுகள் அளித்தனர்** (-194 of 1924).

3. **கண்ணமங்கலமான திருவெங்கா உடைய நல்லூர்; அமோகமங்கலமான முதலி நாயக நல்லூர் உடையான் இருவரும் அர்த்தயாம பூசைக்கு நிலம் அளித்தனர். அந்தப் பூசைக்குத் தாழ்வுசெய்யாதான் சந்தியென்று பெயர்** (-202 of 1924)

4. **காரைக்குடியான் ஒருவன் மங்கைநாயகர் வசந்த உற்சவத்திற்காக வாணராய நல்லூரரை இறையிலி செய்து அளித்தான்** (-203 of 1924).

5. **விஜயநகர அரசர்கள் வேதபாராயணத்திற்காகவும்**(-207 of 1924),

6. **உற்சவத்திற்காகவும்** (-196 of 1924)**, கானூர் முதலிய இடங்களை அளித்தனர்.**[113]

பாண்டிய மன்னர்கள் கல்வெட்டுகள் மிகுதி

**பாண்டியர்களின் பெரும்பாலான கல்வெட்டுகள் திருப்புத்தூர் திருத்தளியாண்ட நாயனார் திருக்கோயிலிலும், பிரான்மலை மங்கைபாகர் ஆலயத்திலும், ராமேஸ்வரம் இராமநாதசுவாமி ஆலயத்திலும் படியெடுக்கப்பட்டுள்ளன. அவற்றுள் வீரபாண்டிய தேவன் (946-966) குறித்த கல்வெட்டு பிரான்மலையில் கிடைத்திருப்பது குறிப்பிடத்தக்கது**[114] *என்று அறிஞர்கள் குறிப்பிடுவதோடு இந்தப் பிரான்மலைதான் பறம்புமலை என்னும் திருக்கொடுங்குன்றம் என்றும் உறுதிப்படுத்தியிருப்பதும் நோக்கத்தக்கது.*

பிரான்மலையைச் சுற்றியுள்ள கல்வெட்டுகள்

*வஞ்சி நகரத்துக்கு அருகிலுள்ள சிறுகுன்றின் உச்சியில் இடிந்துபோன பிற்காலப் பாண்டியர் சிவன்கோவில் ஒன்றின் கட்டடப்பகுதியிலும் அருகிலுள்ள பாறையிலும் பிற்காலப் பாண்டியர்கள் கல்வெட்டுகள் காணப்படுகின்றன.* **குலசேகர பாண்டியன் காலத்தில் இச்சிவன்கோவில் கட்டப்பட்டு அதற்குப் பலகொடைகள் அளித்ததை இக்கல்வெட்டுகள்**

***கூறுகின்றன. இக்கோயில் கல்வெட்டில் திருமேலழகிய பாண்டிய நாயனார் கோயில் என்றழைக்கப்படுகிறது. இம்மலையைச் சார்ந்த ஊர் அருவிக்குடி என்று குறிப்பிடப்படுகிறது. அருவிக்குடிப் பகுதியில் வாழ்ந்த கண்மாளச் சமூகத்தினைச் சார்ந்தவர்கள் அரசருடனும், கோயிலுடனும் தொடர்புடையவர்கள், இவர்களில் பல தட்டார்களின் பெயர்கள் அருவிமலைக் கல்வெட்டுகளில் குறிப்பிடப்படுகின்றன. (64/2003)[115]*** *இந்த அருவிக்குடி அருவியூரோடு தொடர்புடையதா என்பது ஆய்வுக்குரியதாகும்.*

தர்க்காக்குடிக் கல்வெட்டுகள்

*மேலூர் வட்டத்தில் தர்க்காகுடியில் மற்றொரு பிற்காலப் பாண்டியர் கோயில் உள்ளது.* ***இதில் கி.பி. 14-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பாண்டிய மன்னனான பராக்கிரம பாண்டியன், விசயநகரவேந்தனான சதாசிவராயர் ஆகியோர் கல்வெட்டுகள் உள்ளன. (69,70,71/2003) கல்வெட்டுகளில் இவ்வூர் தருக்காய்குடி என்றும், கோயில், திருக்கோடீசுவரமுடையார் கோயில் என்றும் குறிப்பிடப்படுகின்றன. இங்குள்ள கல்வெட்டுகள் கோயிலுக்கு அளிக்கப்பட்ட தானங்கள், ஊரார், நாட்டார் நடவடிக்கைகள் பற்றித் தெரிவிக்கின்றன. இக்கோயிலின் பகுதியில் இருந்து அழிவுற்ற அம்மன் கோயிலை அருவியூர் நகரத்தார் எடுத்ததைச் சதாசிவராயர் கல்வெட்டு கூறுகிறது. (71/2003).[116]***

*இதுகுறித்து டாக்டர் ஜெயபாரதி அவர்கள்,* ***பாண்டியநாட்டில் மாவட்டங்கள் போல் சில பிரதேசப் பிரிவுகள் விளங்கின. அவற்றை வளநாடு, என்றும் நாடு என்றும் அழைத்தார்கள். வளநாடு பெரியது. நாடு என்பது குறுகியது. ஐந்தே ஐந்து ஊர்கள் கொண்ட குட்டிநாடு ஒன்று கொட்டாம்பட்டியை உள்ளடக்கியிருந்தது. அது இருந்த காலத்தில் கொட்டாம்பட்டி இருந்திருக்காது. அந்த ஏரியாவில் தருக்காயக்குடி என்னும் ஊர் இருந்தது. தருக்காயக்குடியில் பாரீஸ்வரம் என்ற சிவன் கோயில் இருந்திருக்கிறது. தருக்காயக்குடி பறம்புமலையிலிருந்து ஆறு கீலோமீட்டர் தூரத்தில்தான் இருந்தது. பிரான்மலை நின்ற நாட்டுப்பிரிவைத் திருமலை***

**நாடு என்றார்கள். அதற்குமறுபுறம் உள்ள நாட்டைப் புறமலை நாடு என்றார்கள். பொன்னமராவதி என்னும் ஊர் புறமலை நாட்டில் இருந்தது. 12-ஆம் நூற்றாண்டில் பிரான்மலை திருமலை நாட்டுத் திருக்கொடுங்குன்றம் என்று அழைக்கப்பட்டிருக்கிறது**[117] எனத் தெளிவான விளக்கம் தருகிறார். இவ்விளக்கம் பல வினாக்களுக்கு விடையாக அமைவதை இங்கு உணரலாம்.

## திருச்சுனைக் கல்வெட்டு

மதுரை மாவட்டம் மேலூர் வட்டத்தில் திருச்சி செல்லும் நெடுஞ் சாலையில் அமைந்துள்ளது திருச்சுனை. இவ்வூரில் திருஅகத்தீசுவரம் உடையார் என்னும் புகழ்பெற்ற சிவன் கோவில் உள்ளது. பிற்காலப் பாண்டியர்களால் ஆதரிக்கப்பட்ட இக்கோவிலில் உள்ள கல்வெட்டுகளின் மூலம் இவ்வூரின் பழைய பெயர் சுழிவரகண்டன் என அறியமுடிகிறது. இது சுரநாடு என்னும் உள்நாட்டுப் பிரிவுக்குள் அடங்கியிருந்தது.

**முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் கல்வெட்டு ஒன்றின் மூலம் இவ்வூர் பிரான்மலையிலுள்ள திருக்கொடுங்குன்றமுடைய நாயனார் கோவிலுக்கு விடப்பட்ட ஊராகவும் அதற்கென இவ்வூரில் குலக்கல் நாட்டப்பட்டிருந்தது**[118] என்பதும் தெரிய வருகிறது.

## சேதுபதி மன்னர்கள் கல்வெட்டு

பாண்டியர்களையும் பிற ஆட்சியாளர்களையும் தொடர்ந்து சேதுபதி மன்னர்களும் இக்கோயில் திருப்பணிகளில் ஈடுபட்டுள்ளதைக் குறிக்கும் கல்வெட்டுச் சான்றுகளும் உள்ளன.

**பாண்டிய நாட்டில் தேவாரப் பாடல் பெற்ற 16 கோயில்களில் சேதுநாட்டைச் சேர்ந்த திருச்சுழியல், திருவாடானை, காளையார் கோயில், திருப்புத்தூர், திருக்கொடுங்குன்றம், இராமேஸ்வரம் ஆகிய திருக்கோ-யில்களுக்கும், சிறப்புடன் இயங்குவதற்கான ஏற்பாடுகளையும் இந்த மன்னர்களே செய்துள்ளனர்.**[119]

திருப்பத்தூர் வட்டம் சிவபுரிப்பட்டி அருள்மிகு தான்தோன்றிஈசுவரர் திருக்கோவிலின் தென்சுவரில் கீழே ஒரு கல்வெட்டுப் பொறிக்கப்பட்டுள்ளது.

இந்தக் கல்வெட்டு வாசகம் 28.08.1668இல் வெட்டுவித்ததாகத் தெரிகிறது. இது பழைய அருவியூர் என்பது குறிப்பிடத்தக்கது.

**இது கோயிலின் இறைவரான தான்தோன்றி ஈசுவரருக்குச் சாத்தனூர் என்ற கிராமத்தைச் சேது மன்னர் தானம் வழங்கியதைக் குறிக்கிறது.**[120]

## தொகுப்புரை

சங்ககாலத்தில் பறம்புமலையான இம்மலை பக்தி இலக்கிய காலமாகிய இடைக்காலத்தில் திருக்கொடுங்குன்றம் எனப் பெயர் பெற்று விளங்கியது.

சங்ககாலம் தொட்டே பறம்புமலையில் சிவவழிபாடும், முருக வழிபாடும் இருந்திருக்கலாம் எனவும் ஆலயம் அமைந்திருக்க வேண்டும் எனவும் சான்றுகள் மெய்ப்பிக்கின்றன.

அச்சான்றுகள் பாரியோடு தொடர்புடையனவாக விளங்குவதும் இங்கு எண்ணத்தகுந்தது. பாரீச்சுரம் என்னும் பெயர் பாரி வழிபட்ட தலம் என்பதையே குறிப்பதாக அறிஞர்கள் கருதுகின்றனர்.

கபிலர் தம் பாடல்களில் சுட்டிய பறம்புமலையின் இயற்கை வளங்கள் யாவும் திருஞானசம்பந்தர் பாடிய திருக்கொடுங்குன்றத் தேவாரப் பாடல்களிலும் பதிவு செய்யப்பெற்றுள்ளன. பல நூற்றாண்டுகள் கடந்தும் இம்மலை இயற்கை வளம் குன்றாமல் விளங்கியது என்பதனை இது உறுதிப்படுத்துவதாக அமைகிறது.

பறம்புநாட்டின் தலைநகராக விளங்கிய பறம்புமலை பிற்கால ஆலய அமைப்புமுறைகளின்வழி, பாண்டி நாட்டோடு இணைந்ததாகவும் பாண்டி நாட்டுத் திருத்தலங்களில் திருஞான சம்பந்தரால் முதலில் பாடப்பட்டதாகவும் சான்றுகள் உறுதி செய்கின்றன.

திருக்கொடுங்குன்றத்தைத் திருஞானசம்பந்தர் மட்டுமின்றி, திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர், கபிலதேவர், சேக்கிழார், அருணகிரி நாதர், வள்ளலார் போன்றோரும் தங்களது பாடல்களால் பதிவு செய்துள்ளனர்.

திருக்கொடுங்குன்ற ஆலயத் தோற்றத்திற்குக் காலந்தோறும் பல மன்னர்கள் தங்களது பங்களிப்பினை அளித்துள்ளனர். பாண்டிய, சோழ மன்னர்களும், நாயக்க சிற்றரசர்களும், வேளிர் குறுநில அரசர்களும், சிவகங்கை, இராமநாதபுரச் சீமை அரசர்களும் இவர்களுள் குறிப்பிடத் தக்கவர்கள் ஆவர். அருவியூர் நகரத்தான் என்னும் வணிகப் பிரிவினைச் சேர்ந்த மக்களும் இதற்கு உறுதுணை புரிந்துள்ளனர் என்பதைக் கல்வெட்டு மற்றும் செப்பேட்டு ஆவணங்கள் உறுதி செய்கின்றன.

கோயிலின் அமைப்பு முறை, அவற்றின் விளக்கங்களுடன் இவ்வியலில் எடுத்துக் காட்டப் பெற்றுள்ளது. இத்திருக்கொடுங்குன்றத்தின் புராண வரலாறும் சுட்டப் பெற்றுள்ளது.

திருக்கொடுங்குன்றம் என்னும் பிரான்மலை சார்ந்த கல்வெட்டுத் தொகுதிகளும் அவற்றில் பெறப்பட்ட செய்திகளும் தொகுத்தளிக்கப் பெற்றன.

## இயல் இரண்டு : சான்றெண் விளக்கம்

1. அழகப்பா பல்கலைக்கழகம் பாட நூல், கோயில் வரலாறு, ப.57
2. தொல்.பொருள். அகத்திணை, நூற்பா 20
3. பெருவாயின் முள்ளியார், ஆசாரக்கோவை. பா.எ.4
4. மாங்குடி மருதனார், மதுரைக்காஞ்சி, பா.அ 723-.724
5. குன்றக்குடி அடிகளார், தவத்திரு,, ஆலயங்கள் சமுதாய மையங்கள் பக். 43-44
6. ஞானசம்பந்தம், அ.ச.., அகமும் புறமும், ப.282
7. கபிலர், புறநானூறு, பா.எ. 106
8. சாமிநாதய்யர், உ.வே.சா., புறநானூறு மூலமும் உரையும் ப.225
9. பறம்புமலை- திருக்கொடுங்குன்ற வரலாறு, பரமகுரு, மரு., ப.59
10. கபிலர், கலித்தொகை, குறிஞ்சிக் கலி - பா.எ. 38
11. குருசாமி, ம.ரா.போ., கபிலம், பக்.507-508
12. கபிலர், புறநானூறு, பா.எ. 120
13. இராகவையங்கார், மு., வேளிர் வரலாறு, பக்.14-15
14. கோவிந்தராசனார் சி. பிரான்மலைக் கல்வெட்டுக்கள் - கையெழுத்துப்படி கல்வெட்டு எண்.2
15. மேலது, கல்வெட்டு எண்.7
16. கோவிந்தராசனார், சி., பறம்பு நாட்டில் பாரீச்சுரம், இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம். ஐந்தாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை. 1973. பக் 128 - 129

17. பரமகுரு, மரு., பறம்புமலை திருக்கொடுங்குன்ற வரலாறு. ப.18

18. சேதுப்பிள்ளை, ரா.பி., ஊரும் பேரும் ப.136

19. ஜகந்நாதன், கி.வா., எழுபெருவள்ளல்கள், பக்.6-7

20. ஜகந்நாதன், கி.வா. பாரிவேள், ப. 15

21. தாமோதரன், கு., (ப.ஆ.) போசு. செ., (க.ஆ.) தொல்லியல் நோக்கில் தமிழகம், ப.168)

22. திருநாவுக்கரசர், தேவாரம், ஆறாம் திருமுறை. திருத்தாண்டகம், 60-71,

23. ...., கோயில் வரலாறு, அழகப்பா பல்கலைக்கழகம் பாடநூல், ப.89

24. கண்ணப்ப முதலியார், பாலூர், வித்துவான், பாண்டி நாட்டுக் கோயில்கள், ப.5

25. பரமகுரு, மரு., பறம்புமலை- திருக்கொடுங்குன்றம் வரலாறு, ப. 13

26. மேலது, ப. 24

27. பிரான்மலைக் கல்வெட்டுக்கள் - சி. கோவிந்தராசனார் கையெழுத்துப்படி - பிற்சேர்க்கை. பக். 3

28. பரமகுரு, மரு., பறம்புமலை- திருக்கொடுங்குன்றம் வரலாறு, ப. 25

29. பாண்டிய, சோழ விசயநகர மன்னர்களின் மெய்க்கீர்த்திகள் (தமிழ் நாட்டில் மலைக்கல்வெட்டுகளிலும், தாமிர தட்டுகளிலும் எழுதப்பட்டவை (39-55) http://library.senthamil.org/265.htm/

30. பரமகுரு. மரு., பறம்புமலை- திருக்கொடுங்குன்றம் வரலாறு, பக். 72-73

31. மேலது, ப.73

32. இராசமாணிக்கனார், மா., சோழர் வரலாறு, ப.179

33. பரமகுரு. மரு., பறம்புமலை- திருக்கொடுங்குன்றம் வரலாறு, ப.92

34. https://ta.wikipedia.org/wiki/சொர்ணாம்பிகை அகத்தீஸ்வரர்

35. பரமகுரு. மரு., பறம்புமலை- திருக்கொடுங்குன்றம் வரலாறு, ப.93

36. இராசமாணிக்கனார், மா. சோழர் வரலாறு, ப.270

37. மேலது, ப.272

38. பரமகுரு. மரு., பறம்புமலை- திருக்கொடுங்குன்றம் வரலாறு, ப.93

39. இராசமாணிக்கனார், மா. சோழர் வரலாறு, (மே.கோ.K.A.N. Sastry's Cholas, Vol. II, p.30) ப.259

40. பரமகுரு. மரு., பறம்புமலை- திருக்கொடுங்குன்றம் வரலாறு, ப.93

41. இராசமாணிக்கனார், மா. சோழர் வரலாறு, (மே.கோ. S.l.l. 3. Vol. No. 73) ப.270

42. பரமகுரு. மரு., பறம்புமலை- திருக்கொடுங்குன்றம் வரலாறு, ப.93

43. http://www.tamilvu.org/courses/degree/a031/a0313/html/a0313112.htm

44. மேலது.

45. பரமகுரு. மரு., பறம்புமலை- திருக்கொடுங்குன்றம் வரலாறு, பக்.93-94

46. மேலது, ப.94

47. மேலது.

48. மேலது.

49. கமால், எஸ்.எம், முகம்மது செரீபு, நா., இராமநாதபுரம் மாவட்டம் வரலாற்றுக் குறிப்புகள், ப.12

50. மேலது, ப.46

51. மேலது, ப.51)

52. இராசமாணிக்கனார், மா. சைவ சமயம், ப.29

53. மேலது, ப.14

54. மேலது, ப.61

55. பரமகுரு. மரு., பறம்புமலை- திருக்கொடுங்குன்றம் வரலாறு, பக். 62-63

56. மேலது, ப. 63

57. இராசமாணிக்கனார், மா. சைவ சமயம், பக்.62-63

58. கபிலர், புறநானூறு, பா.எ.143.

59. வெள்ளை வாரணன், க., பன்னிரு திருமுறை வரலாறு, ப. iv-v

60. இராசமாணிக்கனார், மா. சைவ சமயம், பக்.101-102

61. வெள்ளை வாரணன், க., பன்னிரு திருமுறை வரலாறு, பக். 123-126

62. திருஞானசம்பந்தர், தேவாரம், முதலாம் திருமுறை, திருக்கொடுங்குன்றத் திருப்பதிகம், பா.எ.1.

63. குன்றக்குடி அடிகளார், தவத்திரு., குன்றக்குடி அடிகளார் நூல்வரிசை7, பக்.67-69

64. திருஞானசம்பந்தர், தேவாரம், முதலாம் திருமுறை, திருக்கொடுங்குன்றத் திருப்பதிகம், பா.எ.1

65. மேலது, பா.எ.2

66. மேலது, பா.எ.3

67. மேலது, பா.எ.4

68. மேலது, பா.எ.5

69. மேலது, பா.எ.6

70. மேலது, பா.எ.7

71. மேலது, பா.எ.8

72. மேலது, பா.எ.9

73. மேலது, பா.எ.10

74. மேலது, பா.எ.8

75. மேலது, பா.எ.11

76. திருஞான சம்பந்தர் திருக்ஷேத்திரக் கோவை, பா.எ.2

77. திருநாவுக்கரசர், தேவாரம், திருவாரூர்த் திருத்தாண்டகம், பா.எ.9

78. சுந்தரர், தேவாரம், திருஇடையாற்றூர்த் திருப்பதிகம், பா.எ.5

79. http://www.thevaaram.org/thirumurai_1/songview.php?thiru=7&Song_idField=70340&padhi=034&startLimit=3&limitPerPage=1&sortBy=&sortOrder=DESC

80. சுந்தரர், தேவாரம், திருப்புகலூர்த் திருப்பதிகம், பா. 2

81. மாணிக்கவாசகர், எட்டாம் திருமுறை, திருச்சிற்றம்பலக்கோவையார், பதினான்காம் அதிகாரம், பா.எ.3

82. http://www.thevaaram.org/thirumurai_1/songview.php?thiru=12&Song_idField=1228&padhi=72&startLimit=629&limitPerPage=1&sortBy=&sortOrder=DESC&Submit=%E0%AE%9A%E0%AF%86%E0%AE%B2%E0%AF%8D%E0%AE%95

83. சேக்கிழார், பெரியபுராணம், திருஞானசம்பந்தர் வரலாறு, பா.எ.629

84. மேலது, பா.எ.630

85. கபிலதேவர்,பதினோராந்திருமுறை, சிவபெருமான் திருஇரட்டை மணிமாலை, பா.எ.561

86. அருணகிரிநாதர், திருப்புகழ், அனங்கன் அம்பு, பா.எ.621

87. மேலது.

88. அருணகிரிநாதர், திருப்புகழ், எதிர்பொருது, பா.எ.622

89. அருணகிரிநாதர், திருப்புகழ், விராலிமலை, பா.எ.118

90. இராமலிங்க வள்ளலார், திருவருட்பா மூன்றாம் திருமுறை 2. விண்ணப்பக் கலிவெண்பா (1961 - 1962)

91. http://www.shivatemples.com/pnaadut/pnt05.php

92. மேலது.

93. மேலது.

94. பரமகுரு, மரு., பறம்புமலை- திருக்கொடுங்குன்றம் வரலாறு, ப.80,

95. http://www.shivatemples.com/pnaadut/pnt05.php

96. பரமகுரு, மரு., பறம்புமலை- திருக்கொடுங்குன்றம் வரலாறு, ப.72,

97. http://www.dinamalar.com/news_detail.asp?id=614187&Print=1

98. லெட்சுமணன், அரு. செந்தமிழ் இதழ், எறிபடை நல்லூர் கட்டுரை

99. பிரான்மலைக் கல்வெட்டு, தெ. க. தொ. 8 எண் : 442

100. https://groups.yahoo.com/neo/groups/agathiyar/conversations/messages/89

101. மேலது.

102. கமால், எஸ்.எம், முகம்மது செரீபு, நா., இராமநாதபுரம் மாவட்டம் வரலாற்றுக் குறிப்புகள், பக்.142-143

103.மேலது, ப.197

104.ஹெர்மன் குல்கி, கேசவபாணி,கே., விஜய் சாகுஜா, நாகப்பட்டினம் முதல் சுவர்ணதீபம் வரை, பக்.61-62

105.மேலது, ப.161

106.மேலது, ப.173

107.மேலது, பக்.175-176

108.பரமகுரு. மரு., பறம்புமலை- திருக்கொடுங்குன்றம் வரலாறு, ப.53

109. http://now.rtbi.in/kalappur/index.php?option=com_content&view=article&id=51&Item-id=73&lang=ta

110. கமால், எஸ்.எம்., முகம்மது செரீபு. நா., இராமநாதபுரம் மாவட்டம் வரலாற்று குறிப்புகள், ப. 51

111. http://www.thevaaram.org/thirumurai_1/koil_view.php?koil_idField=111

112. மேலது.

113. மேலது.

114. மேலது.

115. ஸ்ரீதர், ஸ்ரீ, (ப.ஆ) மதுரை மாவட்டக் கல்வெட்டுகள், முதல்தொகுதி, ப.12

116. மேலது, ப.11

117. https://groups.yahoo.com/neo/groups/agathiyar/conversations/messages/49926

118. .....மதுரை மாவட்டத் தொல்லியல் துறைக் கையேடு, ப. 143

119. கமால், எஸ்.எம், சேதுபதி மன்னர்கள் கல்வெட்டுக்கள், ப.13

120.மேலது.

## இயல் மூன்று

# விடுதலைப் போராட்டக் காலத்தில் பறம்புமலை

பக்தி இலக்கியக் காலத்துக்கும் விடுதலைப் போராட்டக் காலத்துக்கும் இடையில் பறம்புமலையை மையமாக வைத்துப் பல அரசியல் நிகழ்வுகள் நிகழ்ந்திருக்கின்றன.

பாண்டியர்களின் ஆட்சிக்காலம் முடிவுக்கு வந்தபின்னரும் தொடர்ந்து வந்த சிற்றரசர்களால் இம்மலை குறிக்கத்தக்க இடமாக விளங்கியுள்ளது. அரசியல் சூழல்களும் விடுதலையுணர்வும் காரணமாக இம்மலை கால வரலாற்றில் தனித்த இடம் பெற்றிருக்கிறது. இது குறித்த பதிவுகளை இவ்வியல் எடுத்தியம்புகிறது.

பக்தி இலக்கியக் காலத்துக்கு வெகுகாலம் பின்னரும் ஆங்கிலேயர் வருகைக்கு முன்னரும் ஆகிய காலப்பரப்பிலான பதிவுகள் பறம்புமலையாகிய திருக்கொடுங்குன்றத்தைப் பிரான்மலை என்று குறிப்பிடுகின்றன. பறம்புமலை பிரான்மலை என்னும் பெயரில் இன்றுவரை நிலவி வருகின்றன.

இப்பிரான்மலை சிற்றரசுகளின் ஆளுகையில் சிவகங்கைச் சீமையின் ஆட்சிக்குட்பட்டதாகவும் விளங்கியிருக்கிறது. குறிப்பிட்ட அந்தக் காலத்தில்தான் காலனி ஆதிக்க எதிர்ப்புணர்வாகிய விடுதலைப் போராட்டம் மிகத் தீவிரமடைந்தது. இக்கால கட்டத்தில், இம்மலையை ஆங்கிலேய அதிகாரிகளும் பிரான்மலை என்றே குறிப்பிட்டுப் பதிவிட்டிருக்கின்றனர்.

ஏற்கனவே பாண்டியர் ஆட்சிக்காலத்தில் கட்டுக்காவல் மிகுந்த கோட்டை, கொத்தளங்களுடன் விளங்கிய பிரான்மலையானது விடுதலைப் போராட்ட வீரர்களின் மிக முக்கியப் பாதுகாப்பு அரணாகவும் அவர்களின் மறைவிடமாகவும் விளங்கியது என்பதை வரலாற்றுச் சான்றுகள் உறுதிப்படுத்துகின்றன.

முத்தூற்றுக் கூற்றத்தில் பிரான்மலை

*சங்ககாலத்தில் விளங்கிய கூற்றப் பிரிவுகள் பதினெட்டாம் நூற்றாண்டு வரை தொடர்ந்ததையும் வரலாற்றுச் சான்றுகள் உறுதிப்படுத்துகின்றன. இக்காலத்திலும் பழைய பறம்புநாட்டைப் போலவே பிரான்மலையும் முத்தூற்றுக் கூற்றத்திலேயே அமைந்திருப்பதைப் பின்வரும் கூற்று உறுதிப்படுத்துகிறது.*

***இந்த நாடுகள் மதுரோதைய வளநாடு, மதுராந்தக வளநாடு, கேரள சிங்க வளநாடு. அதளையூர் வளநாடு, திருபுவன முழுதுடையார் வளநாடு, வரகுணவளநாடு, ஜெயமாணிக்க வளநாடு, என்பன போன்ற பிரிவுகளும் அடங்கும். இவற்றிடையே பாகனூர்க் கூற்றம், துகலூர்க் கூற்றம், முத்தூர்க் கூற்றம், மிழலைக் கூற்றம் போன்ற உட்பிரிவுகளும் இருந்தமை தெரிய வருகின்றன.[1]***

*இதனை மேலும் உறுதிப்படுத்தும் சான்றாகப் பின்வரும் பதிவு அமைகிறது.*

*பண்டைய ஆட்சிக்காலம் தொட்டு இருந்து வந்த நாட்டு பிரிவுகள் மாற்றமில்லாமல் தொடர்ச்சி பெற்றன. இந்தப் புதிய சீமையில்* ***ஒல்லையூர் நாடு, கானாடு, புறமலைநாடு, திருப்பத்தூர்நாடு. தாழையூர்நாடு, தென்னாலைநாடு, இராஜகம்பீரநாடு, சுரபிநாடு, கானப்பேர்நாடு, பாலையூர், மங்கலநாடு, புனல்பரளைநாடு, கல்லகநாடு என்ற நாடுகள் அமைந்து அணி செய்தன. இவைகளுக்கு அடுத்து சிறுபரப்பு, வளநாடாகும். கேரள சிங்க வளநாடு, ராஜேந்திர மங்கல வளநாடு என்பன போன்று. இவைகளுக்கு இணையான இன்னொரு தொகுப்பு கூற்றம் எனப்பட்டது. இந்தப் புதிய சீமையில் கானப்பேர்க் கூற்றம், முத்தூர்க் கூற்றம், பாகனூர்க் கூற்றம், துகலூர்க் கூற்றம் என்பன[2]*** *அன்றைய வழக்கில் இருந்த கூற்றங்கள் ஆகும்.*

பாண்டிய சோழப் பேரரசுகளில் பிரான்மலை

*இராமநாதபுரம் மாவட்டம் முழுமையும் பாண்டிய நாட்டின் பகுதியாக விளங்கிய பொழுதிலும் கி.பி. 919 முதல் சுமார் முன்னூறு*

ஆண்டுகள் சோழப்பேரரசின் ஆட்சிக்கு அடங்கிய நாடாக, இப்பகுதி இருந்துள்ளது.

அப்பொழுது இந்த மாவட்டத்தின் வடபகுதி ராஜராஜப் பாண்டிய நாடு ராஜேந்திர சோழவளநாடு எனவும், தென்பகுதி செம்பிநாடு எனவும் வழங்கப்பட்டது. **இதன் நிர்வாகத்தைச் சோழ இளவல்கள் 'சோழ பாண்டியர்' என்ற பட்டத்தைச் சுமந்து இயக்கி வந்தனர். இவர்களில் சிறப்புற்ற சோழகங்கதேவன், சோழகங்கன் ஆகியோர்கள் பற்றிய செய்திகள் அருப்புக்கோட்டை கல்வெட்டிலும், பள்ளிமடம் கல்வெட்டிலும் இருந்து தெரிந்து கொள்ள முடிகிறது. மேலும் ராஜராஜ சோழனது கல்வெட்டுக்கள் எதிர்கோட்டையிலும் (கி. பி. 1007) திருச்சுழியிலும் (கி.பி. 997) திருப்புத்தூரிலும் (கி.பி. 1013) உள்ளன. சோழப் பேரரசின் பெருமைக்குரிய இன்னொரு பேரரசனான மூன்றாம் குலோத்துங்க சோழ தேவனது 35-வது ஆட்சி ஆண்டு கல்வெட்டு பிரான்மலையிலும், 22, 40, 48, 49-வது ஆட்சியாண்டு கல்வெட்டுக்கள். குன்றக்குடியிலும், 44-வது ஆட்சியாண்டு கல்வெட்டு பெருங்கருணையிலும், 48-வதுஆட்சியாண்டு கல்வெட்டு கோவிலாங்குளத்திலும் கிடைத்துள்ளன.[3]**

இதன்மூலம் பிரான்மலையின் பக்தி இலக்கியக் காலத்திற்குப் பின்னான வரலாற்றை வருவித்துக் கொள்ள முடிகிறது.

### மறவர் சீமையில் திருமலை புறமலை நாடுகள்

மேற்சுட்டிய பதிவுகளின்வழி பறம்புநாடு திருமலை நாடு எனவும், அதனைச் சுற்றியிருந்த நாடு புறமலை நாடு எனவும் வழங்கியது உறுதிசெய்யப் பெற்றது. அதுபோலவே கோனாட்டின் பகுதிகளும் பறம்பு நாட்டின் எல்லைகளாக விளங்கியதையும் அறிய முடிந்தது. இதே தொடர்பு பாண்டியர் காலத்திலும் சோழர் காலத்திலும் அதனைத் தொடர்ந்து மறவர் சீமையிலும் இருந்ததையும் சான்றுகள் உணர்த்துகின்றன.

பாண்டிய, சோழ ஆட்சியின் நாட்டுப்பிரிவுகளான நாடுகள், வளநாடுகள் கூற்றங்கள் மறவர் சீமை என்ற இந்தப் பொதுப் பெயரின் அடக்கமாக அமைந்திருந்தன. அவை **ஒல்லையூர் நாடு, கோனாடு (இன்றைய**

***திருமெய்ய வட்டம்) கானாடு, சுரபி நாடு, அதளையூர் நாடு, சூரக்குடி நாடு, (காரைக்குடி வட்டம்) திருமலை நாடு, புறமலை நாடு, கல்வாசல் நாடு, இரணிய முட்டநாடு (திருப்பத்தூர் வட்டம்), இடைவளநாடு, தென்னாலை நாடு, தேர்போகி நாடு, (தேவகோட்டை வட்டம்) கானப்பேர் நாடு, மங்கல நாடு, கல்லக நாடு (சிவகங்கை வட்டம்) புனல்பரளை நாடு, பொலியூர் நாடு (மானாமதுரை வட்டம்) உருவாட்டி நாடு (இளையாங்குடி வட்டம்) இராஜசிங்க மங்கல நாடு, அஞ்சு கோட்டை நாடு, தாழையூர் நாடு, களவழி நாடு (திருவாடானை வட்டம்) செவ்விருக்கை நாடு, கீழ்செம்பி நாடு, கோடி நாடு (இராமநாதபுரம் வட்டம்) வடதலைசெம்பி நாடு, கிடாத் திருக்கை நாடு, ஆப்பனூர் நாடு (முதுகுளத்தூர் வட்டம்) வேம்பு நாடு, அளற்று நாடு, (கமுதி வட்டம்) பருத்திக்குடி நாடு, கருநிலக்குடி நாடு (திருச்சுழியல் வட்டம்). இவைகளின் உட்பிரிவுகளாக இராஜேந்திர மங்கல வளநாடு, வரகுண வளநாடு, கேரள சிங்க வளநாடுகளும், ஒல்லையூர்க் கூற்றம் பாகனூர்க் கூற்றம், கானப்பேர் கூற்றம், முத்தூர்க் கூற்றம், மிழலைக் கூற்றம், துகலூர்க் கூற்றம் என்ற துணைப்பிரிவுகளும் இருந்து வந்துள்ளன[4]***
*என்ற சான்று இதனை மெய்ப்பிக்கும்.*

வட்டெழுத்துக் கல்வெட்டுச் சான்றுகள்

*மேலும், இதனை உறுதிப்படுத்திக் கொள்வதற்குப் போதுமான வட்டெழுத்துக் கல்வெட்டுச் சான்றுகளும் உள்ளன.*

*முத்தமிழ்க்காவலர்களான பாண்டியர்களது நாடாக பதின்மூன்றாம் நூற்றாண்டு வரை விளங்கியது* ***அக்கால இராமநாதபுரம் மாவட்டம். இம்மாவட்டத்தின் பல இடங்களில் பாண்டியப் பேரரசர்களது கல்வெட்டுக்கள் மட்டுமல்லாது சோழர்கள், மதுரைச் சுல்தான்கள், நாயக்கர்கள், வானாதிராயர்கள், சேதுபதிகள் ஆகிய முடியுடை மன்னர் பலரது ஆட்சிக்கால கல்வெட்டுக்கள் பலவும் கண்டெடுக்கப்பட்டுள்ளன. பெரும்பாலான கல்வெட்டுக்கள் திருப்புத்தூர். திருத்தளியாண்ட நாயனர் திருக்கோயிலும், பிரான்மலை மங்கைபாகர் ஆலயத்திலும், ராமேஸ்வரம் இராமநாதசுவாமி ஆலயத்திலும் படியெடுக்கப்பட்டுள்ளன.***

**எட்டு, ஒன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த தொன்மையான சில கல்வெட்டுக்கள் எதிர்க்கோட்டை, பள்ளிமடம், திருச்சுழியல், குன்றக்குடி, திருப்புத்தூர், இராமேஸ்வரம் ஆகிய ஊர்களில் உள்ளன. இவை இன்றைய தமிழின் தொன்மை வடிவமான வட்டெழுத்துக்களில் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது. இவை போன்றே புராதனமான கிரந்த எழுத்துக்களில் எழுதப்பட்ட கல்வெட்டுக்கள் பெருங்கருணை, பிரான்மலை இராமேஸ்வரம், திருப்புத்தூர் ஆகிய ஊர்களில் உள்ளன**[5] *எனும் பதிவு மேற்கண்ட கல்வெட்டுச் சான்றுகளை உறுதி செய்கின்றது.*

சிவகங்கைச் சீமையின் தோற்றம்

*சிவகங்கைப் பகுதியுடன் அரசியல் தொடர்புடைய பகுதியாக பிரான்மலை தொடர்ந்து விளங்கி வந்துள்ளது. அதற்கான சான்றுகள் பின்வருமாறு அமைகின்றன.*

*ஏற்கெனவே வழக்கிலிருந்த சேதுபதி சீமை, பெரிய மறவர் சீமை என்றும் புதிய சீமை, சின்ன மறவர் சீமை என்றும் வரலாற்று ஆசிரியர்களால் குறிக்கப்பெற்றது.*

*மேலும்,* **இந்தப் புதிய சீமையின் அங்கங்களாக மான விர மதுரை, திருப்புவனம், படைமாத்தூர், பாகனேரி சக்கந்தி, நாலுகோட்டை மல்லாக்கோட்டை, பட்டமங்கலம், அரளிக்கோட்டை, சத்துரு சங்கார கோட்டை, திருப்புத்தூர், பாலையூர், எழுவன்கோட்டை, இரவிசேரி, தென்னாலைக் கோட்டை, காளையார் கோவில், ஆகிய பாளையங்கள் இருந்தன. இந்தப் பாளையங்களுக்குத் தலைமை இடமாக ஒரு புதிய ஊரும் நிர்மாணிக்கப்பெற்றது. அதுதான் இன்றைய பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் மாவட்டத்தின் தலைநகரான சிவகங்கை ஆகும்.**[6] *(இம்மாவட்டம் தற்போது சிவகங்கை மாவட்டமாகப் பெயர் மாற்றம் பெற்றுள்ளது).*

*ஏறத்தாழ முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர் காடாக இருந்த இந்தப் பகுதியில் சிவகங்கை நகர் அமைந்ததற்கான நடந்த கதை ஒன்றும் பரவலாகச் சொல்லப்பட்டு வருகிறது.*

**நாலுகோட்டையிலிருந்து சசிவர்ணத் தேவர் ஒருநாள் இந்தக் காட்டுப்பகுதிக்குள் வந்தபொழுது ஒரு தவசி தியானத்தில் இருப்பதைக் கண்டு அவரைத் தரிசிக்க அருகில் சென்றார். அப்பொழுது அங்கு தவசிக்குப் பதில் ஒரு பெரிய வேங்கை காணப்பட்டதாகவும், அதனைக் கண்டு அஞ் சாமல் அந்த தவச்செல்வரைத் தேடியபொழுது வேங்கை மறைந்து முனிவர் தென்பட்டதாகவும் அவர் சசிவர்ணத்தேவருக்கு ஆசிகள் வழங்கியதாகவும் அவரது வேண்டுகோளின்படி அங்கு ஒரு ஊருணி தோற்றுவிக்கப்பட்டது**[7] என்பது அந்தக் கதை. இந்தக் கதையைச் செப்பேட்டு வாசகமும் (கி.பி.1733) உறுதி செய்கிறது. இவ்வாறு சிவகங்கையை மையமாகக் கொண்ட சிவகங்கைச் சீமை உருவானது.

## சிவகங்கைக்கும் பிரான்மலைக்கும் உள்ள தொடர்பு

இந்தக் கதைக்கும் பிரான்மலைக்கும் ஒரு தொடர்பு உண்டு. சிவகங்கைச் சீமையின் வளர்ச்சிக்குப் பெரிதும் துணைபுரிந்த சசிவர்ணத்தேவர் பிரான்மலைக்கோயிலுக்கும் திருப்பணிகள் ஆற்றியிருக்கிறார் என்பதோடு கூடுதலான ஒரு தொடர்பும் இவருக்குப் பிரான்மலையோடு இருந்திருக்கிறது என்பதையும் வரலாறுகள் கூறுகின்றன.

**இந்த மன்னரது ஆட்சியில் திருக்கோயில் தர்மமாக பல ஊர்கள் இறையிலியாக வழங்கப்பட்டன. அன்றாட பூஜை, நைவேத்தியம் போன்ற கைங்கர்யங்களுக்கும் வேறு பல திருப்பணிகளுக்கும் இந்த ஊர்களின் வருவாய் பயன்படுத்தப்பட்டது. மேலும் திருமடங்களும், அன்ன சத்திரங்களும் இந்த மன்னரது தண்ணளியில் தங்களது திருப்பணிகளைச் சிறப்பாகத் தொடர்ந்து வந்தன. இவரது இந்த நற்பணிகளுக்கு ஊக்குவிப்பும், உரிய ஆலோசனையையும் வழங்கி உதவும் பிரதானியாக முத்துகுமார பிள்ளை என்பவர் பணியாற்றி வந்தார். தனது இறுதிக் காலத்தை இவ்விதம் சிறந்த ஆன்மிகப்பணிகளில் செலவழித்து வந்த இந்த மன்னர், ஒரு நாள் பிரான்மலை சென்றார். மங்கைபாகர் சுவாமியையும் தேங்குழல் அம்பிகையையும் தரிசனம் செய்து விட்டுப் பல்லக்கில் சிவகங்கை திரும்பிக் கொண்டிருந்தார். மறைந்திருந்து குறிபார்த்து எறிந்த எதிரி ஒருவனது**

***கட்டாரித் தாக்குதலினால் உயிர் துறந்தார்*** [6] *என்ற சான்றின்வழி சிவகங்கைச் சீமை மன்னர்கள் பிரான்மலைக்கோயில் திருப்பணியோடு வழிபாட்டினையும் செய்து வந்தார்கள் என்பதும் அவர்களை மையப்படுத்தி அரசியல் நிகழ்வுகள் நடந்தன என்பதும் தெரியவருகிறது.*

சிவகங்கைச்சீமையின் எல்லை பிரான்மலை

*சிவகங்கைச்சீமையின் முக்கியமான பகுதியாகப் பிரான்மலை அதன், வடமேற்கு எல்லையாகவும் விளங்கிற்று. 17 ஆம் நூற்றாண்டுகளில் இராமநாதபுர சமஸ்தானம் மிகப்பெரிய சமஸ்தானமாக இருந்தது. இன்றைய சிவகங்கை, விருதுநகர், புதுக்கோட்டை மாவட்டத்தின் சில பகுதிகளை உள்ளடக்கியதுதான் அன்றைய இராமநாதபுர சமஸ்தானமாகும். அடிக்கடி ஏற்பட்ட எல்லைப் பகுப்பில் பிரான்மலை இராமநாதபுரம் சமஸ்தானத்துக்கும், சிவகங்கைச் சீமைக்கும் அடிக்கடி மாறியிருக்கிறது.*

***1674 முதல் 1710 வரை ராமநாதபுர சமஸ்தானத்தின் 7 வது மன்னராக ஆட்சிசெய்து வந்தவர் கிழவன் சேதுபதி. கிழவன் சேதுபதி மறைவுக்குப் பின் அவரது மகன் விஜய ரகுநாத சேதுபதி 8வது மன்னரானார். சிவகங்கை-யிலிருந்து சுமார் 7 கி.மீ. தொலைவில் உள்ள நாலுகோட்டை என்ற சிற்றூரைத் தலைநகரமாகக் கொண்டு ஆட்சி புரிந்த பெரிய உடையார்தேவரின் வீரத்தை அறிந்து தனது மகள் அகிலாண்டேஸ்வரி நாச்சியாரை பெரியஉடையார்தேவர் மகன் சசிவர்ணத்தேவருக்கு மணமுடித்து சுமார் 1000 படை வீரர்களையும், இன்றைய சிவகங்கை மாவட்டத்தின் முக்கியப் பகுதிகளான பிரான்மலை, சிங்கம்புணரி, திருப்புத்தூர், திருமயம், காளையார்கோவில், தொண்டி, திருப்புவனம் போன்ற பகுதிகளை சீதனமாக அளித்து வரி வசூலிக்கும் உரிமையை அளித்தார்*** [7] *என்ற சான்றின்வழி சிவகங்கைச் சீமையின் முக்கியப் பகுதியாகப் பிரான்மலை விளங்கியிருந்தமையை உணர முடிகிறது.*

*மேலும், 1728இல் நடந்த மற்றொரு எல்லைப்பகுப்பிலும் பிரான்மலை குறிக்கப் பெற்றுள்ளது.*

***சேதுநாடு இரண்டாவது முறையாக இரண்டாகப் பிரிவுகளாக, இரண்டு அரசுகளாகப் பிரிவு பெற்று இயக்கம் பெற்றன. மதுரையைக்***

***கடந்தவுடன் கிழக்குநோக்கி, சேதுநாட்டை ஊடறுத்துச் செல்லும் வைகையின் தென்கரை வடகரையை ஒட்டி, கிழக்கே எமனேஸ்வரம் வரையிலான புதிய நாட்டின் தெற்கு எல்லையாகக் கொண்டு பின்னர் வடக்கு நோக்கிச் சென்று பிரான்மலையின் கிழக்குச் சரிவு வட எல்லையாக நிர்ணயிக்கப்பட்டது***[10] *என்னும் குறிப்பு இதனை உறுதி செய்கிறது.*

## சிவகங்கைக்கும் புதுக்கோட்டைக்கும் எல்லை பிரான்மலை

*சிவகங்கைச் சீமையின் வசமிருந்த பிரான்மலைப்பகுதி அதன், எல்லைப் பகுதியாகவே விளங்கியது. இராமநாதபுர சமஸ்தானத்துக்கும் சிவகங்கைச் சீமைக்கும் எல்லையாக ஆனதுபோலவே, புதுக்கோட்டை ஆட்சியாளர்களும் தங்களது எல்லையாகப் பிரான்மலையை அடிக்கடி உரிமை கொண்டாடினர். இது பூசலுக்குவழி வகுத்திருக்கிறது. இதனை,*

***சிவகங்கைச் சீமை, இராமநாதபுரம் சீமையில் இருந்து உருவானது என்பதும் அந்தச் சீமையின் மன்னர், சிவகங்கை மன்னரது இரத்த பந்தத்தில் இணைந்த உறவினர் என்பதும் நினைவில் கொள்ளப்படவில்லை. கடந்த நாற்பது ஆண்டு கால அரசியலில், தாம் பிரதானியாக இருந்த வரை, சிவகங்கைப் பிரதானி தாண்டவராயபிள்ளை முக்கியமான அனைத்துப் பிரச்சனைகளிலும், இராமநாதபுரம் பிரதானிகளான வெள்ளையன் சேர்வை, தாமோதரம்பிள்ளை, பிச்சைப் பிள்ளை ஆகியோர்களுடன் கலந்து யோசிக்காமல் முடிவு செய்தது இல்லை. இத்தகைய முந்தைய காலகட்ட முறைகள் புறக்கணிக்கப்பட்டதால் இந்த இருநாடுகளது அரசியலில் உருவான சூடும் வெறுப்பும் தணியவில்லை. குறிப்பாக, இதனால் இதுதொடர்பாக இருநாட்டு எல்லைகளில் சிறுசிறு மோதல்கள் ஏற்பட்டன.. இதனைப்போன்றே தொண்டமான் சீமையில் பிரான்மலையை ஒட்டிய பொது மேய்ச்சல் தரை, காடு பற்றிய எல்லைத் தகராறுகள் குறிப்பிடத்தக்கவை***[11] *என்ற குறிப்பு உறுதிப்படுத்துகிறது.*

## பிரான்மலைப் பிரச்சனையில் ஆங்கிலேயர் தலையீடு

*எல்லை உரிமையின் காரணமாக இந்தச் சிக்கலைத் தீர்ப்பதற்கு ஆங்கிலேயர்களும் முயன்றிருக்கின்றனர் என்பதைச் சான்றுகள் வழி உறுதிப்படுத்தலாம். இதனை,*

***பிரான்மலையை அடுத்துள்ள சில இடங்களின் உரிமை குறித்து சிவகங்கைக்கும் புதுக்கோட்டைக்கும் சர்ச்சை இருந்து வந்தது. பிளாக்பர்ன் இதில் தலையிட்டு அப்பகுதியை இரண்டாகப் பிரித்து இருதரப்பாருக்கும் அளித்தார்***[12] *என்னும் கூற்றால் அறியலாம்.*

புதுக்கோட்டை ஆட்சியிலும் பிரான்மலை

*சிவகங்கைச் சீமையிலிருந்து பிரிந்து பின்னாளில் பிரான்மலை புதுக்கோட்டை ஆட்சிக்குட்பட்டதையும் வரலாறுகள் எடுத்துரைக்கின்றன. இதனை,*

***கி.பி.1645-ல் சேதுபதி மன்னராக அறிவிக்கப்பட்ட திருமலை ரெகுநாத சேதுபதி, தமது ஆட்சியில் சேது நாட்டின் எல்லைகளை வடக்கே அதளையூர் நாடு, கல்லக நாடு, புறம்மலை நாடு, சூரக்குடிநாடு, கள்ளர் நாடு, கழனிவாசல் நாடு, முத்துர்நாடு, கல்வாசல் நாடு, உருவாட்டி நாடு, உஞ்சினை நாடு, பூங்குன்ற நாடு ஆகிய பகுதிகளை இணைத்ததுடன் இன்னும் சற்று வடக்கே சோழ மண்டலத்திற்குள் புகுந்த அறந்தாங்கிச் சீமை, பட்டுக்கோட்டைச் சீமை, திருவாவூர்ச் சீமை, கள்ளர் சீமை ஆகிய பரந்த பகுதிகளையும் தஞ்சை மன்னர்களிடமிருந்து கைப்பற்றிச் சேதுபதி சீமையின் பகுதிகளாக மாற்றினார். மேலும் மதுரை மண்டலத்தின் மீது கி.பி.1658ல் படையெடுப்பை மேற்கொண்ட கன்னடியர்களை புறமுதுகிட்டு ஓடும்படி செய்தார். மதுரை திருமலை நாயக்க மன்னருக்காகப் பெற்ற இந்த வெற்றியினைப் பாராட்டி திருமலை நாயக்க மன்னர், மதுரை மண்டலத்தின் கிழக்குப் பகுதியான திருப்புவனம், திருப்பாச்சேத்தி, பள்ளிமடம் ஆகிய பகுதிகளையும், திருமலை ரெகுநாத சேதுபதி மன்னருக்கு அன்பளிப்பாக வழங்கினார். மேலும் தெற்கே திருநெல்வேலிச் சீமைப் பகுதியில் மன்னர் கோயில் வேறு சில பகுதிகளையும், வங்கக்கடலின் தென்பகுதியில் முத்துக்குளிக்கும் உரிமையும் வழங்கினார். இதனால் சேதுநாடு பாண்டிய நாட்டினை ஒத்த பெரும் நிலப்பரப்பாக விளங்கியது. ஆனால் இந்த மன்னரை அடுத்து சேதுபதி பட்டம் தரித்துக்கொண்ட ரெகுநாத கிழவன் சேதுபதியின் ஆட்சியின்போது சேதுநாட்டின் வடபகுதியான புறமலை நாட்டையும்,***

***கொடுங்குன்றம் என்ற பிரான்மலைக்கும் அப்பால் உள்ள கள்ளர் சீமையை அந்த மன்னரது மைத்துனர் ரெகுநாதராயத் தொண்டைமான் தன்னரசராக தம்மை அறிவித்துக் கொண்டார்***[13] என்னும் கூற்றால் புதுக்கோட்டை அரசின் தொடர்பும் பிரான்மலையோடு இருந்திருப்பதை அறிந்து கொள்ள முடிகிறது. மேலும் இவ்விரு சமஸ்தான அரசுகளுக்கும் பிரான்மலையின் முக்கியத்துவம் புரிந்துள்ளது என்பதும் உறுதியாகிறது.

## சிவகங்கைச் சீமையின் பாதுகாப்பான கோட்டை பிரான்மலை

வேலுநாச்சியாருக்கும் மருதுபாண்டியருக்கும் இடையில் நடந்த பூசலை ப்பயன்படுத்தி ஆற்காட்டு நவாபின் படைகள் சிவகங்கைச் சீமையை முற்றுகையிட்டபோது மருதுபாண்டியர்கள் முதலில் பாதுகாப்பான இடமாகக் கருதியது பிரான்மலையைத்தான் என்று வரலாற்றுக்குறிப்புகள் தெரிவிக்கின்றன.

***மதுரை, திருச்சி, தஞ்சை ஆகிய கோட்டைகளில் இருந்து படையணிகள் தளபதி ஸ்டுவர்ட்டின் உதவிக்கு வந்து சேர்ந்தன. ஆதலால் கும்பெனிப்படைகள் இன்னும் கிழக்கே முன்னேறி, காளையார்கோவில் பகுதியிலிருந்தும் மருது சேர்வைக்காரர்களது படைகளைத் துரத்தி அடித்தனர். அவர்கள் வடக்கே பிரான்மலையை நோக்கி ஓடிய பின்னர், அங்கிருந்து திண்டுக்கல் சீமைக்குள் சென்றுவிட்டனர். சிவகங்கைச் சீமை வரலாற்றில் பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர் நடக்கவிருக்கும் அரசியல் மாற்றத்தை முன்கூட்டி எச்சரிக்கை செய்யும் அடையாள நிகழ்வாக உற்பாதமாக தளபதி ஸ்டுவர்ட்டின் கொல்லங்குடி, காளையார்கோவில் படையெடுப்பும் மருது சகோதரர்களது தோல்வியும் அமைந்துவிட்டது. அடுத்த ஐந்து மாதங்கள் சிவகங்கைச்சீமையில் அமைதி நிலவியது***[14] என்பது இங்கு நோக்கத்தக்கது.

## ஆயுதக் கிடங்குடனான பிரான்மலைக் கோட்டை

அதனைத் தொடர்ந்து, இனிமேல் சிவகங்கைச்சீமையில் இருந்து தங்களுக்குத் தொல்லை நேர்ந்துவிடக்கூடாது எனக்கருதிய ஆங்கிலேயர் அச்சீமையிலுள்ள கோட்டைகள் அனைத்தையும் அழித்ததோடு அங்கிருந்த

ஆயுதங்களையும் கைப்பற்றிக் கொண்டார்கள். அதில் குறிப்பிடத்தகுந்த கோட்டையாக, பிரான்மலை விளங்கியது.

*சிவகங்கை ஜமீன்தாரியின் முதலாவது ஜமீன்தார் கௌரி வல்லப உடையாத் தேவர், கி.பி.1829 வரை பதவியில் இருந்தார். இவரது ஆட்சிக்காலம் அமைதியாகக் கழிந்தது. தங்களுடைய ஏகாதிபத்திய ஆட்சிக்கு எதிராகத் தமிழகத்தில் மீண்டும் மக்கள் ஆயுதம் ஏந்திப் போராட முயற்சிக்கக் கூடாது என்பதற்காகப் போராட்ட உணர்வினை ஊக்குவிக்கும் மையங்களாகக் கோட்டைகள் உதவக்கூடாது என்பதற்காக மக்களிடமிருந்து ஆயுதங்களைப் பறிமுதல் செய்தனர். மன்னர்களது தற்காப்பு நிலையங்களாக பல நூற்றாண்டுகளாக விளங்கிய கோட்டைகளையும், கொத்தளங்களையும் இடிக்குமாறு உத்திரவிட்டனர். சிவகங்கைச் சீமை முழுவதும் மக்களிடத்தில் எஞ்சியுள்ள ஆயுதங்களை பறிமுதல் செய்வதற்கான பணியினை வைகுந்தம் பிள்ளை என்பவர் மேற்கொண்டார். கீழே கண்டுள்ள ஆயுதங்கள் சிவகங்கைச் சீமை மக்களிடமிருந்து, 31.3.1802 வரை பறிமுதல் செய்யப்பட்டு, இராமநாதபுரம், மதுரை கோட்டைகளுக்கு அனுப்பப்பட்டு, அங்கு அவை அழிக்கப்பட்டன.*

| | |
|---|---|
| *1. துப்பாக்கிகள்* | *2096* |
| *2. மருந்து நிறைத்துச் சுடும் துப்பாக்கிகள்* | *1229* |
| *3. வேல், ஈட்டிகள்* | *3640* |
| *4. கைத்துப்பாக்கிகள்* | *42* |
| *5. வாள்கள்* | *652* |
| *6. குறுவாள்* | *441* |
| *7. ஜிங்கால்* | *7* |
| *8. ஸ்ரோஜன்* | *90* |
| *9. துப்பாக்கி சனியன்கள்* | *91* |
| *மொத்தம்* | *8,298.*[15] |

**திருபுவனம், திருப்புத்தூர், மானாமதுரை, பார்த்திபனூர், பிரான்மலை, அனுமந்தக்குடி, சூரக்குடி, காளையார்கோவில் ஆகிய ஊர்களில் அமைந்து இருந்த கோட்டைகள் இடித்து அழிக்கப்பட்டன**[16] என்ற குறிப்பு பிரான்மலை ஆயுதக் கிடங்கின் வளத்தைக் காட்டுவதாக உள்ளது.

பிரான்மலையில் வாழ்ந்த சிவகங்கைச்சீமைப் புலவர்கள்

சிவகங்கைச்சீமை மன்னர்களைப் போற்றிப் பாடிய புலவர்கள் பிரான்மலையில் வாழ்ந்தனர் என்பதற்குச் சான்றுகள் கிடைக்கின்றன.

**சேதுமன்னர் வழியில் செந்தமிழ்ப் பணி சேதுபதி மரபினரான சிவகங்கை மன்னர்களும், தமிழுக்குத் தளராது உதவி உள்ளனர். தமிழ்ப்புலவர்களைப் பெருமைப்படுத்திப் பொன்னும் பொருளும் வழங்கியதுடன் அவர்களது வாழ்க்கை, வறுமையில் முடிந்துவிடக்கூடாது என்ற கருத்தில் தமிழ்ப் புலவர்களுக்கு பேரும் ஊரும் அளித்து பெருமைப்படுத்தினர். சிவகங்கை தேவஸ்தான ஆவணங்களில் இருந்து, சிவகங்கைத் தன்னரசின் முதல் மன்னரான சசிவர்ணத்தேவர், மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக்கவிராயர் வழியினரான சிற்றம்பலக் கவிராயருக்கு கி.பி.1732-ல் ஜீவித மான்யமாக, காடன் குளம் என்ற கிராமத்தைத் தானமளித்தார் எனத் தெரிகிறது. இந்தக் கவிராயரது மைந்தரான மங்கைபாகக்கவிராயருக்கு கி.பி. 1733-ல் மேலக் கொன்னக்குளம் என்ற கிராமத்தை முற்றுட்டாக வழங்கிய செய்தியும் உள்ளது. இவர்களது வழியினர் பின்னர் பிரான்மலையில் வாழ்ந்தனர் என்பதும் அவர்களில் ஒருவரான குழந்தைக்கவிராயரும் இந்த மன்னரால் ஆதரிக்கப்பட்டார்**[17] என்பதும் சான்றுகளால் உறுதிப்படுத்தப்படுகின்றது.

**சிவகங்கையின் அரியணையேறிய இளம் மன்னர் முத்து வடுகநாதர் ஆட்சிக்காலத்தில் தமிழ்ப்புலவர்களின் கூட்டம் அருகிவிட்டாலும், மிதி-லைப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயரது வழியினர் தமிழ்ப்பணி தொடர்ந்தது. இந்தக் கவிராயது பேரனான குழந்தைக் கவிராயர் பிரான்மலையில் வாழ்ந்து வந்தார்**[18] என்பனவாகிய குறிப்புகள் அக்காலத்தில் பிரான்மலை இலக்கியச் செழிப்புடையதாக இருந்ததை உறுதிப்படுத்துகின்றன.

## இலக்கியச்சான்றுகளில் சிவகங்கை - பிரான்மலைத் தொடர்பு

*1747இல் தாண்டவராயபிள்ளை என்பவர், சிவகங்கைப் பிரதானியாகப் பதவியேற்றார். இவர் பிரான்மலைக்குப் பல திருப்பணிகள் செய்துள்ளார் என்பதனை, மிதிலைப்பட்டிக் கவிராயர் தனது மான்விடுதூது நூலில் குறித்துக் காட்டுகிறார்.*

***கோலமிகு குன்றக் குடியிலே நீடூழி***
***காலமெல்லாம் நிற்கவே கற்கட்டிக் குளத்தில்***
***நன்னூற்றுக் காணத் தடாகப்பிர திட்டைசெய்து***
***செந்நூல் துறையால் சினகரமும் - பொன்னால்***
***படித்துறையு பூந்தருவும் மைந்தருவும் வேதம்***
***படித்துறையு மண்டபமும் பாங்காய் - முடித்து வைத்தே***
***போற்றிய வையா புரியுமென்று பேருமிட்டு***
***நாற்றிசையோர் போற்றுவள்ளி நாதருக்கே - தோற்றுதினக்***
***கட்டளையுந் துவாதசிக் கட்டளையுந் தைப்பூசக்***
***கட்டளையுமே நடத்துங் கங்கைகுலன் - மட்டுவிரி***
***சீதளியார் புத்தூர்த் திருத்தளியார் கொன்றைவன***
***நாதனார் வயிரவ நாதருக்கும் - சீதமலர்***
***நல்லமங்கை பாகருக்கும் நம்பும் வயிரவருக்கும்***
***வல்ல திருக்கோட்டி மாதவருக்கும் - நல்லியன்முன்***
***மண்டபம் நெய்விளக்கு மாமதிலும் வாகனமும்***
***தண்டலையு வில்லத் தளமலர்கள் - கொண்டதோர்***
***நித்திய நைமித்தியம் நேயமாய் தானடக்க***
***பத்தியுடனே யமைத்த பண்பினான்[19]***

*என்று பிரதானி தாண்டவபிள்ளையின் பணிகளை அடுக்கிச் சொல்லும் குழந்தைக்கவிராயர் முன்னர்க் குறிப்பிட்ட* ***மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயர் பேரர்[20]*** *என்பது குறிப்பிடத்தக்கது.*

## உ.வே.சாமிநாதையரின் பதிவு

*இதனை உ.வே.சாமிநாதையரும் தான் பதிப்பித்த மான்விடுதூது*

நூலில் பதிப்புரையில் இதனைக் குறிப்பிட்டுக் காட்டுவது இங்கு நோக்கத் தக்கதாகும்.

***குன்றக்குடியிலுள்ள முருகக் கடவுள் திருக்கோயிலைப் புதுப்பித்தார்; வையாபுரி யென்னும் தடாகத்தை அமைத்து அதற்கு அழகிய படித்துறையும் அதனைச் சுற்றிலும் நந்தவனமும் வேத பாடலசாலையும் நிறுவினார். இவற்றோடு முருகப்பெருமானுக்கு நித்தியக் கட்டளை, துவாதசிக் கட்டளை, தைப்பூசக் கட்டளை என்பவை நன்கு நடைபெறச் செய்தார்; திருப்புத்தூரில் எழுந்தருளியுள்ள ஸ்ரீதளீசுவரர், வயிரவ மூர்த்தி, பிரான்மலையில் எழுந்தருளியுள்ள மங்கைபாகர், வயிரவர், திருக்கோட்டியூர் ஸ்ரீ சௌமிய நாராயணப் பெருமாள் என்னும் மூர்த்திகளுக்கு மண்டபம், மதில், நந்தவனம், வாகன, நெய் விளக்கு முதலியவற்றை அமைத்து நித்திய நைமித்திகங்கள் குறைவின்றி நடந்துவரச் செய்தார்***[21] என்று குறிப்பிடுகிறார்.

சிவகங்கை மன்னர்கள் பிரான்மலைக் கோயிலுக்கு வழங்கிய நிவந்தங்கள்

சிவகங்கை மன்னர்கள் பிரான்மலைக்கோயிலுக்கு வழங்கிய நிவந்தங்கள் ஆண்டுவாரியாகச் சிவகங்கைச்சீமைக் கல்வெட்டில் பதியப்பெற்றுள்ளன. அவற்றின் விவரங்கள் பின்வருமாறு பட்டியலில் அமைகின்றன.

| கல்வெட்டுப் பதிவு எண் | கல்வெட்டுச் செய்தி |
|---|---|
| 139/1903 | இம்மாடி ராயர் ஆட்சி சகம் 1422 எப்புலி நாயக்கர், சுந்தரராஜப் பட்டருக்கு நிலதானம் |
| 139/1903 | குலோத்துங்க சோழ தேவரது ஆட்சி ஆண்டு 35 |
| 139/1903 | எம்மண்டலமும் கொண்ட குலசேகர தேவற்கு ஆண்டு. 39வது முதலியார் சுரபித் திருமேனிக்கு பிடிபாடு பண்ணிக் கொடுத்த பரிசு |

| | |
|---|---|
| *141/1903* | தேவராயர் மகாராஜா இராஜ்யம் பண்ணி அருளா நின்ற சகம். 1364 நாள்தோறும் அமுது செய்யத் திருமஞ் சன சாத்துப்படி முதலியனவற்றிற்கு அறுநூற்றுவன் ஏரிதானம். |
| *142/1903* | சோனாடு கொண்டருளிய சுந்தரபாண்டிய தேவற்கு ஆண்டு 3-வது திருநந்தா விளக்கு தர்மமாக சாவா மூவாப் பேராடு 50 தானம். |
| *142-பி/1903* | திருநந்தா விளக்கு தர்மமாக சாவாமூவாப் பேராடு 50 தானம் அறப்பெருமை செல்வியார் திருமடத்துக்கு துந்தா விளக்கு ஆடு 50 தானம். |
| *ஏ.ஆர்.14/1903* | திருபுவன சக்கரவர்த்தி குலசேகர தேவற்கு யாண்டு 3 -ன் எதிர் 14-வது துந்தா விளக்கு தர்மம். |
| *145/1903* | திருபுவன சக்கரவர்த்தி வீரபாண்டிய தேவற்கு யாண்டு 3. திருபுவன சக்கரவர்த்தி உடையார் பூபால புரந்தரன் சன்னதி அமுதுபடி சாத்துப்படிக்கு நிலதானம் |
| *146/1903* | கிருஷ்ணதேவமகராயர் 1440 |
| *147/1903* | துவராபதிவேளார் கட்டிய பூபால புரந்தரன் சந்திக்கு சுரபி நாட்டு கொற்ற மங்கலம் தானம் |
| *148/1903* | சுந்தரபாண்டிய நாயகற்கு கோனாட்டு இடையாற்றூர் நிலதானம் |

| | |
|---|---|
| 149/1903 | மாளவ சக்கரவர்த்தி ஒலை பொலிகால் நாட்டு முடிதாங்கி நல்லூரில் 40 மாநிலம் தானம். |
| 150/1903. | திருபுவன சக்கரவர்த்தி பராக்கிரம பாண்டிய தேவற்கு யாண்டு பத்தாவது காரையூர் தேவனுக்கு காணி விலைப் பிரமாணம் பண்-ரிக் கொடுத்தது. |
| 151/1903. | இம்மாடி நரசிம்ம ராயர். சகம் 1422 திப்பராசபுரம் தானம். |
| 152/1903. | திரிபுவனச்சக்கவர்த்தி எம்மண்டலமும் கொண்ட குலசேகர தேவற்கு யாண்டு 16,200 பொன் தானம். |
| 153/1903. | சகம். 1500 விபவ திருப்பணிக்கு சேந்த மேலுர் கிராமம் தானம். |
| 154/1903. | பல்வேறு வணிகச் சாத்தினர் கலந்து கொண்டு செய்த முடிவுகள். |
| 432/1903. | கி.பி.1256 இரண்டாம் சடைய வர்மன் வீர பாண்டியன் 2-வது ஆட்சி ஆண்டு. |
| 218/1924 | முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் - சிதைவு. |
| 222/1924 | முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் - சிதைவு. |
| 228/1924 | முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் - சிதைவு. |
| 436/தெ.இ.க. | மாவலி வாணாதிராயன்[22] |

இச்சான்றுகளின்வழி பிரான்மலையை ஆன்மீக முக்கியத்துவம் வாய்ந்த தலமாகச் சிவகங்கை மன்னர்கள் கருதியமை புலனாகிறது.

## விடுதலைப் போராட்டக் காலத்தில் பிரான்மலை

*இந்திய விடுதலைப்போராட்டத்தில் தமிழகத்தின் பங்கு குறிப்பிடத் தக்கதாகும். 1857-ல் நடந்த சிப்பாய் கலகமே முதல் இந்திய விடுதலைப் போர் எனக் குறிப்பிடப்படுகிறது. எனினும் தென்னிந்தியாவில் அதற்கு முன்னரே ஆங்கிலக் கிழக்கிந்திய நிறுவனத்துக்கு எதிராகப் பல போர்களும் கிளர்ச்சிகளும் நடைபெற்றிருந்திருக்கின்றன.*

*மதுரை நாயக்க மன்னர்களுக்குக் கட்டுப்பட்ட சிற்றரசர்களாக கப்பத்தொகையினை செலுத்திவந்த பாளையக்காரர்கள், மற்றும் மறவர்கள் மதுரை நாயக்க மன்னர்களின் மறைவிற்குப் பிறகு கப்பம் கட்ட மறுத்தனர். எனவே ஆற்காடு, மதுரை உள்ளிட்ட அரசுகள் நவாப்பின் ஆட்சிக்குட்பட்ட போது கிட்டத்தட்ட 20 ஆண்டுகாலம் தன்னாட்சி புரிந்து வந்த இவர்கள், கட்டுப்பட்டு கப்பம் செலுத்த மறுத்தனர். இதனால் ஏற்பட்ட கிளர்ச்சியை அடக்க நவாப்புக்குப் படை உதவி செய்த ஆங்கிலேயர்களுக்கு நவாப், கட்டணம் செலுத்த வேண்டியிருந்தது. இது பெரும் கடன்தொகையாக மாறவே இப்பகுதிகளில் எல்லாம் வரி வசூல் செய்யும் உரிமையை கம்பனியார் பெற்றனர். இதனை அழகு முத்துக்கோன், பூலித்தேவன், கட்டபொம்மன் உள்ளிட்ட பலர் எதிர்த்தனர்.*

*1752ல் மதுரையை ஆண்ட விசயகுமார நாயக்கர் மீது பரங்கியர் கேப்டன் கோப் தலைமையில் போர் தொடுத்துக் கைப்பற்றினர். அதையறிந்த முத்துவடுகநாதர் மதுரை மீது போர் தொடுத்து அங்கிருந்த கேப்டன் கோப்பையும் அவர் படைகளையும் விரட்டியடித்து மீண்டும் விசயகுமார நாயக்கரையே மதுரை மன்னராகப் பதவியில் அமர்த்தினார். அவரின் இறப்புக்கு பின்னர் அவரின் மனைவி வேலுநாச்சியாரும் படைத்தளபதிகளான மருது சகோதரர்களும் போராட்டத்தை தொடர்ந்தனர்.*

*1780-இல், தனது பிரதானி தாண்டவராயப் பிள்ளையின் ஆலோசனை-யின்படி மருது சகோதரர்களின் உதவியோடும் கும்பினி எதிர்ப்புப்படை ஒன்றை அமைத்து சிவகங்கையை மீட்டவர் வேலுநாச்சியார்.*

இருபது ஆண்டுகளுக்கு மேலாக, கப்பத் தொகையினை யாருக்கும் கட்டாமல் தன்னிச்சையாக இயங்கி வந்த இராமநாதபுரம் சேதுபதியை ஆயுத வலிமை கொண்டு அடக்கிட நாவாப் விரும்பினார். 1772-ல் நவாப் முகமது அலியின் மகனான உம் தத்துல் உம்ரா, கம்பனித் தளபதி ஷோசப் ஸ்மித் ஆக்யோர் தலைமையில் பெரும்படை ஒன்று இராமநாதபுர கோட்டையைக் கைப்பற்றியது. அங்கிருந்த ராணி, அவரது இரு பெண்குழந்தைகள் இளவல் முத்துராமலிங்க சேதுபதி ஆகியோர் கைது செய்யப்பட்டு திருச்சிக் கோட்டையில் அடைக்கப்பட்டனர். இதனால் ஏற்பட்ட கிளர்ச்சி காரணமாக 1781-ல் நாவாப் சிறையிலிருந்த இளம் சேதுபதி மன்னருடன் ஓர் உடன்பாடு செய்துகொண்டு இராமநாதபுரத்தில் சேதுபதி மன்னர் தமது ஆட்சியைத் தொடர வழி கோலினார். சேதுபதி திருவிதாங்கூர் மன்னர் மற்றும் திருநெல்வேலிப் பாளையக்காரர்களுடன் நட்புகொண்டார். மேலும் நவாபுக்கும் கிழக்கிந்திய நிறுவனத்துக்கும் எதிராக டச்சுக்காரர்களுடனும் உடன்பாடு செய்துகொண்டார்.

ஆற்காடு நவாப்பின் இறையாண்மைக்கு உட்பட்ட நிலையில் அவரது சலுகைகளை எதிர்பார்த்து தங்களது வணிகத்தைத் தொடர்ந்து வந்த ஆங்கிலேயர் சேது நாட்டின் வணிகத்தில் தனது ஆதிக்கத்தை நிலை நாட்ட முயன்றனர். ஆனால் சேதுபதி மன்னர் மறுத்தார். எனவே பலவகையில் முயன்று ஆற்காட்டு நவாப்பிற்கும், ஆட்சியர் பவுனிக்கும் முறையிட்ட கம்பனியர் போர் தொடுக்க இரகசியத் திட்டம் தீட்டினர். மன்னருக்கு மிகவும் நம்பிக்கையான தளபதி மார்ட்டினிடம் கோட்டை வாசல் கதவுகளுக்கான சாவிகள் இருந்தன. எனவே 1795 பிப்ரவரி எட்டாம் நாள் கம்பெனியாரது படை இராமநாதபுரம் கோட்டை வாயிலைக் கடந்து அரண்மனையைச் சூழ்ந்து கொண்டது.

ஆயுதக் கிடங்கு, வெடிமருந்து இருப்பு, போர்வீரர் எண்ணிக்கை மற்றும் நாட்டுப்புறங்களில் பயிற்சிபெற்ற நாலாயிரம் போர்வீரர்கள், ஆயுதம் ஏந்தக் கூடிய ஆறாயிரம் குடிமக்கள் ஆகியோர் இருந்தும் மன்னர் வஞ்சகமாக கைது செய்யப்பட்டு திருச்சி சிறைக்கு அனுப்பப்பட்டார்.

மன்னரது தளபதி மயிலப்பன் சேர்வைக்காரன் என்பவர் மன்னரைத் தப்புவிக்கும் முயற்சியில் தோல்வியடைந்தபின் மக்களைத் திரட்டி ஆயுதக் கிளர்ச்சியொன்றைத் தொடங்கினார். முதுகுளத்தூர், அபிராமபுரம், கமுதி ஆகிய ஊர்களிலுள்ள கம்பெனியாரது தானியக் களஞ்சியம், கிடங்குகள் ஆகியன சூறையாடப்பட்டன இப்புரட்சியில், குளத்தூர், காடல்குடி, நாகலாபுரம், பாஞ்சாலங்குறிச்சி மக்களும் கலந்துகொண்டனர். நாற்பத்து இரண்டு நாட்கள் நீடித்த இப்புரட்சி கம்பெனியாரது ஆயுத பலத்தினால் ஒடுக்கப்பட்டது. மன்னர் சேதுபதி திருச்சி சிறையிலிருந்து நெல்லூர் சிறைக்கு மாற்றப்பட்டார்.

## தமிழகத்துப் புரட்சியாளர்கள்

சிற்றூர்களில் வாழும் மக்கள் ஒற்றர்கள் மூலம் செய்தி பரப்பிக் கூட்டங்களைக் கூட்டிப் புரட்சி குறித்து முடிவெடுத்தனர். தமிழகத்தில் அமைதியின்மை உருவாகிவிட்டதை அறிந்த மைசூரின் திப்பு சுல்தானும் பிரான்சு நாட்டு நிர்வாகக் குழுவினரும் இரகசியமாகத் தூதர்களை அனுப்பிவைத்தனர். இதன் விளைவாக விருப்பாச்சி கோபால நாயக்கர் தலைமையில் பழனியிலும், மருதுபாண்டியர் தலைமையில் சிவகங்கையிலும். மயிலப்பன் தலைமையில் இராமநாதபுரத்திலும், சிவகிரியின் மாப்பிள்ளை வன்னியத்தேவர் மற்றும் பாஞ்சாலங்குறிச்சியின் வீரபாண்டிய கட்டபொம்மன் ஆகியோர் தலைமையில் திருநெல்வேலியிலும் குழுக்கள் தோற்றுவிக்கப்பட்டன. இதே நேரம் தென்னிந்தியாவின் பிற பகுதிகளிலும் இத்தகைய புரட்சிக் குழுக்கள் தோன்றின.

## சிவகங்கைச் சீமைக்கான உரிமைப்போர்

முன்னர்ச்சுட்டப்பெற்ற வரலாற்றின் தொடர்ச்சியாக, மன்னர் கிழவன் சேதுபதி இறந்தபின் மறவர் சீமையில் அரசுரிமை குறித்துப் பெருத்த உள்நாட்டுப் போர் கிளம்பியது. புதுக்கோட்டை அரசர், தஞ்சை மராத்திய மன்னர், மதுரை நாயக்க மன்னர் ஆகியவர்களும் இந்தப் போரில் கலந்துகொண்டு தத்தமக்கு வேண்டிய கட்சியை ஆதரித்தனர்.

*அதன்வழி அவர்கள் கைக்கொண்ட பகுதிகள் போக, மீதமிருந்த மறவர் நாடு ஐந்து பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு மூன்று பங்கு கட்டையத் தேவர் என்பவருக்கும் மீதி இரண்டு பங்கு சசிவர்ணத் தேவருக்கும் வழங்கப்பட்டன. சுமார் 1730ஆம் ஆண்டு நடைபெற்ற இந்நிகழ்ச்சியின் பயனாகச் சசிவர்ணர் பெற்றதே சிவகங்கை இராச்சியம். இந்தச் சசிவர்ணத்தேவர் சிவகங்கைச் சீமையைச் சுமார் 25 ஆண்டுகள் ஆட்சி புரிந்தார். இக்காலத்தில் பிரான்மலை இந்தச் சிவகங்கைச் சீமையின் எல்லைப் பகுதியாக விளங்கியது.*

## அந்நியர் நுழைவும் மருதுபாண்டியர்கள் தோற்றமும்

*இந்நிலையில் ஆர்க்காட்டு நவாபின் அன்னிய விசுவாசத்தால், ஜெனரல் ஸ்மித்து என்பவன் 1772ஆம் ஆண்டு மறவர் நாட்டின்மீது படையெடுத்து சிறுவன் சேதுபதியையும் அவன் தாயையும், அவன் சகோதரியையும் சிறைப்படுத்தித் திருச்சிக்கு அனுப்பிக் காவலில் வைத்தான்.* ***இராமநாதபுரத்தில் வெற்றிக்கொடி உயர்த்திய வெள்ளைப் படையால் சிவகங்கையைத் தொடக்கூட இயலவில்லை. அங்கே அரசனாய் இருந்த முத்துவடுகநாதன் வயதானபோதும் கம்பெனிப் பட்டாளத்திற்குச் சிம்மசொப்பனமாக விளங்கிய இருசகோதரர்களால் இது சாத்தியமாயிற்று. அவர்களே பெரிய மருது, சின்னமருது***[23] *என மருதிருவரை அடையாளப் படுத்துகிறார் ந.சஞ்சீவி.*

## ஆங்கிலேயர் மருதுபாண்டியர்களிடமிருந்து கைப்பற்றிய பிரான்மலைக் கோட்டை

*பிரான்மலையில் மறவர்படை நிறைந்த கோட்டை இருந்தது என்பதனை,*

***திருப்புத்தூரிலிருந்து 26 கி.மீ. தொலைவில் பிரான்மலை உள்ளது. இப்பகுதி சங்ககாலத்தில் பறம்புமலை எனப்பட்டது. சங்ககால வள்ளல் பாரி ஆட்சி புரிந்த பகுதி எனப்படுகிறது. இது 'திருக்கொடுங்குன்றம்' என்றும் அழைக்கப்படுகிறது.***

**திருஞானசம்பந்தர், அருணகிரிநாதர் ஆகியோரின் பாடல் பெற்ற தலமாகும். இப்பகுதி சிவகங்கையின் மருதுசகோதரர்கள் ஆட்சிக்குட்பட்டிருந்தது. இம்மலையில் இச்சகோதரர்கள் பலமிக்க கோட்டையைக் கட்டினர். ஆனால், ஆங்கிலேயர்கள் மருது சகோதரர்களை வென்று, பிரான்மலைக் கோட்டையைக் கைப்பற்றினர் (1801, செப்டம்பர் 18) கோட்டையின் எஞ்சிய பகுதிகளை இன்று இங்குக் காணலாம்[24]** என்ற குறிப்பின்வழி உறுதி செய்து கொள்ள முடிகிறது. மேலும்,

**கர்னல் மார்ட்டிசின் படை மானாமதுரையில் இருப்பதை அறிந்து ஒரு படைப்பிரிவை அங்கு அனுப்பி வைத்தார் வேலுநாச்சியார். மானாமதுரையில் கர்னலே கலங்கும்படி போர் நடந்து. பிரான்மலை கோட்டைக்குள் இருந்து இராணுவத்தினரும் போரில் வேலுநாச்சியாருக்காக வந்து கலந்து கொண்டனர். விடுதலைப் போர் வேலு நாச்சியாருக்கு வெற்றியைத் தேடித்தந்தது[25]** என்னும் குறிப்பும் இதனை உறுதி செய்கிறது.

இதனை மேலும் உறுதிப்படுத்தும் வண்ணமாக, ஆங்கிலத் தளபதி அக்கினியூவிற்கு எதிரான முதற்களமாக விளங்கியது பிரான்மலைக் கோட்டைதான் என்பதையும் வரலாற்றுக் குறிப்புகள் உணர்த்துகின்றன.

சிவகங்கைச் சீமையில் ஆங்கிலேயருக்கு எதிரான புரட்சிப் போக்குகள் அதிகரித்து வருதை ஊன்றிக் கவனித்த சென்னைப் பிரிட்டிஷ்காரர்கள் கல்கத்தாவில் உள்ள கும்பெனியாருக்கு அனுப்பி வைத்த அறிக்கை விவர அறிக்கையில்,

**இராமநாதபுரம் பாளையத்திற்கு அருகில் உள்ள சிவகெங்கை ஜமீன்தாரி பகுதிக்குப் புரட்சியின் போக்குப் பரவியுள்ளது. அந்த ஜமீன்தாரின் அமைச்சர்கள் இந்த மனப்பான்மையுடன் நடந்து வருகின்றனர். நமது கும்பெனியாருக்கு எதிராக திருநெல்வேலிச் சீமையில் புரட்சியைத் தூண்டி விட்டு, பாஞ்சாலங்குறிச்சிப் போரின் முடிவில் தறிப்பட்டு ஓடிவந்த அகதிகளுக்குப் புகலிடம் அளித்து, தளபதி அக்கினியூ தலைமையில் உள்ள கும்பெனி அணிகளுடன் பொருதுவதற்கு ஆயத்தம் செய்து வருகின்றனர்[26]** என்று குறிக்கப்பட்டுள்ளது எண்ணத்தக்கது.

இதனைத் தொடர்ந்து, அடுத்தகட்டமாகத் தளபதி அக்கினியூ தனது போரினைச் சிவகெங்கைச் சீமையில் தொடங்கினான். **முதலில் வடக்கேயுள்ள பிரான்மலை, திருப்பத்தூர்க் கோட்டை, அடுத்து அரண்மனைச் சிறுவயல், அப்புறம் காளையார் கோவில் கோட்டை**[27] எனத் தனது தாக்குதலைத் தொடங்கினான்.இந்தத் தாக்குதலில் முதலில் நின்றது பிரான்மலை எனவும் அங்கு கோட்டை இருந்ததெனவும் ஆங்கிலேயரின் இராணுவக்குறிப்புகளும் உறுதிப்படுத்துகின்றன.

## விடுதலைப் போராட்ட அரண் பிரான்மலை

ஆங்கிலேயர்களுக்கும் பாளையக்காரர்களுக்கும், குறிப்பாக மருதுபாண்டியர்கள், ஊமைத்துரை ஆகியவர்களுக்கு எதிராக, ஆங்கிலேயர் நடத்திய போர்களில் பிரான்மலை முக்கியத் தளமாகவே விளங்கியது.

வலுவான பெரிய கோட்டையிருந்ததனாலும் உயர்ந்த மலைப்பகுதியாக அமைந்திருந்ததனாலும் எதிரிகளை எதிர்த்துப் போரிடுவதற்குச் சரியான இடமாகப் பிரான்மலை விளங்கிற்று என்பதை ஆங்கிலேய அதிகாரிகளும் தங்களது பதிவுகளில் குறிப்பிட்டுள்ளனர்.

## கட்டபொம்மன் கைது செய்யப்பட்ட இடம் பிரான்மலைப் பகுதி

தமிழகத்தில் ஆங்கிலேய அரசினை எதிர்த்துப் போர்புரிந்த பாஞ் சாலக்குறிச்சிப் பாளையக்காரராகிய, கட்டபொம்மன், ஊமைத்துரை ஆகியோருக்கு அடைக்கலங்கொடுத்த பகுதி, இந்தப்பிரான்மலைப்பகுதியாகும். புதுக்கோட்டை மன்னர்களின் ஆளுகைக்குள்ளான இப்பகுதியில் உள்ள சிற்றூர் திருக்குளம்பூர். இது தற்போது, திருக்களம்பூர் என்று அழைக்கப்பெறுகிறது., இங்கு தலைமறைவாகத் தங்கியிருந்த தகவல் அறிந்து ஆங்கிலேய அரசு, கட்டபொம்மனைப் பிடித்துச் சென்றதாக வரலாறு குறிக்கிறது.

**புதுக்கோட்டை மன்னரிடம் அடைக்கலம் வேண்டி வந்த பாஞ் சாலங்குறிச்சிப் பாளையக்காரராகிய கட்டபொம்மன், பிரான்மலைக்கு மிக அருகிலுள்ள திருக்குளம்பூர் என்னும் கிராமத்திலேயே பிடிபட்டிருக்கிறார் என்பதும், அவர் பிரான்மலையிலிருந்து 5 கி.மீ. தொலைவில் உள்ள**

***சிங்கம்புணரி என்னும் நகரின் சேவுகப்பெருமாள் கோயில் மண்டபத் தூணில் கட்டி வைக்கப்பட்டிருந்தார்***[28] *என்றும் குறிப்புகள் உறுதிப்படுத்துகின்றன.*

*இதனை மேலும் உறுதிப்படுத்தும் விதமாக,*

***கட்டபொம்மு பாஞ்சாலங்குறிச்சியிலிருந்து தப்பி வந்த போது சிங்கம்புணரி அருகில்தான் பிடிபட்டார். புதுக்கோட்டையின் படைத் தளபதியாகிய 'திருக்குளம்பூர் சேர்வைக்காரர்' என்பவர்தான் பிடித்தவர். கும்பினியாரிடம் ஒப்படைக்கப்படும்போது சிங்கம்புணரியில் உள்ள சேவுகப்பெருமாள் கோயிலில் அவரைக் கனத்த சங்கிலிகளால் பிணைத்துத் தூணில் கட்டிவைத்திருந்தார்களாம். ஊர்மக்கள் அங்கு சென்று பார்த்தார்களாம். அடுத்தநாள் வண்டியில் வைத்துக்கொண்டு கும்பினியார் சென்றுவிட்டார்களாம். கட்டபொம்முவைத் தூக்கிலிட்டபின்னர், அவருடைய தம்பி ஊமைத்துரை பாளையங்கோட்டைச் சிறையிலிருந்து தப்பி சிவகங்கைச் சீமையில் அடைக்கலம் புகுந்தார்***[29] *என்கிறார் ஜெயபாரதி.*

*இதன்பின்னர், ஆங்கிலேயர்களின் கண்ணில் படாமல் தப்பிப்பதற்கு, கட்டபொம்மனின் தம்பியாகிய ஊமைத்துரைக்கு இடமளித்தது பிரான்மலை என்பதையும் வரலாறு மெய்ப்பிக்கிறது.*

## போராட்டக்காரர்கள் குழு

*ஆங்கிலேயருக்கு எதிராகத் தொடங்கப்பட்ட பெரும்புரட்சிப் போருக்கான அடித்தளமாகச் சிவகங்கைச் சீமை விளங்கிற்று. பாஞ் சாலங்குறிச்சிப் போரில் தோற்றிருந்த ஊமைத்துரையும் அவருடைய தோழர்களும் சிவகங்கைச் சீமையில் அடைக்கலம் புகுந்தனர். இதனை,*

***சிவகங்கைச் சீமைக்கான விடுதலைப்போர் மூளும் நேரம் பார்த்து ஊமைத்துரையும் அவன் தோழர்களும் மருதுபாண்டியர் நாட்டிற்கே வந்து சேர்ந்தார்கள். அவர்கள் உள்ளம் கொல்லன் உலை போலக் கொதித்துக் கொண்டிருந்தது. வெள்ளையர்களின் ஆதிக்கத்தை எதிர்க்கத் துணிந்த முப்பெரும் வீரரும் சிவகங்கைச் சீமையிலேயே சந்தித்தனர்***[30] *என்ற ந.சஞ் சீவியின் குறிப்பினால் உணரலாம்.*

ஊமையன் குடம்பு

தொடர்ந்து போரில் தோல்வியைத் தழுவிய ஊமைத்துரை ஆங்கிலேயரின் பிடியில் அகப்படாமல் தப்பவும், தலைமறைவு வாழ்க்கை மேற்கொள்ளப் பெரிதும் உதவியது பிரான்மலையேயாகும். இதனைப் பின்வரும் பதிவு உறுதிப்படுத்துகிறது.

***கட்டபொம்மன் சிறைப்பட்டவுடன், ஆங்கிலேய படைகளிடம் இருந்து தப்பித்த ஊமைத்துரை மருது பாண்டியர்களிடம் வந்து சேர்ந்தார். அவர்கள் ஊமைத்துரையை பிரான்மலையில் மனிதர்கள் சாதாரணமாக அடைய முடியாத குகையொன்றில் மறைத்து வைத்தனர். அந்த இடம் ஊமையன் குடம்பு என்று இன்றும் அழைக்கப்படுகிறது.***[31] இப்பகுதி இன்றும் இப்பகுதி மக்களால் அடையாளம் காட்டப்பெறுகிறது.

இது குறித்து சி.ஜெயபாரதி தரும் பதிவு இன்றியமையாததாகும்.

***1801-ஆம் ஆண்டில் சிவகங்கையின் ஆட்சியில் இருந்த மருது சேர்வைக்காரர்கள் போரிட்டபோது பிரான்மலை ஒரு முக்கிய இடம் வகித்தது. மலையின்மீது இருந்துகொண்டு போரை மருதிருவர் நடத்தினர். பிரான்மலையின் முகட்டின் தென்புறம் ஒரே செங்குத்தாக சுவர்போல பலநூற்றுக்கணக்கான அடிகள் எழும்பி நிற்கும். அதன் உச்சிக்குச் சற்றுக் கீழே விளிம்பின்மீது இரண்டடி அகலமே உள்ள பாறைப் பகுதி நீட்டிக்கொண்டிருக்கும். பாறையில் முதுகை ஒட்டிக்கொண்டு நகர்ந்து சென்றால் ஓர் ஆழமான செங்குத்தான மடு தோன்றும். ஆலம்விழுதைப் பிடித்துக்கொண்டே இறங்கவேண்டும். அந்த இடத்திற்குள் சில நூறு பேர் கொண்ட சிறிய படையை வைத்திருக்கமுடியும். மலை முகட்டின் மேல்விளிம்பில் இருக்கும் இடுக்கு ஒன்றில் சுனை ஒன்று இருக்கிறது. 'காசிச்சுனை' என்று பெயர். எப்போதும் குளுமையான தண்ணீர் இருக்கும். அந்த மடுவுக்குப் பெயர் 'ஊமையன் குடம்பு'. அங்கிருந்துகொண்டு மருதிருவரும் ஊமைத்துரையும் போரிட்டதால் அதனை ஊமையன் குடம்பு என்று பெயரிட்டுவிட்டனர். அதற்கு முன்னால் அதன் பெயர் என்ன என்பது தெரியாது. அதனை இவ்வாறு இன்னின்னார் பயன்படுத்தியதால்***

***அந்தச் சமயத்தில் வாழ்ந்த மக்கள் அப்படிப் பெயரிட்டுவிட்டனர்***[32] *என்று பிரான்மலை போர்க்கால அரணாக விளங்கியதைச் சுட்டிக்காட்டுகிறார்.*

## புதுக்கோட்டை மன்னரின் எதிர்ப்பு

*பிரான்மலைக்கு அருகில் அமைந்துள்ள மற்றொரு கோட்டை திருமயம் ஆகும். இக்கோட்டை புதுக்கோட்டை மன்னரின் ஆளுகைக்குட் பட்டிருந்ததும், ஆங்கிலப் படையின் மேலாதிக்கத்திற்கு உதவியதையும் குறித்துப் பதிவுகள் கிடைக்கின்றன.*

***சிவகங்கைப் பாளையத்தாரிடம் சுமார் இருபதாயிரம் வீரர்கள் கொண்ட மறவர் படை இருந்தது. ஈட்டி, வாள், வேல், வளரித் தடி, கதை போன்ற பழைய போர்க் கருவிகளோடு புதிய போர்க் கருவிகளான துப்பாக்கிகளும் வெடி மருந்தும் ஓரளவு இருந்தன. ஆனால், கம்பெனிப் பட்டாளத்திடமோ, பயங்கரப் பீரங்கிகள் மிகுந்திருந்தன. இந்நிலையிலும் துரோகச்சக்திகள் மட்டும் கம்பெனிப் பட்டாளத்திற்குத் துணை புரியாமல் இருந்திருந்தால், பிரிட்டிஷ் படைகளைக் கொன்று குழியிலிட்டிருப்பார்கள் தொண்டைமானது துரோகச் சிந்தனையை அறிந்த மருது பாண்டியர், தமிழகத்தின் மானத்தைக் காக்கும் பொருட்டு, தாய் நாட்டின் உரிமைக்காகத் தங்களோடு சேர்ந்து போரிடாவிடினும், பகைவர்க்குப் பயன்படாமல் நடுவு நிலைமையாவது ஏற்கும்படி அவனை மன்றாடி வேண்டினர். தொண்டைமானது பிடிவாதத்தைக் கண்ட மருதுபாண்டியர் அன்பால் முடியாததை அச்சத்தால் ஈடேற்ற முயன்றனர். தொண்டைமான் துரோகம் புரிந்தால், அவன் நாட்டிற்கும் நகர்க்கும் கோட்டைக்கும் களஞ்சியத்திற்கும் தீ வைப்பதாகப் பயமுறுத்தினர். பணியாதிருந்தான். ஆபத்துவரின் தன்னினும் பலம் பொருந்திய கம்பெனிப் படைகள் தன்னைக் காப்பாற்றும் என்ற நம்பிக்கை அவனுக்கிருந்தது. எல்லாவற்றிலும் விந்தையானது, வெள்ளை நாடோடிகள் பாளையக்காரர்களை முற்றிலும் முறியடித்து வெற்றி பெறும்வரை தன் திருமணத்தைக் கூடத் தள்ளி வைக்க அவன் உறுதி கொண்டதே. என்னே அவன் ஆண்மை? அதோடு புதுக்கோட்டையின் ஒரே படைத்தளமாயும் பலம் பொருந்திய கோட்டையாயும் இருந்த***

**திருமயத்தையும் பிரிட்டிஷ் துருப்புகட்கே ஒப்படைத்தான்**[33] என்கிறார் பேராசிரியர் ந.சஞ்சீவி.

பிரான்மலையில் போர்

இத்திருமயக் கோட்டை பிரான்மலையிலிருந்து சுமார் 40 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. பிரான்மலைக்கு வெகு அருகில் அன்னியப்படைக்கு இடம் கிடைத்தது சிவகங்கைச் சீமையின் பாதுகாப்புக்கு அச்சுறுத்தலாக அமைந்ததை இங்கு குறிப்பிட்டாக வேண்டும். இந்நிகழ்வு சிவகங்கைச் சீமைக்கும் ஆங்கிலேயருக்கும் எதிரான பலமான போருக்கு வித்திட்டது என்பதை உறுதி செய்து கொள்ளலாம்.

**கம்பெனி அதிகாரிகள், மருது பாண்டியர்களுக்கு எதிராக முதன்முதல் 1801ஆம் ஆண்டு, மே மாதம் 29ஆம் நாள் போர் தொடங்கினார்கள். பாஞ் சைக் கோட்டையைத் தகர்த்தெறிந்த வெற்றி வெறி கம்பெனிப்படையின் தலைக்கேற, ஐந்தே நாள்களில் மீண்டும் போர் தொடங்கப்பட்டது. அப்போர் அவர்கள் உயிரையும் உடைமையையும் வாட்டி வதைக்கும் கொடிய போர் ஆயிற்று. பாஞ்சைப் பதியைப் பிடிக்கப் போரிட்ட கம்பெனிப் படைகளில் ஒரு பகுதியை மட்டும் அங்கேயே நிறுத்தி வைத்து, அக்கோட்டையைத் தரை மட்டமாக்கி, அந்நிலப் பகுதி முழுதும் உப்பும் வரகும் வாரி இறைத்து உழும்படி கட்டளை பிறப்பித்தனர் கம்பெனித் தளபதிகள், தொடர்ந்து மேஜர் ஜெப்பர்டு என்பவன் தலைமையில் 26 மைல் தொலைவில் உள்ள நாகலாபுரத்திற்கு இராணுவ நடை போட்டனர்.**[34]

பிரான்மலைப் போருக்கான காரணம்

**1801 ஆம் ஆண்டு மே மாதம் 29 ஆம் நாள் கமுதிக்குள் நுழைந்தது. எதிர்பார்த்த வண்ணம் வீர மறவர்கள் கம்பெனிப் பட்டாளத்தை வாள்கொண்டு வரவேற்றார்கள். மூண்டது போர் கமுதியில் தொடங்கிய போர் 45 மைல் தொலைவில் உள்ள நாகலச் சேரியிலிருந்து திருப்பூவனத்திற்கு மாறியது. இங்கு நடந்த போரில் கம்பெனி வீரர் பலர் பலியிடப்பட்டனர். இதற்குப் பின் எட்டரை மைல் தொலைவில் உள்ள திருப்பாச்சேத்தி என்ற இடத்தில் நடந்த போரில் விடுதலைவீரர்கள் தங்கள் வஞ்சம் தீரக்**

**கம்பெனிப் பட்டாளத்தைக் கொன்று குவித்தார்கள். அன்றைக்கு நடந்த போரில் மட்டும் மேஜர் கிரே என்ற தளபதியும், 16 பேரும் எமனுலகம் சென்றனர் என்றும், லெப்டினன்டுகளான பிளாக்கர், கோல், பர்மின்டர், ஸ்டுவர்ட்டு என்ற நான்கு படைத் தளபதிகளும் முப்பத்தைந்து பேரும் படுகாயப்படுத்தப்பட்டனர்**[35] என்றும் வெள்ளைத் தளபதி வெல்ஷ் எழுதி வைத்துள்ள நாட்குறிப்புக் கூறுகிறது.

மருதுபாண்டியர்களுக்கு எதிராக ஆங்கிலேயர்கள் தொடங்கிய போர் பல இடங்களில் நீடித்தது எனினும் அவற்றின் மூலம் பிரான்மலையை அடிப்படையாகக் கொண்டே இயங்கியது என்பதைப் பதிவுகளின் வழி அறியலாம்.

போரினால் அழிந்த பிரான்மலைப் பகுதிகள்

**ஜுன் 22 ஆம் நாள் மீண்டும் கம்பெனிப் பட்டாளம் தமிழ் மறவர் படையை அடக்க மார் தட்டிப் புறப்பட்டது. பழமனேரி ஆற்றங்கரையில் அமைந்துள்ள பலம் பொருந்திய கமுதிக் கோட்டையில் ஆரம்பித்த கம்பெனிப் படைகளின் முகாம் சிறுவயல் வரை நீண்டு கொண்டே சென்றது. இந்த இடைக்காலத்தில்-எட்டு நாள்களில் கம்பெனிப் படைகள் கண்ட இழப்புப் பெரிது; இந்த எட்டு நாள் போரில் நாலாயிரம் பேர் வீர மறவர் தாக்கியும் தற்காத்தும் போர் புரிந்தனராம். கம்பெனிப் பட்டாளம், இவர்கள் படுத்தும் கொடுமை பொறாமல், நள்ளிரவில் ஒக்கூர் என்ற கிராமத்தையே தீயிலிட்டுச் சாம்பலாக்கியது. கிராமங்கட்கு எல்லாம் தீயிட்டுக் குடிமக்கட்குச் சொல்லொணாத் துன்பமும் அவமானமும் இழைத்து முன்னேறி வந்த கம்பெனிப் பட்டாளம், கடைசியாக மருது பாண்டியரின் தலைநகரான சிறுவயல் நகருக்குள்ளேயே நுழைந்தது. சிறுவயல் நகரத்தைத் தீக்கு இரையாக்கிவிட்டு வெளியேறிய வீரமறவர் சேனை, சிறுவயல் காட்டுக்குள்ளே சென்று, காளையார் கோவில் நோக்கிப் பறந்தது**[36] எனும் குறிப்பின் பின்னணியில் பிரான்மலை அமைந்திருப்பதை அறிய முடிகிறது.

பிரான்மலையில் ஆங்கிலேயப் படை

சிவகங்கைப் போரில் படுதோல்வியடைந்த ஆங்கிலேயப் படைக்குத்

துயரத்தைத் தீர்க்கும் வழியாகப் பிரான்மலையிலிருந்து வந்த வீரர்கள் விளங்கினர். நடுக்காட்டில் சிக்கி மாண்டு மறைந்த கம்பெனிப் பட்டாளத்தின் துயரத்தை உணர்த்தும் வெல்ஷ் துரை எழுதி வைத்திருக்கும் குறிப்புகள் இங்கு எண்ணத்தக்கவை:

**‘இன்று ஆகஸ்டு மாதம் 30 ஆம் நாள், காளையார் கோவிலுக்குச் சிறுவயலிலிருந்து பாதை போடும் முயற்சியைக் கைவிட்டு இந்த இடத்தை விட்டுக் கிளம்பி விடுவது என்ற முடிவிற்கு வந்தோம். இந்த முடிவைக் கேட்டு எல்லோரும் மகிழ்ச்சி அடைந்தனர். ஏனெனில், பெரும்பாலார்க்குச் சுடுகாடாயமைந்த இடத்தைவிட்டுக் கிளம்பிடுவது எங்கள் அனைவருக்கும் அளவற்ற மகிழ்ச்சி தந்தது அம்மகிழ்ச்சியில் ஒரு மாத காலம் நாங்கள் அரும்பாடு பட்டுச் செய்த வேலையைக் கை விடுவதால் ஏற்பட்ட அவமானத்தைக் கூட மறந்துவிட்டோம். எங்கள் பாசறை முழுவதும் வயிற்றுப்போக்காலும் குருதிப் போக்காலும் அல்லற்படும் நோயாளிகள் நிறைந்த கூட்டமாகிவிட்டது. உண்மையில் அக்கொடிய நோய்க்கு இரையாகி மடிந்த அதிகாரிகளும் வீரர்களும் எண்ணற்றவர்கள். உடல் நலத்துடன் எஞ்சி இருந்தவர்களும் கண்ணெதிரில் பச்சைப்பசேலென மலை போல எழுந்து நின்று உட்புக முடியாதவாறு தடுக்கும் அடர்ந்த காட்டின் நடுவில் செயலற்றுக் கிடப்பதால் உள்ளம் குன்றி, மனநோய் பிடித்துக் கிடந்தார்கள். எங்கள் எதிரிகளோ, நாங்கள் மணிக்கொரு முறை தாக்கியும்,எவ்வாறோ மாயமாய் மறைந்து, ஆனால் எங்களைச் சுற்றிச் சுற்றி வளைத்த வண்ணம் இருந்தார்கள். ஒரு மாத காலமாக நாங்கள் பாளையங் கோட்டைக்கு ஒரு கடிதங் கூட அனுப்ப முடியவில்லை. அவர்களுடைய எச்சரிக்கையான கண்காணிப்பினின்றும் தப்பிச் செல்ல எவ்வளவோ முயன்றும் பயன் இல்லை. அப்பகுதியின் ஒவ்வோர் அங்குலத்தையும் அங்கு வாழும் மக்களையும் நன்கறிந்து பணி செய்ய வலிய வந்த பாளையக்காரன் ஒருவனிடம் நானே ஐந்து வராகனையும் ஒரு சிறு கடிதத்தையும் கொடுத்து அனுப்பினேன். கடிதத்தைக் கொண்டு போய்க் கொடுத்ததும் இன்னோர் ஐந்து வராகனை அவனுக்குத் தருவது என்பது ஏற்பாடு. ஆனால், பின்னர் நான் அறிந்து கொண்ட வகையில் அவன் எவ்வளவோ எச்சரிக்கையாக இரவு**

**நேரம் பார்த்துப் புறப்பட்டுப் போன போதிலும், எங்கள் முகாமிலிருந்து சில மைல் கடப்பதற்கு முன்பே அவன் எங்கள் பகைவர்களால் கண்டு பிடிக்கப்பட்டுக் கொல்லப்பட்டான். இத்தகைய பயங்கரச் சூழ்நிலையில் 32 நாள்கள் அவதிப்பட்டுக் கம்பெனிப் பட்டாளம் குற்றுயிராய்க் கிடந்த நிலையில், அதற்குப் புத்துயிர் அளிப்பது போல இன்னொரு பட்டாளம் பிரான்மலைப் பக்கமிருந்து பேய்த்தனமாகத் தாக்கிக் கொண்டே முன்னேறி வந்தது. சாகக் கிடந்த கம்பெனிப்பட்டாளத்திற்கு இப்பேருதவி கிடைத்தது.**[37]

தொடர்ந்து போர் இடைவிடாது நடந்தது. திருமயம் கோட்டை-யிலிருந்து கொண்டுவரப்பட்ட படைக்கருவிகளைக் கொண்டு பலம் பொருந்திய தற்காப்பு ஏற்பாடுகளை கம்பெனிப்படை செய்து வைத்திருந்தது. இந்தத் திருமயம் கோட்டைக்கும் திருப்புத்தூர்க் கோட்டைக்கும் இடை-யில்தான் அமைந்துள்ளது பிரான்மலைக் கோட்டை.

இதற்கிடையில் கம்பெனிப் படையினர் மருதுசகோதரர்களை அடக்குவதற்கு வேறொரு வழியைக் கையாண்டனர். உடையணத் தேவர் என்பவரைச் சிவகங்கைச் சீமையின் அரசனாகப் பட்டம் சூட்டி விட்டனர். இதனால் மக்களிடம் ஒற்றுமை குலையும் என்று அவர்கள் கருதினர். ஆனால் போர் முன்னிலும் பலமாக நடக்கத் தொடங்கியது பிரான்மலையில்தான் என்பதை வரலாற்றுப் பதிவுகள் மெய்ப்பிக்கின்றன.

## பிரான்மலையில் நடந்த பெரும்போர்

மருதுபாண்டியர்களுக்கு முதலரணாகவும் விடுதலைப் போராட்ட வீரர்களின் கோட்டையாகவும் பிரான்மலை திகழ்ந்ததைக் கீழ்க்காணும் பதிவின் மூலம் உணர்ந்து கொள்ள முடிகிறது.

**கம்பெனிப் பட்டாளம் 17ஆம் நாள் புதிய ராஜாவின் பட்டாபிஷேகத்திற்குச் சரியாக ஐந்து நாள் கழித்து மேலூரை நோக்கிக் கிளம்பின. மேலூரை அடைவதற்குள் அவர்கள் பட்ட அல்லல் அளவிட்டுரைக்க முடியாதது. அச்சமயத்தில் ஆண்டவனது ஆசி என்று மக்களால் நம்பப்பட்ட பெருமழை பெய்து, எங்கும் சேறாய்க் கிடந்தது.**

**பீரங்கிகளையும் போர்த்தளவாடங்களையும் சுமந்து கொண்டு பலத்த மழையால் பாழ்பட்டுக் கிடந்த அப்பாதையைக் கடக்க முடியாமல், கம்பெனிப்படை திண்டாடித் திணறியது. கடைசியாகச் சிங்கம்பிடாரியைச் சேர்ந்தது. கம்பெனிப்படை அங்கிருந்து பிரான்மலையில் வீரமறவர்கள் தங்கியிருக்கும் செய்தி அறிந்து, அம்மலையைக் காட்டுத்தனமாகத் தாக்கியது வெள்ளைப்பட்டாளம். பிரான்மலை இறைவன் இருப்பதற்கு ஏற்பக் கோ-யிலாய் மட்டுமின்றி எண்ணற்ற வீரர்கள் தங்கிப் போர் புரிவதற்கு ஏற்ற பலம் நிறைந்த கோட்டையாயும் விளங்கியது. இம்மலையில் உச்சியிலிருந்து பார்த்தால், குன்றக்குடி, காளையார்கோவில், திருக்கோட்டியூர் என்னும் ஊர்கள் நன்றாகத் தெரியும். மேலும் ஆனைமலையும் அழகாகத் தோன்றும். பொதுவாக எந்த மனிதனாலும் ஏறிக் காண முடியாத உயர்ந்த உச்சியையும் பலம் பொருந்திய பாதுகாப்பையும் வலுவான கோட்டை மதில்களையும் பெற்றுள்ளதாகிய இப்பிரான்மலையில் முகாம் இட்டிருந்த மருதுபாண்டியரது படையை மோதியது கம்பெனிப்படை. ஆனால் ஏற்கெனவே தமக்கு எதிராக உருவாக்கப்பட்டு வரும் சதிகளாலும், மறவர் நாட்டு மக்கட்கு இடையே ஏற்பட்ட பிளவாலும் மனம் உடைந்து போன மருது பாண்டியர் ஊமைத்துரை சேனையால் கம்பெனிப் படைகளை எதிர்த்துத் தீவிரமாகப் போராட முடியவில்லை. இந்த நிலைமையைப் பயன்படுத்திக் கொண்டு கம்பெனிப் படைகள் பிரான்மலைக் கோவிலையும் கோட்டையையும் பிடித்துக் கொண்டனர். பிரான்மலையைப் போலவே காளையார் கோவிலும் கோவிலாய் மட்டும் அன்றிக் கோட்டையாயும் இருந்தது**[38] *என்பதன்மூலம் பிரான்மலையின் கோட்டை பலத்தையும் இயற்கைச் செழுமையையும் உணர்ந்து கொள்ள முடிகிறது.*

## பிரான்மலை சூழ்ந்த உறவுகள்

*இது தவிரவும் பிரான்மலைக் கோட்டையோடு தொடர்புடைய பிரான்மலையைச் சுற்றியுள்ள மருதுபாண்டியர்களின் நட்பு ஆளுமைகள் குறித்தும் பதிவுகள் காணக் கிடைக்கின்றன. இவர்கள் மூலமாகவே பிரான்மலைக் கோட்டை மருதுபாண்டியர்களின் காவல் நிலையமாகவும் விளங்கியதை அறியலாம்.*

***சிவகங்கைச் சீமையின் வடபகுதியில் அமைந்துள்ள திருப்பத்தூர்க் கோட்டையைப் பரங்கிகள் கைப்பற்றி தங்களது திருச்சிராப்பள்ளி, நத்தம், மதுரைப் பெருவழியின் நிலையான அங்கமாக அமைத்துக் கொண்டனர். அத்துடன் அந்தக் கோட்டைக்கும் அப்பால் உள்ள காவல் நிலையான பிரான்மலையையும் பிடிப்பதற்கான ஆயத்தங்களை மேற்கொண்டனர். வாராப்பூர், பாளையக்காரர்களது உதவி கிடைக்கவிடாமல் தடுப்பதற்குப் பிரான்மலை அரண் உதவும் என்பது அவர்கள் முடிவு. குறிப்பாக வாராப்பூர் பாளையக்காரரான பொம்மையாநாயக்கர் மருது சேர்வைகளுக்கு மிகவும் நெருங்கிய நண்பராக இருந்து வந்ததுடன் நத்தம் பிரான்மலைப் பகுதிகளில் கிளர்ச்சிக்காரர்களின் வெற்றிகரமான தாக்குதல்களை நடத்த உறுதுணையாக இருந்தார்***[39] *என்னும் சான்று பிரான்மலையைச் சுற்றிலுமிருந்த விடுதலைப் போராட்டக் குழுக்களைப் பற்றிக் குறிப்பிடுகிறது. மேலும் பொம்மையாநாயக்கர் சுதந்திர குணம் உடையவராகவும் விளங்கினார் என்பதை,*

***மருதுசேர்வைக்காரர்களது கிளர்ச்சியில் முக்கியப் பணியாற்றிய வாராப்பூர் பாளையக்காரர் பொம்மையநாயக்கரின் வாராப்பூர்ப் பாளையம், சிவகங்கைச் சீமையின் வடகிழக்கே, பிரான்மலையை ஒட்டி மதுரை, திண்டுக்கல் சீமைகளைத் தொட்டவாறு அமைந்து இருந்தது. இந்தப் பாளையம் முன்னர் இராமநாதபுரம் ரகுநாத சேதுபதி மன்னர் காலத்தில் மறவர் சீமையில் சேர்க்கப்பட்டு சேதுபதியின் பாளையமாக இருந்தது. சிவகங்கைச் சீமை பிரிந்த பிறகு, யாருக்கும் கட்டுப்படாத பாளையமாக இருந்தது***[40] *என்னும் குறிப்பினால் உணர்ந்து கொள்ளலாம்.*

*இந்த வாராப்பூர், பிரான்மலையின் மேற்குப் புறத்தே ஒரு சிற்றூராக அறியக்கிடக்கிறது. அங்கு இன்றளவும் சிதைந்த நிலையில் உள்ள வாராப்பூர் அரண்மனையைக் காணலாம்.*

## பிரான்மலையில் நிகழ்ந்த நிறைவுப் போர்

*பிரான்மலையின் இயற்கையமைப்பும், பிரான்மலைக் கோட்டையின் பலமும் ஒன்றாக இணைந்து மருதுபாண்டியர் உள்ளிட்ட கிளர்ச்சிக்காரர்*

களுடைய போராட்டத்திற்கு உதவி செய்தது என்றாலும், இப்போரில் தோல்வியுற்றுக் காரைக்குடிக்குத் தப்பிச் செல்ல நேரிட்டது.

***ஜுன் மாதம் 17ம் தேதி பிரான்மலை அருகே கும்பெனிப் படையை எதிர்ப்பதற்கு கிளர்ச்சிக்காரர்கள் முனைந்து இருந்தனர். பொம்மையநாயக்கரது ஆட்களும் கிளர்ச்சிக்காரர்களும் ஆக ஐந்நூறு பேர் ஆயுதபாணிகளாக தயார் நிலையில் நின்றனர். கர்னல் ஸ்டுவர்டு தலைமையிலான அணி பிரான்மலைக்கு மேற்கே இருந்து முன்னேறி வந்தது. அவர்களது குதிரை அணி இரண்டு பிரிவுகளாகப் பிரிந்து தொடர்ந்து வரும் தூசுப்படைக்கு உதவியாகச் சென்றன. மைசூர் போருக்குச் சென்று திரும்பிய கர்னல் இன்னி ஸீம் இந்தத் தாக்குதலில் கலந்து கொண்டான். கிளர்ச்சிக்காரர்களது ஆவேசத்தாக்குதலுக்கு முன்னர் ஒரு அடி கூட முன் செல்ல முடியாமல் தத்தளித்தனர். இறுதியில் நத்தத்திற்குப் பின் வாங்கி ஓடினர். மீண்டும் 4-7-1801ல் மற்றொரு தாக்குதலைப் பரங்கிகள் தொடுத்தனர். இந்த முறையும் மறவர்களது மரண அடியைத்தாங்கிக் கொள்ள இயலாமல் பரங்கிகள் உயிர்தப்பி ஓட்டம் பிடித்தனர். ஆனால் 18.9-1801ம் தேதி அன்று பரங்கிகள் மற்றொரு பெரிய தாக்குதலை பிரான்மலையில் மேற்கொண்டனர். இந்த முயற்சிக்கு புதுக்கோட்டைத் தொண்டமானது கூலிப்படைகள் கும்பெனியாரது ஏழாவது ரெஜிமெண்ட்டின் முதலாவது அணியுடன் சேர்ந்து உதவினர். இந்தப் போரில் முடிவு கும்பெனியாருக்கு சாதகமாக அமைந்து விட்டது. கிளர்ச்சிக்காரர்கள் காரைக்குடி பகுதிக்குப் பின்வாங்கினர்.[41]***

பிரான்மலைப் போரின் கொடுமை

இதே செய்தியை மேலும் விரிவாகக் கிளர்ச்சிக்காரர்கள் துப்பாக்கிப் படையும் பீரங்கித் தாக்குதலையும் ராக்கெட் தாக்குதலையும் பயன்படுத்தியதையும் பதிவுகள் சுட்டுகின்றன. மேலும் பிரான்மலையில் இயங்கிய ஆயுதச் சாலையையும் பற்றியும் குறிப்புகள் உள்ளன. மருதுபாண்டியர்களுக்கு பிரான்மலைத் தோல்வியே மிகப் பெரிய சரிவைக் கொடுத்தது என்று பதிவுகள் உறுதி கூறுகின்றன.

***17-8-1801இல் வெள்ளையர்களின் படை பிரான்மலையைப் பிடிக்கப் பல வகைளில் போராடியது. மருது பாண்டியர்களின் வீரர்கள் வேல், வில், வாள், துப்பாக்கிக் குண்டுகள், சிறிய ரக ராக்கெட்டுகள் பயன்படுத்தினார்கள். இருப்பின் இறுதியில் வழக்கம் போல் பாங்கியரின் கோரப் பசிக்கு பிரான்மலையும் வீழ்ந்தது. இன்றளவுகூட மருதுபாண்டியர் பயன்படுத்திய ஒரு பீரங்கி அங்குள்ளது. மருதுபாண்டியர் அவர்களின் ஆயுதச் சாலையை அங்குதான் மிகவும் சிறப்பாக செய்தார்களாம். பிரான்மலை போக உடனே அவர்களின் முழு பலமும் போய்விட்டதாக ஒரு உணர்வு.***

***1801-ம் வருடம் அக்டோபர் திங்கள். கடந்த ஏழு மாதங்களாக நடைபெற்று வரும் பரங்கியர் எதிர்ப்புப் போர் முடிவு நிலைக்கு வந்து கொண்டிருந்தது. எங்கு பார்த்தாலும் அந்நிய எதிர்ப்பு உணர்வு பொங்கிய வீர மறவர்களது எழுச்சி, போராட்டம், இரத்த வெள்ளம், பிணக்காடு, தெற்கே பள்ளிமடத்திலிருந்து வடக்கே பிரான்மலை வரையான பகுதி அனைத்தும் பரவலாக போர்கள் பல தொடர்ந்தன. என்றாலும், இறுதி வெற்றி பரங்கியர் பக்கமே இருந்தது"*** *எனும் குறிப்பு தென்னகத்தில் ஏற்பட்ட விடுதலைப் போராட்டம் பிரான்மலைப் போரோடு முடிவுக்கு வந்ததைத் தெளிவாக்குகிறது.*

டாக்டர் ஜெயபாரதியின் பதிவு

*இதே போரைப் பற்றியும் பிரான்மலை உச்சியில் கிடக்கும் பீரங்கியைப் பற்றியும் குறித்த சில புதிய செய்திகளை டாக்டர் ஜெயபாரதி பதிவு செய்திருக்கிறார்.*

***சின்ன மருது கைத்துப்பாக்கியெல்லாம் செருகி வைத்திருந்தார். அவருக்கு அதைச் சுடப் பழக்கியவர் கும்பினிப் படையின் கர்னல் வெல்ஷ். ஓர் அழகிய கைத்துப்பாக்கியையும் அன்பளிப்பாகக் கொடுத்திருக்கிறார்.***

***சிவகங்கைச் சீமை ஆசாமிகள் வெறும் வேலையும் வீச்சரிவாளையும் மட்டும் நம்பியிருக்கவில்லை. மைசூர் திப்பு சுல்த்தானிடமிருந்து வாங்கிய மிலிட்டரி ராக்கெட்டுகளைச் சிங்கம்புணரிக் காடுகளில் சின்னமருது***

***பயன்படுத்தியிருக்கிறார். உலகிலேயே முதல் தடவையாக மிலிட்டரி ராக்கெட்டுகள் அங்குதான் பயன்பட்டன.*** Military Archives-***இல் காணலாம்.***

***1801-இல் சிவகங்கைச்சீமை மருது சேர்வைக்காரர்கள், ஊமைத்துரை ஆகியோரால் பயன்படுத்தப்பட்ட மூன்று பீரங்கிகளில் ஒன்று. மேலூர், சிங்கம்புணரி, நத்தம் வழியாக வரும் இங்கிலீஷ் கும்பினிப் படைகளுக்காக இந்த இடத்தில் வைக்கப்பட்டிருந்தது.***

***1700 அடி உயரத்தில் இருந்து சுட்டால் குண்டு வெகு தூரம் போகும். பீரங்கி பெரிய பீரங்கிதான். இது கொஞ்சம் விசேஷமானது. ஓர் அச்சின் மீது 45 டிகிரி பக்கவாட்டில் சுழலும். மேலும் கீழுமாகவும் அதைக் குறிவைக்கமுடியும். சற்றுக் குறுகிய குழல் - மூன்று அங்குலம் என்பதாலும் நீளமான குழாயாக இருப்பதாலும் நீண்ட தூரம் மிகுந்த விசையுடன் குண்டு செல்லும். அதிகமாக அடிக்கடி வேகமாகப் பயன்படுத்தியதால் பின்பகுதி வெடித்துவிட்டது.***[43]

## பிரான்மலைப் போர் குறித்த கூடுதல் தகவல்கள்

*1801-ம் வருடம் அக்டோபர் திங்கள். கடந்த ஏழு மாதங்களாக நடைபெற்று வரும் பரங்கியர் எதிர்ப்பு போர் முடிவு நிலைக்கு வந்தது.* ***எங்கு பார்த்தாலும் அந்நிய எதிர்ப்பு உணர்வு பொங்கிய வீர மறவர்களது எழுச்சி, போராட்டம், இரத்த வெள்ளம், பிணக்காடு, தெற்கே பள்ளிமடத்திலிருந்து வடக்கே பிரான்மலை வரையான பகுதி அனைத்தும் பரவலாக போர்கள் பல தொடர்ந்தன. என்றாலும், இறுதி வெற்றி பரங்கியர் பக்கமே இருந்தது. மானம், வீரம் என்ற சொற்களுக்கும் உள்ள பொருளும் பயனும் துரோகம், கைக்கூலி என்ற சொற்களுக்கும் அமைந்திருந்தன. பரங்கியரை எதிர்த்துப் போரிட்ட வீரர்களிடையே சாதிப் பிரிவினையை புகுத்தி கும்பெனியார் அவர்களது ஐக்கியத்தைப் பலவீனப்படுத்தினர். முந்திய சிவகங்கை அரசப் பரம்பரையைச் சேர்ந்த படமாத்தூர் ஒய்யத் தேவருக்கு சோழபுரம் ஆலயத்தில் ஜமீன்தார் பட்டம் சூட்டப்பட்டு சிவகங்கையின் அதிகார பூர்வமான ஆட்சியாளராக பிரசித்தம் செய்யப்பட்டார். அதுவரை தோளொடு தோள் சேர்த்து கும்பெனியாருக்கு எதிராக போரிட்ட வீரர்கள்***

***இப்பொழுது சிவகங்கை ஜமீன்தார் பக்கமும், மருது சேர்வைக்காரர்கள் பக்கமும் பிரிந்து நின்றனர். தேவர், சேர்வைக்காரர் என்ற சாதி அடிப்படை-யிலான இரண்டு அணிகள் உருவாகியதால் பரங்கியர் எதிர்ப்பு அணி நிலைகுலைந்தது. மருது பாண்டியரும் அவர்தம் குடும்பத்தினர், தோழர்கள். உறவினர், குடிமக்கள் அனைவரும் போரில் களபலியாயினர்[44]*** *என்பதையும் பதிவுகள் சுட்டுகின்றன.*

*இவ்வாறு தென்னகத்தில் ஆங்கிலேய ஏகாதிபத்தியக் காலனி ஆதிக்கத்திற்கு எதிரான முதற்போரில் பறம்புமலையாகிய பிரான்மலை மிக முக்கியமான தளமாக விளங்கியிருப்பதையும், பிற்காலச் சிற்றரசுகளாகிய இராமநாதபுரம், சிவகங்கை, புதுக்கோட்டை சமஸ்தானங்களின் ஆளுகையின் கீழ் இது விளங்கியதையும் மேற்கண்ட பதிவுகளின்வழியாக அறிந்து கொள்ள முடிகிறது.*

## குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனமும் பிரான்மலையும்

*இந்திய விடுதலைக்குப் பிரான்மலை ஒருபுறம் ஆளாகியது போலவே, ஆன்ம விடுதலை நோக்கியும் அது நகர்ந்தது. சங்ககாலத்தின் சமயத் தொடர்பு இக்காலம் வரையிலும் பறம்புமலையாகிய பிரான்மலையில் தொடர்ந்து வருகிறது. அதன் ஒரு சான்றாகக் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்தின் தொடர்ச்சித் தோற்றம் இங்கு இடம் பெற்றது பதிவுக்குரியதாகும்.*

*திருக்கயிலாயப் பரம்பரையில் வந்த சுத்த சைவ ஆதீனங்கள் பதினெட்டு. அவற்றுள் தொன்மையான ஆதீனங்கள் சிலவற்றில் ஒன்று திருவண்ணாமலை ஆதீனமாகும்.*

*திருவண்ணாமலைத் திருத்தலத்தில் இற்றைக்கு 740 ஆண்டுகளுக்கு முன் திருவவதாரம் செய்தருளியவர் திருவருள்திரு தெய்வசிகாமணி தேசிக குருமூர்த்திகள். அவர் திருவண்ணாமலைப்பதியில் சைவநெறி வளர்க்க வேண்டி, திருவண்ணாமலை ஆதீனத்திருமடத்தை நிறுவினார்.*

*அந்த ஆதீனத்திருமடமே இக்காலத்தில் சிவகங்கை மாவட்டத்துக் குன்றக்குடியில் அமைந்துள்ளதாகும். இதன் முன்பு அது பிரான்மலை-யிலேயே இயங்கி வந்தது.*

***அருள்நந்தி தேவரின் அருமைச் சீடர்களுள் ஒருவராகிய தெய்வசிகாமணி தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் திருவண்ணாமலை ஆதீனக் குரு முதல்வர் ஆவார். இவர்தம் காலம் கி.பி. 1250-1325 ஆகும்.***[45]

*இவரைத் தொடர்ந்து திருவண்ணாமலை ஆதீனத்தில் ஆட்சி புரிந்தவர்கள்,*

*2.* ***திருவருள் திரு தாண்டவராய தேசிகர்*** I

***3. திருவருள் திரு வினைதீர்த்த தேசிகர்***

***4. திருவருள் திரு கனகசபாபதி தேசிகர்***

***5. திருவருள் திரு வேலப்ப தேசிகர்***

***6. திருவருள் திரு சுப்பிரமணிய தேசிகர்***

***7. திருவருள் திரு உருத்திரகோடி தேசிகர்***

***8. திருவருள் திரு சதாசிவ தேசிகர்***

***9. திருவருள் திரு கண்ணப்ப தேசிகர்***

***10.திருவருள் திரு மாசிலாமணி தேசிகர்***

***11.திருவருள் திரு சந்திரசேகர தேசிகர்***

***12.திருவருள் திரு குமரகுரு தேசிகர்***

***13.திருவருள் திரு அம்பலவாண தேசிகர்***

***14.திருவருள் திரு அருணகிரி தேசிகர்***

***15.திருவருள் திரு கந்தப்ப தேசிகர்***

***16,திருவருள் திரு சுவாமிநாத தேசிகர்***

***ஆகியோராவர்.***[46]

*இவர்கள் அனைவரும் திருவண்ணாமலைத் தலத்தில் இருந்து ஆதீனத்தை ஆட்சி செய்திருந்த வேளையில், 17ஆம் பட்டம் சுவாமிகளின் காலத்தில் நடந்த ஒரு சம்பவத்தால் இந்த ஆதீனம் பிரான்மலைக்கு இடம் பெயர்ந்தது வரலாற்றுப் பதிவாக விளங்குகிறது.*

17ஆம் பட்டம், நாகலிங்க தேசிக சுவாமிகள் (கி.பி.1680-1700)

*ஆதீனத்தின் 17ஆவது பட்டமாக எழுந்தருளிய நாகலிங்க தேசிகர், தென்னாட்டில் திருத்தல யாத்திரை மேற்கொண்டார். பல பதிகளில்*

தீர்த்தமாடிச் திருக்கோயில்கள் வலம் வந்து வழிபாடு செய்து மகிழ்ந்தார். ஆங்காங்கே அறிஞர்களும், சான்றோர்களும் மெய்யன்பர்களும் குருநாதரை வரவேற்றனர்; திருமுதுகுன்றம், சிதம்பரம், மயிலாடுதுறை, திருவாரூர், திருப்பெருந்துறை, திருவாடானை, காளையார்கோயில் முதலிய திருத்தலங்களை வழிபட்டுத் திருச்சுழியலுக்கு வந்து சேர்ந்தார்.

***இச்செய்தி கேட்ட இராமநாதபுரம் மன்னர் இரகுநாத சேதுபதி (கி.பி. 1675-1710) மகிழ்ச்சி கொண்டு திருவடிகளில் வீழ்ந்து வணங்கி இராமேசுவரத்திற்கு எழுந்தருள வேண்டும் என்ற குருமூர்த்திகளின் விருப்பத்தை உணர்ந்து உடனே அதற்கு ஆவன செய்தார். மன்னரும் ஏவலாளர்களும் புடைசூழ, குருமகாசந்நிதானம் இராமேசுவரம் சென்று, தீர்த்தமாடி இறை வழிபாடு செய்து திரும்பினார். இவ்வாறு திரும்பி வரும்வேளையில் மன்னர், இந்தச் சீமையிலேயே சுவாமிகள் தங்கி அருளாட்சி புரிய வேண்டும் என்று வேண்டினார்; பொன்னும் மணியும் காணிக்கையாகச் செலுத்தினார். மன்னரின் வேண்டுதலைக் குருநாதர் கருணையுடன் ஏற்று கி.பி. 1690 ஆம் ஆண்டளவில் பிரான்மலையில் காளத்திநாதரை எழுந்தருள்வித்து, அருளாட்சி புரியத் தொடங்கினார்கள்.***[47]

இவ்வாறு 17ஆம் பட்டம் காலத்திலிருந்து திருவண்ணாமலை ஆதீனம் பிரான்மலையில் தொடங்கி நடந்து வந்தது.

அதன் அருளாட்சியில் பிரான்மலையில் எழுந்தருளியிருந்த குருமூர்த்திகள் பெயர்கள் பின்வருமாறு:

***18. திருவருள் திரு குமரசாமி தேசிகர்***
***19. திருவருள் திரு திருச்சிற்றம்பல தேசிகர்*** I
***20. திருவருள் திரு சிதம்பரநாத தேசிகர்***
***21. திருவருள் திரு சிவக்கொழுந்து தேசிகர்***
***22. திருவருள் திரு நமச்சிவாய தேசிகர்***
***23. திருவருள் திரு அகத்தீசுவர தேசிகர்***
***24. திருவருள் திரு பொன்னம்பல தேசிகர்*** I
***25. திருவருள் திரு ஏகாம்பர தேசிகர்***

***26.* திருவருள் திரு வைத்தியநாத தேசிகர்**

***27.* திருவருள் திரு அண்ணாமலை தேசிகர்** I

***28.* திருவருள் திரு ஞானப்பிரகாச தேசிகர்**

***29.* திருவருள் திரு ஆறுமுக தேசிகர்** I

***30.* திருவருள் திரு திருச்சிற்றம்பல தேசிகர்** II[48]

*பிரான்மலையிலிருந்து அருளாட்சி புரிந்த குருமூர்த்திகள் பலர் மிகக் குறைவான காலமே இருந்தனர். அவர்கள் காலத்தில் பிரான்மலையில் ஆதீனத் திருமடம் வளர்ச்சி பெற்றது.* ***பிரான்மலை, (பிரான்மலை உட்கிடைக்கோயில் சதுர்வேதி மங்கலம்) திருப்புத்தூர், திருக்கோளக்குடி, குன்றக்குடி, தேனாச்சியம்மன் கோயில் ஆகிய ஐந்து கோயில்களுக்கும் பரம்பரை அறங்காவலர்களாக இருந்து அருளாட்சி புரிந்தனர். அன்று முதல் இன்றுவரை இந்த ஆதீனத்தின் குருமூர்த்திகள் தொடர்ந்து பிரான்மலை வகை ஐந்து கோயில்களின் பரம்பரை அறங்காவலர்களாக இருந்து அருளாட்சி செய்து வருகின்றனர்.***[49] *பிரான்மலையில் எழுந்தருளியிருந்த குருமூர்த்திகள் அனைவரும் அருளும் தவமும் அறமும் நிறைந்தவர்களாக விளங்கினர்.*

பிரான்மலையிலிருந்து குன்றக்குடிக்கு வருதல்

*28-ஆம் பட்டம் ஞானப் பிரகாச தேசிகர் அவர்கள் குன்றக்குடி அருள்தரு சண்முகநாதப் பெருமான் மீது மிகுந்த ஈடுபாடுள்ளவர்கள்.* ***இந்த ஈடுபாட்டின் காரணமாகவே 29-ஆம் பட்டம் குருமூர்த்திக்கு ஆறுமுகதேசிகரெனத் தீட்சாநாமம் சாத்தினார்கள். 28-ஆம் பட்டம் ஞானப்பிரகாச தேசிகர் அவர்கள் முதல் 30-ஆம் பட்டம் திருச்சிற்றம்பல தேசிகர் அவர்கள் வரை பிரான்மலையில் இருந்து கொண்டு அருளாட்சி புரிந்து வந்த போதிலும் அவர்கள் அனைவருக்கும் குன்றக்குடிப் பெருமான் மீது ஈடுபாடு மிகுந்து வரலாயிற்று. திருவருள் திரு மருதநாயக தேசிகர் காலம், சிவகங்கைச் சீமையையாண்ட மருது பாண்டியர் குன்றக்குடி அருள்மிகு சண்முகநாதன் திருக்கோயிலை இப்போதிருக்கும் பெரிய அளவில் திருப்பணி செய்து சாந்துப்புலவரைக் கொண்டு மயூரகிரிக்கோவையையும், (கி.பி. 1778) செய்வித்துத் தனிப்பெருமை சேர்த்திருந்த காலம். எனவே,***

***மருதநாயக தேசிக குருமூர்த்திகளால் பிரான்மலையிலிருந்த காளத்தியப்பர் குன்றக்குடித் திருமடத்துக்கு எழுந்தருள்விக்கப் பெற்றார்.***[50] அக்காலம் முதல் திருவண்ணாமலை ஆதீனமடாலயம் குன்றக்குடியில் திகழ்ந்து வருகிறது.

சங்கரலிங்க முனிவர் (கி.பி.1710-1780)

***மருது சகோதரர் (கி.பி. 1780-1801) காலம், குன்றக்குடி, ஆதீனத்தில் சங்கரலிங்க முனிவர் என்ற தம்பிரான் இருந்தார். சங்கரலிங்க முனிவருக்கு மருதுபாண்டியர் பாத காணிக்கையாக வைத்த-செம்பொற்காசுகளை ஏற்க மறுத்து, அதை வெள்ளையரோடு போராடப் பயன்படுத்திக் கொள்ளும்படி திருப்பித்தந்த பெருந்தகை அவர். ஆனால், மருது பாண்டியர் அந்தப் பொற்காசுகளைக் கொடுத்து ஒரு கிராமத்தை வாங்கி 'செம்பொன்மாறி' என்ற பெயர் வைத்து அறக்கட்டளை ஓலை எழுதி, குன்றக்குடி ஆதீனத்தின் குருமுதல்வராய் வருவோர் நலனுக்குரிய கட்டளைச்சொத்தாக அதை உரிமைப்படுத்தினர். சுதந்திரப்போராட்டத்துடன் தொடர்புகொண்டு அதை ஊக்குவித்த பெருமை குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத்துக்கும் உண்டு***[51] என்று தவத்திரு குன்றக்குடி அடிகளார் குறிப்பிடுகிறார். மேலும்,

***இப்பெரியார் பிரான்மலையில் ஆதீன அருளாட்சி இருந்த காலத்தில் குன்றக்குடியில் தங்கியிருந்த மாமுனிவர்; ஞானக்கடலாகத் திகழ்ந்தவர்; குன்றக்குடித் திருமடத்திலிருந்து பல மாணாக்கர்களுக்குத் தமிழ் அறிவையும் சிவஞானத்தையும் வாரி வழங்கியவர். மருது பாண்டியரின் அவைக்களப் புலவராகத் திகழ்ந்த 40 புலவர்களில் பலர் சங்கரலிங்க முனிவரின் அருமைச் சீடர்கள்***[52] என்ற கருத்தும் இங்கு கருதத்தக்கதாகும்.

இராமலிங்கத் தம்பிரான்

முன்னர்ச்சுட்டிய சங்கரலிங்க முனிவரைப்போலவே, குன்றக்குடி ஆதீனத்தில் குறிப்பிடத்தக்க ஒருவர், இராமலிங்கத் தம்பிரான் ஆவார். இப்பெரியார், திருமடத்தின் வளர்ச்சிக்காக அல்லும் பகலும் உழைத்தவர். ***பிரான்மலைப்பகுதியில் மாணிக்கவல்லி, அபிராமவல்லி, சுவர்ணவல்லி, அமிர்தவல்லி, மரகதவல்லி என்னும் ஐந்து தோப்புக்களை உண்டாக்கினார்.***

**அந்தத் தோப்புகள் ஆதீனத்திற்கு இப்போதும் நல்ல பலன் தந்து கொண்டிருக்கின்றன. இப்பெரியாரும் தமது சொந்தப்பொறுப்பில் வயல்கள் வாங்கி ஆதீனத்திற்கு விட்டுள்ளார். காசுமீர், நேபாளம் முதலிய பகுதிகளுக்கும் சென்று அங்குத் தேடிய பொருள்களைக் கொண்டு ஆதீனத்திற்குச் சொந்தமான திருக்கோளக்குடி, பள்ளபட்டி ஆகிய இடங்களில் கி.பி. 1898-இல் கட்டளை மடம் கட்டுவித்தார்.[54]**

## பிரான்மலைக் கோயிலுக்குத் திருப்பணி செய்த ஆதீனகர்த்தர்

*கி.பி.1928-1946ஆம் ஆண்டுக்கால அளவில், குன்றக்குடி ஆதீனத்தின் 43ஆம் பட்டமாக வீற்றிருந்த பொன்னம்பல தேசிக சுவாமிகள் சைவத் திருமுறைகளில் நன்கு திளைத்தவர். இவர்தம் அருளாட்சிக்காலத்தில், குன்றக்குடி அருள்தரு சண்முகநாதன் திருக்கோயிலுக்குத் திருக்குட நன்னீராட்டுவிழா நடத்தியதோடு, பிரான்மலை, திருக்கோளக்குடி, திருப்புத்தூர்த் திருக்கோயில்களுக்கு வெள்ளி ரிஷப வாகனம் செய்வித்திருக் கின்றார்.[53]*

## ஐந்து கோயில்கள்

*குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்துக்குச் சொந்தமான கோயில்கள் ஐந்தாகும். அவற்றுள் பிரான்மலையே முதன்மைத் தலமாகத் திகழ்கின்றது. பிரான்மலைவகை ஐந்து கோயில்களுக்கு வழிவழி (பரம்பரை) அறங்காவலராக, குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீன கர்த்தர்கள் இருந்து வருகிறார்கள். இந்த ஐந்து கோயில்களாவன:*

1. **அ. அருள்தரு மங்கைபாகர் திருக்கோயில்- பிரான்மலை**

   **ஆ. அருள்தரு திருக்கொடுங்குன்ற நாதர் திருக்கோயில் ஷை பிரான்மலை**

   **இ. மேற்படி உட்கடைக் கோயில் அருள்தரு உருத்திர கோடீசுவரர் திருக்கோயில்- சதுர்வேதி மங்கலம்**

2. **அருள்தரு திருத்தளிநாதர் திருக்கோயில், திருப்புத்தூர்**

3. **அருள்தரு சுகோளபுரீச்சுரர் திருக்கோயில், திருக்கோளக்குடி**

4. **அருள்தரு சண்முகநாதப் பெருமான் திருக்கோயில், குன்றக்குடி.**

5. **அருள்தரு தேனாச்சியம்மன் திருக்கோயில்**[55]

## பறம்புமலை - திருக்கொடுங்குன்றம் - பிரான்மலை மறுமலர்ச்சி

*குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்தின் 45ஆவது குருமகா சன்னிதானமாகத் திகழ்ந்தவர் திருவருள்திரு தெய்வசிகாமணி அருணாசலத் தேசிகப் பரமாச்சாரிய சுவாமிகள் என்னும் தவத்திரு குன்றக்குடி அடிகளார் ஆவார். இவர் பின்னாளில் அடிகளார் என்றே மக்களால் அன்போடு அழைக்கப்பெற்றவர். இவர் காலத்தில், இத்தலம் சங்ககாலம் மற்றும் சமயகால மறுமலர்ச்சிக்குரிய திருத்தலமாகப் பொலிவுபெற்றது குறிப்பிடத்தக்கது.*

## பாரி விழா

*சங்ககாலப் பறம்புமலையாகிய இன்றைய பிரான்மலையில் வள்ளல் பாரியின் புகழையும் சங்க இலக்கியச் சிறப்பையும் மக்கள் உணரும் வண்ணம் பாரிவிழா நிகழ்த்திச் சிறப்புச் சேர்த்தவர் அடிகளார் ஆவார்.*

## பாரிவிழாவின் நோக்கம்

*பாரியின் கொடைத்தன்மையை அவனது இடமாகிய பறம்புமலையிலேயே மக்களிடம் உணர்த்த வேண்டும் என்பதைக் கருத்தில் கொண்டு அதன் நோக்கத்தைப் புலப்படுத்தும் வண்ணமாக,*

**கனிந்தமனத் தருள்நெஞ்சே இறைவன் கோயில்**
**கனியாத கல்நெஞ்சம் நரக வாயில்**
**நனைந்தஅருள் வேள்பாரி வள்ளல் முல்லை**
**நடுங்குதுயர் நீக்கத்தன் தேரை யீந்தான்**
**வனைந்துவனைந் தவன்பெருமை பேசின் நெஞ்சம்**
***மாறாதோ? உலகந்தான் வாழ்ந்தி டாதோ?***

**நினைந்தெண்ணிப் பாரிவிழா எடுத்தோம்! அன்பு**
**நிறைக!உல கெல்லாம்பே, ரிரக்கம் வாழ்க![56]**

என்னும் பாடல் அமைந்துள்ளது. இப்பாடல் அடிகளார் பாடச் சொல்லிய வண்ணம் அவரது நேர்முக உதவியாளரும் ஆதீனக் கவிஞருமாகிய மரு.பரமகுரு 27.04.1969 அன்று பாடியதாகும்.[57]

## பாரிவிழா நடைபெறும் முறை

பிரான்மலைத் திருத்தலத்தில் ஆண்டுதோறும் பத்துநாட்கள் சித்திரைத் திருவிழா, சிறப்பாக நடைபெறுவது வழக்கம். அதில், ஐந்து, ஆறாம் நாட்களில் அடிகளார் பாரிவிழாவை நடத்தத் தொடங்கினார். 1953ஆம் ஆண்டு ஒருநாள் விழாவாகத் தொடங்கிய பாரிவிழா, அதற்கு அடுத்த ஆண்டுகளிலிருந்து, இரண்டுநாட்களாக விரிவு பெற்றது.

பாரிவிழாவின் முதல்நாள் காலை பாரியின் படிமம் தேரில் அமர்த்தப்பெறும். தாரை தப்பட்டைகள் முழங்க, வள்ளல் பாரி மலைவளம் காணச் செல்லுகிற நிகழ்வாக இது நடைபெறும்.

பின்னர் திரும்பிவரும் வழியில், அங்குள்ள ஔவை நுழைவு வாயிலில், பாரி முல்லைக்குத் தேர் நல்கும் காட்சி நிகழ்த்தப்பெறும். தொடர்ந்து, பாரி குடிமக்களுக்குப் படியரிசி வழங்குதல் நிகழ்வுறும். பின்னர், பாரியின் படிமம் கபிலர் அரங்கிற்கு அழைத்து வரப்பெறும். அங்கு பாரிவிழா, இருநாள் நிகழ்வாக, சங்கத் தமிழ்விழாவாகப் பொலிவு பெறும்.

சங்க இலக்கியப் பாடல் ஒன்று தேர்வு செய்யப்பெற்று, அதன் பொருள் அமைதிக்கு ஏற்ப, நான்கு அல்லது ஐந்து தொடர்களாகப் பிரிக்கப்பெறும். அந்தத் தொடர்களுக்குத் தகவுடைய தமிழறிஞர்கள் விளக்கவுரை வழங்குவார்கள். அகவையாலும் அறிவாலும் முதிர்ந்த பேரறிஞர் ஒருவர் இந்நிகழ்வுக்குத் தலைமையேற்பார்.

எடுத்துக்கொண்ட பாடலில் பொதிந்துள்ள இலக்கணம், வரலாறு, சமுதாயம் உள்ளிட்ட கூறுகள் விரிவாக விளக்கம்பெறும். பின்னர் தவத்திரு

அடிகளார் தலைமையில் சங்க இலக்கியப் பொருண்மையில் வழக்காடு மன்ற மற்றும் பட்டிமண்டப நிகழ்வுகள் பாங்குடன் அரங்கேறும்.

இரண்டாம் நிகழ்வின் நிறைவில், தவத்திரு அடிகளார், வள்ளல் பாரியின் இடத்தில் தக்கார் ஒருவரை அமர்த்தி, ஆடுநர் பாடுநர்க்குப் பரிசில் அளிக்கச் செய்து பழந்தமிழ் மரபை மீட்டுணர்த்திக் காட்டுவார். அந்தமரபில், **1953ஆம் ஆண்டு வள்ளல் அழகப்பரைப் பாரியாக அமர்த்திச் சிறப்பித்தார். அதன்பின் ஆண்டுதோறும் அவ்வழக்கம் தொடர்ந்தது.**[58]

இவ்விழாவின் நிறைவாக, பாராட்டுவிழா நடத்தப்பெறும். அதில் கவிஞர்கள், கலைஞர்கள் அவரவர் நிலைக்கேற்பப் பட்டங்கள் பெறுவர்.

**இவ்வாறு புலவர்- புரவலர்கள் போற்றப்பெற்றதோடு, இயற்கையைப் பேணுதல், மரங்கள் வளர்த்தல், மன்னுயிர் பேணுதல் என்னும் சீரிய சீலங்களை மக்களின் வாழ்வியல் நெறிகள் ஆக்கினார். மேலும் திருஞானசம்பந்தர் பாடிய இத்திருத்தலத்தில், திருஞானசம்பந்தர் ஞானப்பாலுண்ட வரலாறும் மக்களுக்கு நிகழ்த்திக் காட்டப்பெற்று வருகிறது.**[59]

அடிகளாரின் அருளாட்சிக்காலத்தில்...

தவத்திரு அடிகளாரின் அருளாட்சிக் காலத்தில், இத்திருக்கோயில் பல்வேறு பொலிவுகள் பெற்றன. 1956ஆம் ஆண்டில், இத்திருக்கோயிலுக்கு மின்வசதிகள் செய்வித்த அடிகளார், 1954, 1957ஆம் ஆண்டுகளில் இத்திருக்கோயிலைப் புதுப்பித்து, 1957ஆம் ஆண்டு திருக்குட நீராட்டினைச் சிறப்புறச் செய்வித்தார். பின்னர், 30 ஆண்டுகள் கழித்து மீண்டும் திருப்பணிகள் செய்து, 20.04.1992ஆம் ஆண்டு, தமது அருளாட்சிக் காலத்தில் இரண்டாம் முறையாகத் திருக்குட நீராட்டுவிழாவினை நிகழ்த்தினார். இக்காலக் கட்டத்தில் அருள்தரு மங்கைபாகர் திருக்கோயிலின் இராசகோபுரம் எடுப்பிக்கப்பெற்றதும் குறிப்பிடத்தக்கதாகும். திருஞானசம்பந்தரின் பாடல் பெற்ற திருத்தலத்தனம் என்பதை நினைவுகூரும் வண்ணம் அவரருளிச் செய்த தேவாரத் திருப்பதிகப் பாடல்களைக் கல்வெட்டாக அமைத்துச் சிறப்பித்துள்ளார் அடிகள் பெருமான்.

*தவத்திரு அடிகள்பெருமானுக்குப் பின்னர் 46ஆவது பட்டமாகப் பொறுப்பேற்றுள்ளவர் தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் ஆவார். முந்தைய மரபை அடியொற்றி, பாரிவிழாவைச் சீருற நடத்திய பெருமை இவருக்கு உண்டு.*

*1998ஆம் ஆண்டு, மு.தமிழ்க்குடிமகன், முனைவர் நா.பாலுசாமி, எழுத்தாளர் பொன்னீலன் ஆகியோர் சிறப்பிக்கப்பெற்றனர். இவர்களுக்கு முறையே, நூலறிபுலவர், பெரும்புலவர், எழுத்துவேந்தர் என்னும் பட்டங்கள் வழங்கப்பெற்றன. இத்தலத்தில் அரங்கேறிய பாரிவிழாவில் தொடர்ந்து சிறப்புப் பெற்ற தமிழறிஞர்களின் பெயர்கள் அவர்கள் பெற்ற பட்டங்கள், கால வரிசையில் சுட்டிக் காட்டும் பட்டியல் பின்னிணைப்பில் இணைக்கப்பெற்றுள்ளது. (காண்க- பின்னிணைப்பு)*

*தவத்திரு பொன்னம்பல அடிகளார், குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத் திருக்கோயில்களுக்குத் திருப்பணிகள் பல செய்து திருக்குட நீராட்டுவிழாக்களைத் தொடர்ந்து நிகழ்த்திவருகிறார். அந்த வரிசையில், தற்போது பிரான்மலைத் திருக்கோயில் திருப்பணிகளையும் சிறப்புறச் செய்துவருகிறார். விரைவில் திருக்குட நீராட்டுவிழாவும் பாரிவிழாவும் இங்கு நிகழவுள்ளது குறிப்பிடத்தக்கது.*

## தொகுப்புரை

*பக்தி இலக்கிய காலத்திற்குப் பின்னர் பாண்டிய நாட்டின் எல்லைப் பகுதியாக விளங்கிய பிரான்மலை பல சிற்றரசுகளின் ஆளுகைக்குட்பட்டதும், சிவகங்கை மற்றும் புதுக்கோட்டை சமஸ்தானங்களின் எல்லைப் பகுதியாகவும் விளங்கியதைச் சான்றுகளின் மூலம் உணர முடிகிறது.*

*சிவகங்கை மன்னர்கள் பிரான்மலைத் திருக்கோயிலுக்குச் செய்த அறப்பணிகளும் அளித்த கொடைகளும் குறித்த சான்றுகளையும் காணமுடிகிறது. பிரான்மலையின் வாழ்ந்திருந்த புலவர்களைக் குறித்தும் அவர்களின் இலக்கியப் பதிவுகள் குறித்தும் அறிந்து கொள்ள முடிகிறது.*

ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் கம்பெனியின் காலனி ஆதிக்கத்திற்கு எதிரான இந்திய விடுதலைப் போர் தென்னிந்தியாவிலேயே முதலில் தோன்றியது என்பதையும், அப்போருக்கான களமாகப் பறம்புமலையாகிய பிரான்மலை விளங்கியதையும் இவ்வியல் எடுத்துரைக்கிறது.

கோட்டை, கொத்தளங்களோடு ஆயுதச் சாலையும் கூடிய பேரரணாக இம்மலை விளங்கியது என்பதும் சான்றுகள் வழி நிறுவப்பட்டுள்ளது. மேலும் ஆங்கிலேயப் படைத்தளபதிகளின் இராணுவக் குறிப்புகளும் இதனை உறுதிப்படுத்துகின்றன.

திருநெல்வேலிப் பகுதியாகிய பாஞ்சாலக்குறிச்சியிலிருந்து தப்பிய வீரபாண்டியக் கட்டபொம்மனுக்கும், அவருடைய தம்பி ஊமைத்துரைக்கும் அடைக்கலம் தந்ததோடு புரட்சிக்குழுக்கள் பலவற்றுக்கும் உரிய இடமாகவும் பிரான்மலை விளங்கியது என்பதை இவ்இயலின் வழி அறிந்து கொள்ள முடிகிறது.

வீரபாண்டியக் கட்டபொம்மன் ஆங்கிலேயரின் பிடியில் சிக்கியது பிரான்மலைக்கு அருகில் உள்ள திருக்களம்பூர்தான் என்பதும், அதிலிருந்து தப்பித்த ஊமைத்துரைப் பல நாட்கள் மறைந்திருந்தது பிரான்மலையில் உள்ள இரகசியமான குடம்பாகிய குகைதான் என்பதும் சான்றுகள் மூலம் உறுதிப்படுத்தப்படுகிறது.

பிரான்மலையில் தோன்றிய குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்தின் வரலாறும், அதன் வளர்ச்சிப் பணிகளும், ஆதீன அருளாளர்கள் ஆற்றிய பணிகளும் இவ்வியலில் எடுத்து மொழியப் பெற்றுள்ளன.

வள்ளல் பாரியின் நினைவாக ஆண்டுதோறும் நிகழ்த்தப் பெறும் பாரிவிழா குறித்த செய்திகளும் விழாமுறைமையும் சுட்டப்பெற்றுள்ளன.

# இயல் மூன்று : சான்றெண் விளக்கம்

1. கமால், எஸ்.எம், இராமநாதபுரம் மாவட்டம் வரலாற்றுக் குறிப்புகள், ப.2
2. கமால், எஸ்.எம், டாக்டர், சீர்மிகு சிவகங்கைச் சீமை, பக்.18-19
3. கமால், எஸ்.எம், இராமநாதபுரம் மாவட்ட வரலாற்றுக் குறிப்புகள், ப.9
4. கமால், எஸ்.எம், டாக்டர், சீர்மிகு சிவகங்கைச்சீமை, பக்.5-6
5. கமால், எஸ்.எம், இராமநாதபுரம் மாவட்ட வரலாற்றுக் குறிப்புகள், ப. 52
6. கமால், எஸ்.எம், டாக்டர், சீர்மிகு சிவகங்கைச்சீமை, பக்.14
7. மேலது, ப.14-16
8. மேலது, ப.19
9. https://ta.wikipedia.org/wiki/சிவகங்கைச்சீமை
10. கமால், எஸ்.எம், டாக்டர், சீர்மிகு சிவகங்கைச் சீமை, பக்.12-13.
11. மேலது, பக்.113-114
12. ராஜா முகமது, ஜெ. டாக்டர், புதுக்கோட்டை மாவட்ட வரலாறு, ப.120
13. கமால் எஸ்.எம்., சேதுபதி மன்னர் கல்வெட்டு கல்வெட்டுக்கள், ப.8,
14. கமால் எஸ்.எம்., டாக்டர், சீர்மிகு சிவகங்கைச் சீமை, ப.104
15. மேலது, (மே.கோ.) (182. Tamil Nadu Estates (Abolition and Conversion into Ryotwari Scttle-mcnt Act. 1948) 183. Madura Dist. Rccords, Vol. 1146/1.9.1803. P:34 184. Madura Dist. Records. Vol. I 178(A)/17, 5, 1802, P: 354), ***ப.165.***
16. மேலது, (மே.கோ.) Madura Dist, Records Vol. 1178 (A) 17.5.1802, P: 354 186. ***ப.166.***
17. கமால் எஸ்.எம். டாக்டர், சீர்மிகு சிவகங்கைச் சீமை, ப.185
18. மேலது, ப.187.
19. குழந்தைக் கவிராயர், மான்விடுதூது, (உ.வே.சா.பதிப்பு) ப.12

20. கமால் எஸ்.எம். டாக்டர், சீர்மிகு சிவகங்கைச் சீமை, ப.81

21. குழந்தைக் கவிராயர், மான்விடுதூது, உ.வே.சா. பதிப்புரை.

22. கமால், எஸ்.எம்.டாக்டர், சீர்மிகு சிவகங்கைச் சீமை, பக். 296 - 298

23. சஞ்சீவி, ந. பேராசிரியர்., மானம் காத்த மருதுபாண்டியர், ப. 26

24. கந்தசாமி, வி., எம்.ஏ.எம்.எட்., தமிழ்நாட்டின் தல வரலாறுகளும் பண்பாட்டுச் சின்னங்களும், ப. 257

25. http://pasumponkural.com/index.php?option=com_content&view=article&id=5:2012-03-03-11-30-22&catid=2:articleimages

26. கமால், எஸ்.எம், மறவர் சீமையின் மாவீரன் மயிலப்பன், (மே.கோ.)(Military consultation's 1801) ப.110.

27. மேலது. (மே.கோ.) (Military consultation's 1801) ப.111.

28. https://theekkathir.in/2013/05/04/பிரான்மலை_பறம்புமலை

29. https://groups.yahoo.com/neo/groups/agathiyar/conversations/messages/39986

30. சஞ்சீவி, ந. பேராசிரியர்., மானங்காத்த மருதுபாண்டியர், ப.39

31. https://theekkathir.in/2013/05/04/பிரான்மலை பறம்புமலை

32. https://groups.yahoo.com/neo/groups/agathiyar/conversations/messages/399

33. சஞ்சீவி, ந. பேராசிரியர்., மானம் காத்த மருதுபாண்டியர், பக். 40-41

34. மேலது, ப.41.

35. மேலது, ப.42.

36. மேலது, பக்.42-45

37. மேலது, பக்.47-48

38. மேலது, பக். 52-53

39. கமால், எஸ்.எம்., மாவீரர் மருதுபாண்டியர், ப.100

40. மேலது, ப.162.

41. மேலது, ப.101

42. கமால், எஸ்.எம்., மாவீரர் மருதுபாண்டியர், (மே.கோ.) (1. Military consultations, Vol. 285 A. 6-7–1801, p. 4875 Revenue consultations, Vol. 110, 24-7-1801, p. 1361-69.) ப. 126.

43. http://kadaramnet.blogspot.in/2014/02/piranmalai-cannon.html

44. https://groups.yahoo.com/neo/groups/agathiyar/conversations/messages/39986

45. பரமகுரு, மரு., குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீன வரலாறு, ப. 10

46. மேலது, பக்.11-12

47. மேலது, ப.13.

48. மேலது, பக்.13-14.

49. மேலது, ப.14.

50. மேலது, பக்.14-15.

51. பொன்னம்பல அடிகளார் (ப.ஆ.) குன்றக்குடி அடிகளார் நூல் வரிசை, தொகுதி 16, ப.150.

52. பரமகுரு, மரு., குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீன வரலாறு, ப. 25

53. மேலது, பக். 20-21

54. மேலது, பக்.32-33

55. மேலது, பக். 46-47

56. மக்கள் சிந்தனை, ஏப்ரல் 1997, ப.23,

57. மேலது.

58. சுந்தர்.பா.முனைவர், குன்றக்குடி அடிகளார் பணிகள், ப.330.

59. கிருங்கை சேதுபதி, இந்திய இலக்கியச் சிற்பிகள்- குன்றக்குடி அடிகளார், பக்.46-47.

## இயல் நான்கு

# தற்காலத்தில் பறம்புமலை

தற்காலத்தில் பிரான்மலை என வழங்கப்படும் பறம்புமலை இன்றைய சிவகங்கை மாவட்டம் திருப்புத்தூர் வட்டம், சிங்கம்புணரி ஒன்றியம் ஆளுகைக்குட்பட்ட கிராமப் பஞ்சாயத்தாக விளங்குகிறது.

மதுரையிலிருந்து பொன்னமராவதி செல்லும் பேருந்து வழித்தடத்தில் சிங்கம்புணரியிலிருந்து ஐந்து மைல் தொலைவில் அமைந்துள்ளது. கொட்டாம்பட்டியிலிருந்து பள்ளபட்டி வழியாகப் பொன்னமராவதி செல்லும் ஒரு சாலையும் பிரான்மலையைத் தொட்டுச் செல்கிறது.

பிரான்மலை சிவகங்கை மாவட்டச் சுற்றுலாத்தலங்களுள் ஒன்றாகவும் ஆன்மிக அன்பர்கள் போற்றும் சிவத்தலமாகவும் உள்ளது. இன்றும் இயற்கை வளம் நிறைந்து விளங்குகிறது இம்மலை.

தொடர்ந்து பிரான்மலை இன்றுவரை இலக்கியப் பதிவுகளில் இடம்பெற்று வருவதும் குறிப்பிடத்தக்கது.

குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம் பிரான்மலையிலிருந்து குன்றக்குடிக்குச் சென்றுவிட்டது என்றாலும், அம்மடத்தின் கிளை அலுவலகம் இங்கு இயங்கி வருகிறது.

மலையடிவாரத்தில் திருக்கோயிலை ஒட்டிய திருமடத்தின் இடத்திலேயே வள்ளல்பாரி மேல்நிலைப்பள்ளி அமைந்துள்ளது. பிரான்மலையைச் சுற்றியுள்ள பல கிராமத்துப் பிள்ளைகள் இப்பள்ளியால் பயன் பெறுகிறார்கள்.

பிரான்மலை, திருப்பத்தூர் சட்டமன்றத் தொகுதிக்கும் சிவகங்கை மக்களவைத் தொகுதிக்கும் உட்பட்டதாகும். இது, மொத்தம் ஏழு ஊராட்சி மன்றத் தொகுதிகளைக் கொண்டுள்ளது. இவற்றில் இருந்து ஏழு ஊராட்சி மன்ற உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கின்றனர். 2011ஆம் ஆண்டு இந்திய

மக்கள் தொகை கணக்கெடுப்பின்படி, மொத்த மக்கள் தொகை 4246 ஆகும். இவர்களில் பெண்கள் 2168 பேரும் ஆண்கள் 2078 பேரும் உள்ளனர்.

பிரான்மலை ஊராட்சியில் அமைந்துள்ள சிற்றூர்களின் பட்டியல்

- **அ.புதுப்பட்டி**
- **கோபாலச்சேரி**
- **ஐநூத்திப்பட்டி**
- **மதகுபட்டி**
- **பாப்பாபட்டி**
- **தேனம்மாள்பட்டி**
- **இ.புதுப்பட்டி**
- **பிரான்மலை**
- **அடியார்குளம்**
- **காலாடிச்சேரி (காந்திநகர்)**[1]

பிரான்மலையில் உள்ள அடர்ந்த வனப்பகுதி தமிழக வனத்துறையின் பராமரிப்பில் இயங்கி வருகிறது.

பிரான்மலையில் தற்போது முதற்றொழிலாக விளங்குவது வேளாண்மையாகும். சுற்றுலாப்பயணிகளின் வருகையும் இருப்பதால் வருமானம் உடையதாக விளங்குகிறது.

பேருந்து நிறுத்தத்திலிருந்து கிழக்குப் புறமாகச் செல்லும் தார்ச்சாலையில் ஒரு மைல் தொலைவில் மலையடிவாரத்தில் உச்சிக்குச் செல்லும் நுழைவாயில் அமைந்துள்ளது. மலைப்பகுதியில் படிக்கட்டுகள் அமைந்துள்ளன எனினும், சில இடங்களில் பாறைகளையும் கடந்து செல்ல வேண்டியிருக்கும்.

மலையுச்சியில் இருக்கும் பாலமுருகன் சுவாமி ஆலயம், சிலை ஏதும் இன்றி வேல் வழிபாடு உடையதாக விளங்குகிறது. அருகில் கல்மண்டபத்தோடு கூடிய விநாயகர் ஆலயம் ஒன்று உள்ளது.

அதனருகில் இசுலாமியர்களின் வழிபாட்டுத்தலமான தர்கா ஒன்றும் உள்ளது. இதற்கு ஷேக் அப்துல்லா அவுலியா தர்கா என்று பெயர். பிரான்மலை ஆண்டவர் என்னும் பெயரில் இத்தர்காவில் அடங்கியுள்ள பெரியவர் அழைக்கப்படுகிறார். இவருக்குப் பாத்தியா என்னும் வழிபாட்டு முறையில் அனைத்துச் சமயத்தவரும் வணக்கம் செலுத்துகின்றனர். இதனை,

**பிரான்மலையின் உச்சி முகட்டில் ஒரு ப்லேட்ஃபார்ம் மாதிரியான பாறை இருக்கிறது. அந்த பாறையில் ஒரு சமாதி இருக்கிறது. அதில் அடங்கி-யிருப்பவர் ஷேய்க் அப்துல்லா சாஹேப் என்பவர். இவரை பிரான்மலை ஆண்டவர் என்றும் அழைப்பார்கள். மற்ற தர்காக்களுக்கு ஷில்ஷிலா என்னும் வரலாறு எழுதப்பட்டிருக்கும். ஆனால் பிரான்மலை ஆண்டவருக்கு ஷில்ஷிலா கிடையாது. முன்பொரு காலத்தில் இருந்து மறைந்துவிட்டதா என்பது தெரியவில்லை. கெந்தூரி கொடுத்து ஃபாத்தெஹா ஓதுவது அங்கு வழக்கம். அங்கு வந்து வழிபாடு செய்பவர்களில் இந்துக்கள் பெரும் எண்ணிக்கையுடையவர்கள்**[2] என்னும் பதிவின்மூலம் அறிந்து கொள்ளலாம்.

அருகிலேயே மூன்று சுனைகள் அமைந்துள்ளன. அவற்றில் என்றும் வற்றாமல் சுவையான நீர் நிறைந்திருக்கும். அங்கிருந்து மலைச்சரிவில் இறங்கினால் ஊமையன் குடம்பு என்று அழைக்கப்பட்ட ஊமைத்துரை தங்கியிருந்த மறைவிடத்திற்குச் செல்ல முடியும்.

இந்த இடத்திற்குச் செல்வதற்கு இரும்பால் ஆகிய கனத்த ஏணி ஒன்று அமைக்கப்பட்டிருந்தது. இப்போது இது இற்றுப்போய் விழுந்துவிட்டது. ஆலமரத்தின் விழுது ஒன்றைப் பிடித்துக் கொண்டுதான் அந்த இடத்திற்குச் செல்ல முடியும்.

இதற்கு அருகில் மசூதிக்கு வருபவர்கள் கந்தூரி நடத்தும் மண்டபம் ஒன்றும் உள்ளது. தமிழகத்தின் பல ஊர்களிலிருந்தும் நேர்ந்து கொண்டு வரும் பக்தர்கள் இந்த மண்டபத்தில் விருந்து வழங்கித் தங்களின் நேர்த்திக்கடனைச் செலுத்துகின்றனர். முடி காணிக்கை செலுத்தும் வழக்கமும் இன்றும் தொடர்ந்து வருகிறது.

தற்கால இலக்கியங்களில் பறம்பு

*மகாகவி பாரதியார் பாரியைப் புகழ்ந்து பாடியிருக்கிறார். எட்டயபுரம் மன்னருக்கு அவர் எழுதிய சீட்டுக்கவியின் தொடக்கத்திலேயே தமிழ்நாட்டின் பெருமையைக் குறிக்கும் வண்ணமாக, பாரியின் கொடையுள்ளத்தை அவர் பாடியுள்ளார்.*

**பாரிவாழ்ந் திருந்த சீர்த்திப்**
**பழந்தமிழ் நாட்டின் கண்ணே**[3]

*என்று அப்பாடல் தொடங்குகிறது.*

*கி.பி. 1936இல் 'பறம்புநாடும் பாரி மகளிரும்' என்னும் தலைப்பில் உரைநடைக்காவியமாக ஒரு நூலை பண்டிதை கிருஷ்ணவேணியம்மாள் என்பவர் இயற்றியுள்ளார். இவர் அந்நாளைய சென்னை லேடி வில்லிங்ஸ்டன் டிரெயினிங் காலேஜ் மூத்த பண்டிதராகப் பணியாற்றியிருந்திருக்கிறார். இந்நூல், பாரியின் வாழ்வைப்பற்றியும் பறம்புநாட்டைப் பற்றியும் இலக்கியச் சான்றுகளைக்கொண்டு கட்டமைக்கப்பட்டிருக்கிறது.* **இந்நூலும் பறம்பு நாடென்பது பாண்டிய நாட்டில் உள்ளது என்பதை மெய்ப்பிக்கிறது.**[4]

*1936இல் வேங்கடராஜுலு கபிலரின் வாழ்வையும் பாடல்களையும் சீரிய முறையில் ஆய்வு செய்து 'கபிலர்' என்னும் நூலை எழுதியுள்ளார். ஆய்வுநோக்கில் அமைந்த இந்நூல் கபிலருடைய வாழ்க்கை வரலாற்றையும், அவருடைய பாடல்களுக்கான தெளிந்த விளக்கங்களையும் வழங்குவதாக அமைந்துள்ளது. இந்நூலில் பறம்புமலை குறித்த தகவல்கள் குறைவு.*

*1937இல் ரா.இராகவையங்கார், 'பாரிகாதை' என்னும் நூலை இயற்றியுள்ளார். இந்நூலில்,* **இது வேள்பாரியின் நாடும், மலையுஞ், சுனையும் வளஞ்செய்தலைப் பண்டையோர் கண்டவாற்றொடு பொருந்தச் சிறப்பித்துப் பாடியதாகும்**[5] *என விளக்கம் தந்துள்ளார்.*

*கி.வா.ஜகந்நாதன் 1954இல், பாரியின் பறம்புவாழ்வை விளக்கும் 'பாரிவேள்' என்னும் நூலை எழுதியுள்ளார்.* **ஏழுவள்ளல்களிலும் தலைசிறந்தவன் பாரிவேள். இன்று பிரான்மலை என்று வழங்கும்**

**பறம்புமலையில் வாழ்ந்தவன். புலவர் பெருமக்களிற் சிறந்த கபிலரும் பாரியும் ஆருயிர் நண்பர்கள். கபிலருடைய பாட்டுகளால்தான் பாரி இன்றும் வாழ்கிறான். அவனுடைய வரலாற்றைத் தெரிந்துகொள்ள புறநானூற்றிலுள்ள பல பாடல்களும் சில தனிப்பாடல்களும் உதவியாக இருந்திருக்கின்றன. இந்தப் புத்தகத்தில் உள்ள வரலாறு பெரும்பாலும் சங்கநூற் செய்யுட்களை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப் பெற்றது**[6] என்று குறிப்பிட்டிருக்கிறார்.

குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனக்கவிஞர் மரு. பரமகுரு 'பறம்புமலை திருக்கொடுங்குன்றம்- வரலாறு' என்னும் நூலை எழுதியுள்ளார். இந்நூல் பறம்புமலை என்பது பிரான்மலையே என்பதைப் பல்வேறு இலக்கிய மற்றும் கல்வெட்டுச் சான்றுகளுடன் உறுதிபட எடுத்துக்காட்டி, பறம்புநாட்டைப் பற்றிய மாதிரி வரைபடத்தையும் முன்வைக்கிறது. இந்நூலில் **கவிஞர் மங்கைநாயகர் திருப்பதிகம் என்னும் போற்றிப் பதிகத்தைப் பாடியுள்ளதும் குறிப்பிடத்தக்கது.**[7]

இவ்வரிசையில் பலர் வேறுபல தலைப்புகளில் பறம்புமலை - திருக்கொடுங்குன்றம் - பிரான்மலை பற்றிய பதிவுகளைக் குறித்துள்ளனர். அவற்றுள் ஆங்கில நூல்களும் அடங்கும். அவற்றைத் தொகுப்பது தனி ஆய்வாக அமையும்.

## மறுப்புகள்

பறம்புமலை எது என்னும் ஐயப்பாடு இன்றுவரை ஆய்வுலகில் தொடர்ந்து கொண்டிருக்கிறது. முடிந்த முடிபாகக் கூறுவதற்கு இதுவரை போதுமான சான்றுகளைப் பலராலும் திரட்ட இயலாமல் போனதே அதற்குக் காரணமாகும். மற்றொருபுறத்தில் கிடைத்திருக்கிற தகவல்களை முறைப்படுத்தித் தொகுத்துக் கண்டாரும் இலர். தற்காலத்தில் மரு. பரமகுரு பறம்புமலை குறித்த தகவல்களை முறையாகத் தொகுத்ததோடு பறம்புநாட்டின் எல்லைகளையும் இலக்கிய வரலாற்றுச் சான்றுகளைக் கொண்டு வகுத்துத் தந்திருக்கிறார்.

தற்காலத்துப் பிரான்மலை பறம்புமலை என்பதற்கு மறுதலையாக இம்மலை பறம்புமலையில்லை என்பாரும் உளர். அவர்களது கருத்துகளைப் பின்வருமாறு காணலாம்.

- *அபிதான சிந்தாமணியின் ஆசிரியர் சிங்காரவேலு முதலியாரே பறம்புமலை குறித்த மாறுபட்ட கருத்துகளுக்கு முதற்காரணமாக விளங்குகிறார். இவர்தம் நூலில் எழுந்த முரண்பட்ட இரு கருத்துகளே பறம்புமலையின் அமைவிடத்தைப் பற்றிய குழப்பங்களை ஏற்படுத்தியது என்பதை அறிய முடிகிறது.*[8]
- *கோபிசெட்டிப்பாளையத்துக்கு அருகில் இருந்து 3 கி.மீ. தொலைவில் உள்ள பாரியூரே பாரி ஆண்ட பறம்புமலை என்று கூறுவாரும் உளர்.*[9]
- *இன்னொரு சாரார், கிருஷ்ணகிரிக்கு அருகில் உள்ள பர்கூர் மலைப்பகுதியே பறம்புமலை என்கிறார்கள்.*[10]
- *மற்றொருவர் பாண்டிநாட்டின் எல்லையாகிய இன்றைய மேலூருக்கு அருகிலுள்ள மேலவளவுக் குன்றினையே பறம்புமலை என்றும் குறிப்பிடுகிறார்.*[11]

தி.அ.முத்துசாமிக்கோனார் 1923இல் தொகுத்தளித்த ‘கொங்கு மண்டல ஊர்த்தொகை’ என்னும் நூலின் முகவுரையில் இப்படிக் குறிப்பிடுகிறார்.

**தமிழ் வழங்கும் நிலமானது முடியுடைவேந்தர் மூவர்க்கும் உரிய என்பதால், கீழ்கடல் சோழனுடையதும், தென்கடல் பாண்டியனுடையதும், மேல்கடல் சேரனுடையதும் ஆம். கொங்கு சேரனைச் சார்ந்தது. அது ஒரு சேரனது இரண்டு மக்களுள் இளையவனுக்குக் கீழ்ப் பகுதியைப் பிரித்துக் கொடுத்தான். அப்பகுதிதான் கொங்குமண்டலம் என்கிறார்கள். இதற்குப் போதிய ஆதரவு இன்னுங் கிடைக்கவில்லை. வெகு காலமாகக் கொங்கு என்பது தனி நாடாக இருந்திருக்கிறது. சங்க நூல்களுள்ளுஞ் சேரரென்றுங் கொங்கரென்றும் பிரித்துக் கூறப்பட்டிருக்கிறது. 2-ஆம் நூற்றாண்டிலிருந்த செங்குட்டுவன் “கொங்கர் செங்களம் வேட்டான்” என்றிருத்தலானும், கொங்கிளங்கோசர் கண்ணகிக்கு விழா நடத்தினானென்றிருத்தலானும், பெருஞ்சேரலாதன் தகடூர் பெற வேண்டி அதிகமானிடம் போர் புரிந்திருத்தலானும், கொல்லிமலையைப் பெறக்கருதி மலாடு நாட்டு**

*அதிபனான காரியை வேண்ட அவன் வல்வில் ஓரியைப் போரில் வென்றபின் கொல்லிமலையைப் பெருஞ்சேரல் இரும்பொறை பெற்றிருத்தலானும், அதிகமானுக்குத் துணையாகச் சேரரும் வந்து தோற்றோடினரென்று காணப்படுகின்றமையானும் ஏறக்குறைய ஓராயிர ஆண்டினிடையில் சேரராதிக்கத்திற் கொங்குமண்டலமிருந்ததாக விளங்கவில்லை. பின்பு ஏகதேசம் ஒன்பதாம் நூற்றாண்டினின்று சோழவரசாட்சியிலும், பின்பு பாண்டியர் ஆளுகையிலும் கொங்குநாடு இருந்திருக்கிறது. ஆதலின் சேரர் பெயர் பொறித்த சாசனங்கள் கொங்குநாட்டில் அகப்படுவதில்லை.*

*சேலம் ஜில்லாவின் தென்பகுதியும், கோயமுத்தூர் ஜில்லாவும், மதுரை ஜில்லாவிற் சிறு கூறுஞ் சேர்ந்தது கொங்கு ராச்சியம். ஸ்காந்தபுரத்தை ராஜதானியாகக் கொண்டு கி.பி. 190-லிருந்து 9-ஆம்நூற்றாண்டு வரை கொங்கு அரசர்கள் ஆண்டு வந்திருக்கிறார்கள் என்பது இப்போதைய சரித்திரக்காரர் கருத்து. கர்னாடக தேசம் பிடிபட்ட பிறகு இப்போதைய மைசூர் ராஜ்ஜியத்தின் ஒரு பகுதி வரையில் வடக்கே நகர்ந்தது. பொன்னாடு முதலிய சிறிய நாடுகள் அவநிதன் என்பவனாற் பிடிக்கப்பட்டது. கி.பி. ஐந்தாம் நூற்றாண்டுக்குள் வடக்கே நந்திதுர்க்கம் வரையிலும், ஆறாவது நூற்றாண்டின் தொடக்கத்தில் இன்னும் நகர்ந்தது. 8-ம் நூற்றாண்டில் துங்கபத்திரை நதிவரை பரவிற்று. 1 மண்டலம் என்பது ஒரு தேசத்தினின்று பிளவுற்றது. காவேரி நதியின் வடபாகம் (சேலம் ஜில்லா) வட கொங்கு என்றும், தென்பகுதி, தென்கொங்கு என்றும், மேல்பகுதி மேல்கொங்கு என்றும் வகுக்கப்பட்டது. இவைகள் 24 நாடுகளாகப் பிரிக்கப்பட்டன*[12]

என்று குறிப்பிடும் அவர் இதுகுறித்து மேலும்,

*கொங்கு மண்டல சதகத்துள் காணப்படுங் கதைகள் நிகழ்ந்த ஊர்கள், இந்நாட்டினுட்பட்டது என்பது எளிதிற் கண்டுகொள்ளும் பொருட்டாக இவ்வூர்த்தொகை இதன் அநுபந்தமாகச் சேர்த்தது. இவற்றை அறிதற்காக ஒவ்வொரு நாட்டிலும் புகுந்து அந்த அந்த நாட்டைச் சார்ந்த ஊர்களைக் காட்டும் பாட்டுகளைக்கண்டும். பாட்டு அகப்படாத நாட்டின் ஊர்களை ஆதாரத்துடன் தேடிப் புதிய பாட்டுகளியற்றி ★ இவ்வித*

**அடையாளக் குறிப்பிட்டும் இத்துடன் சேர்த்துள்ளேன். இதில் நாட்டின் எல்லைகளிலுள்ள ஊர்கள் சிலவற்றை இரு நாட்டினுஞ் சேர்த்திருக்கிறார்கள். பல பழைய நூல்களிற் கூறும் ஊர்கள் மறைந்து போயின. சில பழம்பெயர் மாறியும் பிற்காலத்து விடுபட்டுமிருக்கின்றன புதிய ஊர்களைச் சேர்த்தும் எண்ணுவோருமுண்டு. இதிற்பல தவறுகளிருக்கவுங்கூடும். இப்படி நேர்வது இயல்பு என்று பொறுமை கொண்டு ஆன்றோர் தெரிவிப்பின் வந்தனத்துடன் ஏற்றுக்கொண்டு மறுபதிப்பில் திருத்தமாக வெளியிடுகிறேன்**[13] என்றும் குறிப்பிடுவதன் மூலம் நாம் மேற்குறித்த செய்தியை உண்மை என்று விளங்கிக் கொள்ள வழியிருக்கிறது.

பறம்பினைச் சுட்டும் மற்ற இடங்கள்

பறம்புமலை என்பது இதுதான் என்று சுட்டப்படும் இடங்கள் கபிலமலை, பாரியூர், மேலவளவு ஆகியனவாகும். அவற்றைப் பறம்புமலை என நிறுவுவோரின் கருத்துகளைப் பின்வருமாறு காணலாம்.

கபிலமலை எனக் குறிப்பிடப்பெறும் இடம் 'கொங்கு மண்டல ஊர்த்தொகை'ப் பட்டியலில், கீழ்கரை அரயநாடு என்னும் தொகுப்பில் அடங்குகிறது.

**திருவுலவு மிடையாறு திருமல்வன் பொத்தனூர்**
**திகழ்கபிலை பாண்டமங்கை**
**தென்கபிலை மாநகர் வெங்கரைசி ராப்பள்ளி**
**சிகசை மருதூர் கொந்தளம்**
**மருவுலவு மானங்கூர் குன்னம்வட கரையாறை**
**வண்மைசிறு நல்லிகோயில்**
**வளர்கொற்ற மங்கைமா தேவிந லிளம்பள்ளி**
**வாய்மைகொ ளிராமதேவம்**[14]

**கோபிசெட்டிப் பாளையத்துக்கு அருகிலுள்ள பாரியூர் என்னும் கிராமமும் பாரி இருந்த இடம் என்று வரலாற்றில் குறிப்பிடப் பெற்றுள்ளது. இங்கு கொண்டத்துக் காளியம்மன் ஆலயம் அமைந்துள்ளது. இவ்வூர்**

**பாரபுரி என்று அழைக்கப்பெற்றதாக இக்கொண்டத்துக் காளியம்மன் மீது பாடப்பட்ட ஆற்றுப்படை நூலின் மூலம் அறிய முடிகிறது. இந்த அம்மன் வள்ளல் பாரியின் குலதெய்வமாகக் குறிப்பிடப் பெறுகிறது[15]** என்று தகவல் சுட்டுகிறது.

மதுரை மாவட்டம், மேலூர் வட்டத்தில், மேலூரிலிருந்து சுமார் 11 கி.மீ தொலைவில் உள்ளது மேலவளவு. **இக்கிராமமே பறம்புமலை என்று பிரான்மலைக்கு மிக அருகில் இன்னொரு இடத்தைக் குறிப்பிடுகிறார் மற்றொரு ஆய்வாளராகிய இரா.ஜெகதீசன்.**[16]

ஆக, தங்களுக்குக் கிடைக்கும் தகவல்களின் அடிப்படையில் அவர்கள் யாவரும் தத்தம் கூற்றையே உண்மை என நிறுவுவதற்கு முயல்கிறார்கள். இதற்கு அவர்களுக்குத் தேவையான சான்றுகளை மட்டும் தேர்ந்துகொள்கிறார்கள் என்பதும் உண்மை.

கபிலர் பிறந்த ஊர் எது என்பதிலும் இவர்களுடைய ஆய்வு முடிவுகள் குழப்பத்தையே ஏற்படுத்துகின்றன.

### பறம்புமலை குறித்த சில சிக்கல்களும் விளக்கங்களும்

பறம்புமலையின் அமைவிடம் குறித்து வேறுபடு கருத்துகள் வழங்கப்பட்டு வருகின்றன. இந்தக் கருத்து வேறுபாடு முதன்முதலில் 1910இல் வெளிவந்த சிங்காரமுதலியார் இயற்றிய அபிதான சிந்தாமணி நூலில் இருந்து எழுகிறது. தமிழ்ச்சொற்களுக்குப் பொருள் கூறும் இந்த அகராதியில் பறம்புநாடு என்பதற்கு விளக்கமாக,

**1. பாரி என்னும் வள்ளலின் நாடு. முந்நூறு ஊர்களை உடையது (புற.நா) 2. இது வேள்பாரியெனும் வள்ளல் ஆண்ட நாடு. இது பாண்டி நாட்டிலிருந்ததாகச் சாசனங்கள் கூறும். இது பாரிமலை, பிரான்மலை யெனும் கொடுங்குன்றமாயிருக்கலாம்[17]** எனக் குறிப்பிட்ட அவர், யாது காரணத்தினாலோ இக்கருத்துக்கு முற்றிலும் மாறுபட்ட- பொருந்தாத மற்றொரு தகவலை அந்நூலில் தருகிறார்.

பறம்புநாட்டை ஆண்டவன் பாரி என்றும், அவன் ஆண்ட நாடு பறம்பு நாடு என்றும், அது பாண்டிநாட்டின்கண் உள்ள பிரான்மலை எனவும் குறிப்பிட்ட அவர், பாரி என்பதன் விளக்கமாக,

**இவன் நாடு தகடூர் நாட்டிற்கு அருகிலுள்ளது. சேலம் கோயம்புத்தூருக்கு மேற்கு. இவனுக்கு வேள்பாரி என்றும் பெயர். அரண்வலி முதலிய பெருமைகளும், பல்வகை வளங்களுமுடையதுமாய் முந்நூறு ஊர்களைக் கொண்டதுமாகிய பறம்பு அல்லது பறம்புமலையைத் தன் அரசிருக்கையாகக் கொண்ட, வேளிர் குலத் தலைவனான பாரி என்பான் வரையாதளிக்கும் பெருவள்ளல் எனத் தமிழ்நாடு புகழ வாழ்ந்து வந்தான். இவன் மிக்க கொடையாளியும் மிழலைக்கூற்றத்துக்குத் தலைவனுமாகிய வேள் எவ்வி என்பவனுடைய வழித்தோன்றல்**[18] என்றும் குறிப்பிடுகிறார்.

பறம்புமலை குறித்த முதல் கருத்து மாறுபாடு அவருடைய நூலிலேயே அமைந்து விட்டது. முன்னொரு கருத்தும் பின்னொரு கருத்துமாக அவருக்கே குழப்பம் நேர்ந்திருப்பதையும், ஆனபோதும் அவருடைய கூற்றுகளில் இருந்தே எது சரியான இடம் என்பதையும் நம்மால் உணர்ந்து கொள்ள முடிகிறது.

பறம்புநாட்டுக்கு விளக்கமாக அவர் குறிப்பிட்ட பின்னர், தொடர்ந்து வருகிற பாரிக்கு விளக்கமாக மாற்றிக் குறிப்பிட வேண்டிய அவசியம் யாது? என்பது இதன்மூலம் எழும்புகிற முதல் வினா.

தகடூர் நாட்டிற்கு அருகில் உள்ளது என உறுதியுடன் குறிப்பிடும் அவர், முன்னர் இருந்த மாற்றுக்கருத்தையும் திருத்தியிருக்க வேண்டாமா என்பது இரண்டாவது எழுகிற வினா.

இவ்விரு விளக்கங்களின் உண்மைத் தன்மையை ஆய்ந்தால், பாரியை மிழலைக்கூற்றத்துத் தலைவனாகிய வேள் எவ்வியின் வழித்தோன்றல் எனும் ஒரு தகவல் பொருத்தமுடையதாகிறது.

மிழலைக் கூற்றம் பறம்புநாட்டுப் பகுதிக்கு அருகிருந்தது என்பதும், வேள் எவ்வி ஆண்ட அந்நாட்டை தலையாலங்கானத்துச் செருவென்ற

பாண்டிய நெடுஞ்செழியன் படைகொண்டு அழித்தான் என்பதும் வரலாற்று ஆதாரங்களின் மூலமாக உணரப்படுகிறது.

ஆதலால் பறம்புநாடு என்பது திருக்கொடுங்குன்றம் என வழங்கப்படும் பிரான்மலையேயாகும் என்பது இதன்மூலம் உறுதியாகிறது.

## இரண்டாவது மறுப்புக் கருத்து

அடுத்த மறுப்பினை எழுப்பியவர் கா. அரங்கசாமி ஆவார். இவர் எழுதி சாகித்திய அகாதெமி வெளியிட்ட கபிலர் என்னும் நூலில் பறம்புமலை குறித்த சில தகவல்களைச் சான்றுகளேதுமின்றிப் பட்டியலிட்டுக் கீழ்வருமாறு தருகிறார். அவர் தருகின்ற ஒவ்வொரு கருத்துகளுக்கும் உரிய மறுப்புக் கருத்து அதன் தொடர்ச்சியாகத் தரப் பெறுகின்றது.

1. **மூவேந்தர் முற்றுகை இட்டனர் என்பதால் மூவேந்தர் மண்ணில் பறம்பு இல்லை என்பது உறுதி.**[19]

இக்கருத்தின் உண்மையை அவரே உறுதிபடக் கூறிவிட்டார். பாரியினுடைய பறம்புமலை (பிரான்மலை) மூவேந்தருக்கும் உரிய எல்லைப் பகுதியிலேயே அமைந்திருந்தது. இன்றும் கூட மதுரை, சிவகங்கை, புதுக்கோட்டை, திருச்சி, திண்டுக்கல் ஆகிய மாவட்டங்களின் எல்லைப்பகுதியிலேயே சிவகங்கை மாவட்டத்துக்குள் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

1. சங்ககாலத்துச் சுட்டப்படும் பாண்டியநாட்டு எல்லை மேலூருக்கும் தென்பகுதியிலேயே வைகைக் கரையோடு முடிவடைகிறது.
2. சோழ நாட்டின் எல்லை புதுக்கோட்டையை ஒட்டிய பகுதிகளோடு நிறைவு பெறுகிறது.
3. சேரநாட்டு எல்லைப் பகுதி திண்டுக்கல் தாண்டி நத்தம் பகுதிகளோடு முடிவடைகிறது.
4. தற்காலத்திலும் பறம்புமலையாகிய பிரான்மலை ஐந்து

மாவட்டங்களின் எல்லைப் பகுதியாக அமைந்துள்ளது.

5. சிவகங்கை மாவட்டத்தின் வடமேற்கு எல்லையில் உள்ளது.

6. பிரான்மலையிலிருந்து வடக்கே 8 கி.மீ. தொலைவில் புதுக்கோட்டை எல்லை தொடங்குகிறது. (ஆனால் இன்றைய பதிவுகளில் பிரான்மலையின் ஒரு பகுதி புதுக்கோட்டை மாவட்டத்தைச் சேர்ந்ததாகவே குறிப்பிடப் பெறுகிறது.)

7. வடமேற்குத் திசையில் பிரான்மலையிலிருந்து 25 கி.மீ. தொலைவில் திருச்சிராப்பள்ளி மாவட்ட எல்லை அமைந்துள்ளது.

8. மேற்கே 7 கி.மீ. தொலைவில் இன்றைய மதுரை மாவட்ட எல்லை தொடங்குகிறது.

9. மேற்கே 20 கி.மீ. தொலைவில் திண்டுக்கல் மாவட்ட எல்லை தொடங்குகிறது.

ஆக, சங்ககாலத்தில் பறம்புநாட்டின் தலைமையிடமாக விளங்கிய பறம்புமலை மூவேந்தரின் மண்ணில் அமையவில்லை என்பதும், இன்றும் எந்த மாவட்டத்தின் மையத்திலும் அமையாமல் எல்லைப்பகுதிகளை ஒட்டியே அமைந்து தனித்த நாடாகவே விளங்குகிறது. (ஐந்து நிலைகளைக் கொண்டதனால் - ஐந்து மங்கலங்களை உடையதனால் இது ஐந்துநிலை நாடு என்றும் தற்போது பெயர் பெற்றிருப்பது குறிப்பிடத்தகுந்ததாகும்.)

**2. 300 ஊர் கொண்டது. பாரிமலை 300 ஊராகும். பரிசிலர் பெற்றனர் என்பார் கபிலர். இன்றைய பிரான்மலையில் ஓர் ஊர் கூட இல்லை. ஆனால், பர்கூர் மலையில் 300க்கும் மேற்பட்ட ஊர்கள் இன்றும் உள்ளன.**[20]

1. இந்நூலாசிரியர் பறம்புமலை என்பது பிரான்மலை இல்லை என்பதோடு பர்கூர் மலையிலுள்ள பாரியூரே என நிறுவ முயல்கிறார் என்பது இதன்மூலம் புலப்படுகிறது.

2. முந்நூறு ஊர்களை உடையது பறம்பு நாடுதானே தவிர, பாரிமலை இல்லை. பறம்பு நாடு, பறம்புமலை என்கிற சொல்லாட்சிகளைத் தவிர்த்துப் பாரிமலை என்னும் சொல் இலக்கியத்திலும், கல்வெட்டுக்களிலும் எங்கும் பதிவாகவில்லை என்பது உறுதி.

3. "முந்நூறு ஊரும் பரிசிலர் பெற்றனர்" என்பார் கபிலர்; தொடர்ந்து அவரே, "யாமும் பாரியும் உளமே, குன்றும் உண்டு" என முந்நூறு ஊர்களைத் தவிர்த்தே பறம்புக்குன்றைக் குறிப்பிடுகிறார். ஆக, குன்று தனியாகவும் குன்றைத் தலைமை-யிடமாகக் கொண்ட பறம்பு நாட்டின் முந்நூறு ஊர்கள் தனியாகவுமே இருந்திருக்கின்றன என்பது உறுதியாகிறது.

***3. வானத்து மீன் பூத்தது போன்ற சுனைகள் பாரி பறம்பில் உள்ளன என்பார் கபிலர். இக்காட்சியைப் பிரான்மலையில் காண இயலாது. ஆனால், 1500 சதுரக்கல் பரப்புக் கொண்ட பர்கூர் மலையில் வானத்து மீன் போன்ற சுனைகளை இன்றும் காணலாம்.***[21]

1. எவ்விதச் சான்றுகளைக் கொண்டு நூலாசிரியர் இந்த முடிவுக்கு வந்தார் என்பதைக் குறிப்பிடவில்லை. பிரான்மலையில் சுனைகள் இல்லை என்று எவ்வாறு கூறினார் என்பதை அறிய இயலவில்லை.

2. வானத்து மீன் என்னும் உவமையில் காணும் உட்பொருள் பறம்புமலையே பிரான்மலை என்பதைத் தெள்ளத் தெளிவாகக் காட்டி விடும். வானத்திலே இருக்கும் விண்மீன் கூட்டம் சிலவே வெளித் தெரியும்படியிருக்கும். பல மறைந்தேயிருக்கும்.

3. அவ்வகையில் பிரான்மலையில் இன்றும் விளங்கும் பொழுது காணாச் சுனை என்னும் பெயர் பெற்ற ஒரு சுனையே இதற்குச் சான்றாகும். (இச்சுனையில் சூரியஒளியே படுவதில்லை என்பதோடு யாரும் எளிதில் காண இயலாதவாறு மறைந்து மலைமுகட்டில் உள்ளது ஆதலால் இதற்குப் 'பொழுது காணாச் சுனை' என்று பெயர்.)

4. இதுபோல அறிந்தும் அறியாமலும் இருக்கும் சுனைகள் நிறையவே உண்டு. இன்றும் அவை தீர்த்தங்களாக விளங்குகின்றன.

### *4. உழவர் உழாதனவாகிய நான்கு பயன்கள் இன்றும் பர்கூர் மலையில் கிடைக்கக் காணலாம்.*[22]

1. பாரியிருந்த காலத்துப் பறம்புமலையில் உழவர் உழாதனவாக நான்கு பயன்கள் பெறப்பட்டன. இவ்வளம் திருஞானசம்பந்தர் பாடல் எழுந்த காலத்தும் விளங்கியிருக்கிறது. ஆனால், இன்று அவற்றில் சிலவே காணக்கிடைக்கின்றன. இதற்குக் காரணங்கள் உண்டு.

2. **மட்டுவாய் திறப்பவும் மையிடை வீழ்ப்பவும்**
**அட்டான்று ஆனாக் கொழுந்துவை ஊன்சோறும்**
**பெட்டாங்கு ஈயும் பெருவளம் பழுனி,**
**நட்டனை மன்னோ, முன்னே இனியே**
**பாரி மாய்ந்தெனக் கலங்கிக் கையற்று**
**நீர்வார் கண்ணேம் தொழுதுநின் பழிச்சிச்**
**சேறும்.......** -[23]

எல்லாரிடமும் நட்புணர்வோடு உதவியது பறம்புமலை. வளம் கொழித்த பறம்புமலை. இனி அந்த வளம் எங்கே கிடைக்கப் போகிறது என்ற துயரோடுதான் பறம்புமலையைக் கபிலர் நீங்கிச்சென்றார்.

மேலும், கபிலர் **மைம்மீன் புகைப்பினும் தூமம் தோன்றினும்**[24] எனத் தொடங்கும் பாரி மகளிரை நோக்கிப் பாடுவதாக அமைந்த கையறுநிலைப் புறநானூற்றுப் பாடலில் **இயற்கைச் சீற்றங்களால் அழிக்க முடியாத இந்தப் பறம்புமலை நாடு - இம்மகளிர்தம் தந்தையர் நாடு முன்னர் இருந்த நிலை மாறி யாவும் அழியக் காண்கிறேன்**[25] என்று பாடுகிறார்.

தவிரவும் பாரியின் மறைவினால் ஏற்பட்ட துயரத்தை வெளிப்படுத்தும் கபிலரின் கையறுநிலைப் பாடல்கள் முழுவதும் நாடழியும் அவலமே முன்னிற்பதையும் பொருத்திப் பார்த்தல் தகும்.

**செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து**
**இல்லாளின் ஊடி விடும்**[26]

எனும் குறட்கேற்பப் பாரியை இழந்த பறம்பு வளமாய் இருக்கும் என்பது வினாவுக்குரியதேயாம்!

**5. கபிலரால் பழக்கப்பட்ட பறவைகள் முற்றுகையின்போது காலையில் சென்று நெற்கதிர்களுடன் மாலையில் மீண்டன என்பதை உறுதி செய்யும் வண்ணம் இன்றும் பவானியாற்றுக் கரைகளில் நெல் விளையக் காண்க.**[27]

1. *இந்த நிகழ்வு ஔவையார் பாடிய அகநானூற்றுப் பாடலில் (303) இருந்து பெறப்பட்டுள்ளது. இதைக் குறித்து நக்கீரரும் தனது அகநானூற்றுப் (78) பாடலில் இதனைப் பதிவு செய்துள்ளார்.*

2. *பர்கூர் மலையிலேயே 300 ஊர்கள் உள்ளதாகக் குறிப்பிடும் நூலாசிரியர் அவ்வூர்களில் வேளாண் தொழில் நடைபெறுவதாகவும் குறிப்பிடுகிறார். எனில் முற்றுகையிடப்பட்டது மலை மட்டுமாயின் ஊர்கள் தனித்தே இருந்தன என்பது புலப்பாடு. ஆனால் இக்கருத்து பர்கூர் மலைக்குப் பொருத்தமுடையதாக அமையவில்லை. இந்த ஒற்றுமை பிரான்மலைக்குப் பொருந்துவதாக அமைவதை உணரலாம். இன்றும் பிரான்மலை சூழ்ந்த விளைபொழில்கள் விரிந்திருக்கக் காணலாம். மலை தனித்தும் நாடு தனித்தும் இருந்தது இதன்மூலம் உறுதியாகிறது.*

**6. இம்மலையின் அடிவாரத்தில் (வடக்குப் பகுதியில்) பாரீச்சுரம் என்ற கோயில் கல்வெட்டுடன் இன்றும் இருக்கக் காணலாம். இந்தப் பாரீச்சுரம் போலவே பிரான்மலையில் ஒரு பாரீச்சுரம் இருக்கவே பாரிமலை என்றனர்.**[28]

1. *நூலாசிரியர் பர்கூர் மலையில் இருக்கும் கோயில் கல்வெட்டுச் செய்தி பற்றிக் குறிப்பிட்டுவிட்டு அதற்கான எந்தச் சான்றுகளையும் தரவில்லை.*

2. இந்தப் பாரீச்சுரம் போலவே அந்தப் பாரீச்சுரமும் என்று குறிப்பிடுபவர் எது உண்மையானது என்பதையும் ஆராயவில்லை.

3. பாரீச்சுரமே பறம்புமலை என்பதை ஒத்துக் கொள்ளும் ஆசிரியர் பறம்புமலை பாரிமலை என வழங்கும் வழக்கம் இல்லை என்பதை ஒப்புப்படுத்தவில்லை. ஆனால் பர்கூர் மலையைப் பாரிமலை என்றே குறிப்பிடுகிறார்.

4. கபிலரின் பாடல்களில் சிவனைப் பற்றிய குறிப்புகள் நிறைய உள்ளன என்பதும் அக்காலத்திலேயே சிவன் கோயில் அமைந்திருக்க வாய்ப்புண்டு என்னும் கருத்துகளும் ஆய்வேட்டில் உரிய சான்றுகளோடு முன்னியல்களில் தரப்பெற்றுள்ளன என்பதையும் இங்கு ஒப்பிட்டுக் காணலாம்.

5. மேலும் இது பிரான்மலை திருக்கொடுங்குன்றம் என்னும் பெயரில் தேவாரப் பாடல் சிறப்புப் பெற்றதும், திருநாவுக்கரசர், சுந்தரர்,மாணிக்கவாசகர், சேக்கிழார், அருணகிரிநாதர், வள்ளலார் ஆகிய அருளாளர்களின் பாடல் பெற்ற சிறப்புக்கும் உரியது என்பதும் உணர வேண்டியது.

6. தென்கயிலாயம் எனப் போற்றப் பெறும் பிரான்மலையைத் திருஞானசம்பந்தர் பெருமான் பழநகர், பெருநகர், நெடுநகர் எனப் புகழ்கிறார். இதில் பழநகர் என்பது பாரியின் வரலாற்றை உணர்ந்தே கூறியிருக்கலாம் என்பதும் உணரத் தக்கது.

7. கபிலர் பாடல்களில் புலப்படும் பறம்பின் வளம் நிலைத்து (சுமார் 600 ஆண்டுகளுக்குப் பின்னும்) திருஞானசம்பந்தரால் பதியப்பெற்றுள்ளது.

8. ஆதலால் பறம்பினாலேயே பாரி பெயர் பெற்றதைப் போல, பாரீச்சுரமும் பெயர் பெற்றது. பாரிமலை என்றோ, பாரியூர் என்றோ வழங்கப்படவில்லை என்பதே உறுதி.

**7, யானைக் கூட்டம் பாரிமலையில் நிறையவே உள என்பார் கபிலர். பிரான்மலையில் ஒரு யானையைக் கூடக் காண இயலாது. இன்றும் பர்கூர் மலையில் யானைக் கூட்டங்களைக் காணலாம்.[29]**

1. *கபிலர் பாடிய பறம்புமலை பர்கூர் மலையாயின் அதன் பிறகு அதனை யாரும் பாடவில்லையா எனும் வினா எழும்.*
2. *பறம்புமலை திருக்கொடுங்குன்றமாக, பிரான்மலையாக மாறியபோதும் தொடர்ந்து பாடல் பெற்று பதிவுகளோடு விளங்கி வருகிறது.*
3. *கபிலர் பாடல்களில் புலப்படும் அதே காட்சிகள் திருஞானசம்பந்தர் பதிகங்களின் வழியேயும் வெளிப்படுகின்றன.*
4. *பருத்த யானைக்கூட்டம், சிங்கங்கள், அருவிப் பெருக்கு, மலர் வகைகள், மூங்கிற்காடுகள், யாழிகள் இவையாவும் திருஞான சம்பந்தர் பாடல்களின்வழி மீள்பதிவு செய்யப்பட்டுள்ளன.*
5. *இதன்மூலம் பறம்பே கொடுங்குன்றம் - பிரான்மலை என ஆனது என்பதை உணரலாம். இன்று அவை இல்லை என்பதே அதற்கு மேலும் உறுதியான சான்றாகும்.*

**8. பாரிமலை கொல்லிமலைக்கு மேற்கே உள்ளது என்பதை நோக்கப் பர்கூர் மலையே என்பது போதரும்![30]**

1. *மீண்டும் நூலாசிரியர் பாரிமலை எனக் கூறினாரே தவிர, பறம்புமலை எனும் சொல்லைக் கையாளவில்லை. பாரிமலை எனும் இலக்கியத் தொடர் யாண்டும் இடம்பெறவில்லை.*
2. *கொல்லிமலைக்கு மேற்கே உள்ளது என்பதைப் பற்றிய குறிப்புகள் எங்கிருந்து எடுக்கப் பெற்றன எனும் தரவுகளும் இல்லை.*

**9. பாரியின் பெயரால் அமைந்த ஊர்கள் பல இன்றும் உள்ளன. பாரியூர், பாரியூரம்மன் தொடர்பால் பெற்ற பெயர்கள் இன்றும் இங்கு வழக்கில் உள்ளன.[31]**

1. மீண்டும் முன்கூறிய கருத்தையே நூலாசிரியர் வலிந்து திணிக்கிறார். **பாரி பாரி என்றுபல ஏத்தி ஒருவர் புகழ்வர் செந்நாப் புலவர் பாரி ஒருவனுமல்லன்** என்று பாடிய கபிலர் பறம்புமலையைப் பாரிமலை என்றோ, பறம்புநாட்டைப் பாரி நாடு என்றோ குறிப்பிடவில்லை. பாரியினும் உயர்ந்ததாய் அவன் வண்மைக்கு ஊக்கமாய் அமைந்தது பறம்பே என்பதால் அதுவே சிறப்பு.

2. பாரியினுடைய பண்புநலன்கள் இன்றளவும் பறம்புநாட்டில் இன்றைய பிரான்மலைப் பகுதிகளில் பின்பற்றப் பெற்று வருகின்றன. சான்றாக, **"கொடி தளும்பினால் குடி தளும்பும்"** என்னும் சொலவடை இன்றளவும் நிலைபெற்றுள்ளது..

3. மேலும் பிரான்மலைப் பகுதிகளில் ஆண்குழந்தைகளுக்குப் **பாரி, வேள்பாரி, கபிலன்** என்ற பெயர்களும் சூட்டப் பெறுகின்றன. அதுபோலவே, பெண்குழந்தைகளுக்கு பாரிமகளிரான **அங்கவை, சங்கவை** என்ற பெயர்களும், கபிலர் கூற்றால் அறியலாகும் பாரி மனைவி 'நல்லோள்' எனும் தொடர்வழி **நல்லமங்கை**, என்ற பெயர்களும் வைக்கப் பெறுகின்றன. பாரி வாழ்வில் புகழ்பெற்ற முல்லைக்கொடியைப் பெண்குழந்தைகளுக்கான பெயர்களாகச் சூட்டுகின்றனர்.

4. வேளிர்குல மரபின் தொடர்ச்சியாக வேளாண் மரபு பேணும் வேட்டையாடும் (பாரிவேட்டை) மரபு இன்றும் உண்டு. பாரி-விழாவும் ஆண்டுதோறும் கொண்டாடப்பெற்றது.

***10. இடைக்காலக் கல்வெட்டுகள் பலவிடங்களில் 'வடபாரிசாரநாடு' என்று பவானி ஆற்றுப் பகுதி நாட்டைக் குறிக்கும். எனவே பாரியின் தொடர்பு புலப்படும்.*** [22]

1. பிரான்மலையே பறம்பு என்பதற்கும் பறம்புநாடு எனும் எல்லை அமைப்புக்கும் மிகுதியான கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன. அவையாவுமே பறம்புநாடு என்ற பெயரிலேயே பதியப்

பெற்றிருக்கின்றன. இலக்கியங்களில் சுட்டப் பெற்ற பெயரே கல்வெட்டுகளிலும் ஒத்திருப்பதை இதன்மூலம் உணர்ந்து கொள்ள முடியும்.

2. திசைகளை மையமிட்டுப் பறம்பு நாடு, வடபறம்புநாடு எனவும், தென்பறம்பு நாடு எனவும் இருவகையாகப் பிரிந்திருந்தது என்பதை வரலாற்றுச் சான்றுகள் மூலம் மெய்ப்பிக்க முடிகிறது. இவை குறித்த போதுமான சான்றுகள் கல்வெட்டுகள் பகுதியில் ஆய்வேட்டில் முன்பகுதியில் மொழியப்பட்டுள்ளன.

***11. கபிலர் பாடிய குறிஞ்சிப் பாட்டில் தலைவி 99 வகையான மலர்களைப் பறித்து விளையாடியதாகக் கபிலர் குறிப்பர். இத்தகைய 99 வகை மலர்களும் இன்றும் இம்மலையிலேயே உள்ளன. சிறப்பாகக் கொடிவேரி என்ற மலர் தந்த பெயரால் இங்கு ஊரும் அணையும் உள்ளன.[33]***

1. பறம்புமலையில் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை மட்டுமே பூக்கும் அரிய வகை குறிஞ்சி மலர் உண்டு.

2. இன்றும் அறிவியலாளர்களால் தாவரக் குடும்பத்தைக் கண்டறிய முடியாத அரிய வகையான மூலிகைகளும், மரவகைகளும் உள்ளன. சான்றாக, உறங்காப்புளி, பெயரில்லா மரம் போன்றவை.

3. திருஞானசம்பந்தர் பதிகத்தின் ஒரு பாடலில் கடம்பு, குருக்கத்தி, முல்லை, குரா ஆகிய மணம் உள்ள மரவகை மலர்களையும் செடிவகை மலர்களையும் உடைய சோலைகள் சூழ்ந்துள்ள கொடுங்குன்றம் எனப் புகழ்கின்றார்.

4. தேன் வகைகளும் இங்குண்டு. கொம்புத்தேன், பாறைத்தேன், என்பது பொதுவகை என்றால் அதன்மேலும் ஒவ்வொரு பருவத்திலும் பூக்கும் பூக்களிலிருந்து வண்டுகள் கொணர்ந்து சேர்க்கும் மலர்வகைத் தேனுமுண்டு.

5. ஆக, இன்றைக்கும் பிரான்மலையாகிய கபிலர் பாடிய பறம்புமலையில் அவர் குறிப்பிட்ட மலர் இனங்களோடு முல்லைக்கொடியும் பரவிக் கிடப்பது கண்கூடு.

**12. பாரி பறம்பின் பனிச்சுனைத் தெண்ணீர் பாடும் புகழ்பெற்றது. அதனை இன்றும் மல்லியம்மன் துருகப் பகுதியில் காணலாம்.[34]**

1. சுனைகளைப் பற்றி முன்பே கூறப்பட்டது எனினும், கூடுதல் சான்றாக, இதனையும் சேர்க்கலாம். பறம்புமலை அடிவாரத்தில் உள்ள பெரிய சுனைக்குத் தேனாழி (தேனாடி) என்று பெயர். பாறைகளில் கட்டப்பட்டிருக்கும் மிகப் பெரிய தேனடைகளிலிருந்து கசிந்த நீர் பெருகிக் கூடியிருப்பதால் இதற்கு இப்பெயர் அமைந்தது!

13. **பாரியூர் என்பதே பர்கூர் ஆகியிருக்க வேண்டும்.[35]**

1. பாரியூர் என்ற பெயர் இலக்கியங்களில் எங்குமே குறிக்கப்படாத போது அதே பெயரை நூலாசிரியர் வலிந்து திணிக்கிறார். பறம்பு - திருக்கொடுங்குன்றம் - பிரான்மலை என்பதிலுள்ள ஒற்றுமை பாரியூர் என்பதில் இல்லை என்பதை இதுகாறும் கூறிய சான்றுகளால் ஒத்துணர முடியும்.

**14. மூவேந்தர் முற்றுகையின்போது கபிலர் மரந்தொறும் பிணித்த களிறு பற்றியும், புலந்தொறும் பரப்பிய தேர் பற்றியும் கூறுவர். அவ்வாறு மரங்களும் புலங்களும் நிறைந்த இடம் பர்கூர் மலையே என அறியலாம்.[36]**

இதற்குத் தனித்துப் பதில் கூறவே வேண்டியதில்லை. அவ்வாறே மரங்களும் புலங்களும் மிகுதியும் நிறைந்த இடம் பறம்புமலையாகிய இன்றைய பிரான்மலையே என நேரில் கண்டால் அறியலாம். பிரான்மலையிலிருந்து 2.கி.மீ. தொலைவில் உள்ள ஓர் இடம் **முற்றுகைக் கொட்டில்** என்ற பெயரிலிருந்து மருவித் தற்போது **முட்டாக்கட்டி** என்னும் ஓர் சிற்றூராக அமைந்துள்ளது குறிக்கத்தக்கது.

***15. இன்றும் கபிலர் பாடிய குறிஞ்சிப் பாட்டில் வரும் துறைகளில் ஒன்றாகிய உடன்போக்கு மணம் பர்கூர் மலைப்பழங்குடி மக்களிடம் வழக்கமாக உள்ளது.***[37]

1. *இன்றைய காலச்சூழலிலும் உடன்போக்கு, திருமண ஒழுக்கங்களில் ஒன்றாக உலகம் முழுவதும் உள்ளது. ஆனால், கபிலர் பாரியைச் சேரனைப் பாடும் பதிற்றுப்பத்துப் பாடலில், புகழ்ந்தபோது நல்லோள் கணவன் எனப் போற்றுகிறார். பாரி மகளிர் உடன்போக்குச் செல்லவில்லை என்பதும் வரலாற்றுச் செய்தி.*

மேலும் சில புதிய உண்மை விளக்கங்கள்

*பிற்காலத்தில் ஒரு மண்டலத்தின் வரலாற்றை அறிய உதவும் மிக முக்கியமான வரலாற்றுச் சான்றாக விளங்குவது அம்மண்டலத்தின் இயல்புகளைப் பற்றிப் பாடப்பெற்ற சதகச் செய்யுளே என்பது ஆய்வாளர்களின் கருத்து.*

***96 வகைப் பிரபந்தங்களில் 'சதகம்' என்பது ஒருவகை. 'சதகம்' என்பது 100ஐக் குறிக்கும். சதம் செய்யுள்கள் கொண்ட நூல் சதகம் ஆயிற்று. சதகம் என்றால் நூறு பாடல்களால் இயன்ற ஓர் இலக்கியம் என்பது பொருள். சில சதக நூல்களில் பாயிரம், அவையடக்கம், காப்பு, வாழ்த்துச் செய்யுள்கள் போன்றவை நூற்றுக்குப் புறம்பாக அமைவதும் உண்டு. சோழ மண்டல சதகத்தில் 105 செய்யுள்கள் உள்ளன. ஒரு நாட்டின் - மண்டலத்தின் பன்முக வரலாற்றுச் சிறப்புக்களையெல்லாம் தொகுத்துக் கூறும் சதக இலக்கியங்கள் மண்டலசதகங்கள் எனப்பட்டன.***[38]

*தமிழில் பல மண்டல சதகங்கள் தோன்றின. அவை யாவும் அந்தந்த மண்டலத்தின் பல்விதப் பெருமைகளை விளக்குவதாக அமைந்தன.*

*ஈழமண்டல சதகம், கார்மண்டல சதகம், கானாட்டுச் சதகம், கொங்குமண்டல சதகம், தொண்டைமண்டல சதகம், நந்தமண்டல சதகம், பாண்டிமண்டல சதகம், மிழலைச் சதகம் என்பன மண்டல வரலாறு கூறும் வரலாற்றுச் சதகங்களாக அமைந்துள்ளன.*

**கொங்கு மண்டலத்திற்கென மூன்று சதகங்கள் உள்ளன. கார்மேகக் கவிராயர், வாலசுந்தரக் கவிராயர், கம்பநாதசாமி ஆகியோர்கள் இதனை இயற்றிய ஆசிரியர்கள் ஆவர்.[30]**

*கொங்கு நாட்டின் எல்லைகள், நாடுகள், மலைகள், ஆறுகள், தலங்கள் என நிலவியல் நிலையில் கொங்குநாட்டின் அத்துணைச் செய்திகளையும் இந்நூல்கள் தொகுத்துத் தந்துள்ளன. காவிரியின் உற்பத்தியிலிருந்து தொடங்கி, இறைவன் எழுந்தருளியுள்ள தலங்கள் குறித்தும், அந்நாட்டில் வாழ்ந்த புலவர்கள் புரவலர்கள் குறித்தும் அரியபல செய்திகள் காணக்கிடக்கின்றன. இந்நூல்களில் காணப்பெறும் பல்வேறு செய்திகளால் கொங்கு நாட்டின் பண்பாடும், வரலாறும், பழக்கவழக்கங்களும் இனிது புலனாகின்றன.*

*இவ்வரிசையில் காணப்பெறும்* **பாண்டி மண்டலச்செய்யுளில் இடம்பெறும் பாரியினுடைய பறம்பு நாடு குறித்த பதிவு கொங்கு மண்டலச் செய்யுள்கள் எதிலுமே இடம் பெறவில்லை** *என்பது வரலாற்றை இன்னும் உறுதி செய்வதாக அமைகிறது.*

*இந்த இடத்தில் மற்றொரு விளக்கத்தையும் தருவது இன்றியமையாத தாகிறது.*

*பறம்புநாடும், மலையும் கொங்குப்பகுதி சார்ந்தவை என்ற கருத்துக்குப் பின்புலமாக, கபிலரின் சேரநாட்டுப் பயணம் அமைந்திருத்தல் கூடும்.*

## கபிலரின் சேரநாட்டுப் பயணவழி அறியலாகும் செய்திகள்

*பாரியின் மறைவுக்குப் பின்னர் கபிலர் பறம்புமலையை நீங்கிப் பாரியின் மகளிரைத் தம்முடன் அழைத்துக் கொண்டு மலையமான்களின் நாடாகிய திருக்கோவிலூரை அடைகிறார்.*

*இடையில் நடந்த கசப்பான அனுபவங்கள் அவரைச் சேர மன்னனாகிய செல்வக்கடுங்கோ வாழியாதனை நோக்கித் திருப்புகின்றன. இதற்குப் பரணரும் ஒரு காரணியாகத் திகழ்கிறார் என்பதை வரலாற்றுச் சான்றுகள் எடுத்துரைக்கின்றன.*

அவ்வாறு சேரமன்னனனாகிய செல்வக்கடுங்கோ வாழியாதனைச் சென்று பாடும்போதில் கபிலரோடு பரணர் உடனிருந்திருக்கிறார் என்பதும், அவர் கபிலரைச் செல்வக்கடுங்கோ வாழியாதனிடத்தில் வழிநடத்தி யிருக்கிறார் என்பதும் வரலாற்றுச் சான்றுகள்வழி புலனாகின்றது.

கபிலர் செல்வக்கடுங்கோ வாழியாதனைப் பாடியதனால் அவன் மகிழ்ந்து கபிலருக்கு வழங்கிய கொடையே மேற்கண்ட நூலாசிரியர் குறிப்பிடும் பாரியூர் என்றும் பர்கூர் என்றும் சுட்டப்பெறும் பகுதியாக இருந்திருக்க வேண்டும் என்னும் ஐயம் எழலாம். அதனையும் சான்றுகள் மூலம் விளக்கி நிறுவமுடியும்.

**வாழியாதன் கபிலருடன் கொங்கு நாட்டிற்குச் சென்றான். கபிலருக்கு அவன்பால் விடைபெற்று மலையமான் நாட்டுத் திருக்கோவலூர்க்குப் போகவேண்டும் என்ற எண்ணம் மிகுந்தது. சேரமானும் அவர் கருத்தை மதித்து, சிறுபுறம் என நூறாயிரம் கானம் பொன் கொடுத்து நன்றா என்னும் குன்றேறி நின்று தன் கண்ணிற் கண்ட நாடெல்லாம் காட்டிக் கொடுத்தான். இந்நன்றா என்னும் குன்று, கி.பி.ஏழாம் நூற்றாண்டில் நாணா என மருவி வழங்கிற்று. இந்நாளைப் பவானியை நாணா என்று கூறுகின்றனர். அங்குள்ள ஊர்களில் ஒன்று கபிலக்குறிச்சி எனப் பெயர் கொண்டு நிலவுவது இதற்குச் சான்று பகர்கிறது.**[40]

இக்குறிப்பு நாம் முன்னர்ச் சுட்டிய நூலாசிரியராகிய கா.அரங்கசாமி குறிப்பிடும் பவானிக்கும் கபிலருக்கும் உள்ள தொடர்பை உறுதிப்படுத்துகிறது. என்றாலும், பர்கூர், பாரியூர், கபிலமலை ஆகிய ஊர்களுக்கும் கபிலர் பாடலால் மனமுவந்து சேரமான் செல்வக்கடுங்கோ வாழியாதன் அளித்த கொடைநிலமாகிய பகுதியாகிய நன்றா என்னும் குன்றுக்கும் எவ்விதத் தொடர்புமில்லை என்பதையும் சான்றுகள் உறுதிப்படுத்துகின்றன.

கொங்குமண்டலச் சதகச் செய்யுள்களில் ஒன்றான வாலசுந்தரக் கவிராயரின் நூலுக்கு 1971ஆம் ஆண்டு உரை விளக்கக் குறிப்பு நூலினை இயற்றிய கொங்கு நாட்டைச் சேர்ந்த தெய்வசிகாமணிக் கவுண்டர் கருத்து இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாகும். அதன் தொகுப்பு, பின்வருமாறு அமைகிறது.

நன்றா என்ற குன்று இன்றைய பவானி நகரின் வடக்கே மூன்று கிலோ மீட்டர் தொலைவில் உள்ள 'ஊராட்சிக் கோட்டை' மலையாகும். கொங்கு நாட்டுப் பாடல் பெற்ற ஏழு திருத்தலங்களுள் நன்றாவும் ஒன்று. இதனைத் தொகுத்துக் கூறும் வெண்பா ஒன்று இத்தலத்தை நணா என்று குறிப்பிடுகிறது. திருஞானசம்பந்தர் தேவாரத்தில் இது திருநணா எனக் குறிக்கப் பெற்றுள்ளது.

ஊராட்சிக் கோட்டையின் பழம்பெயர் 'கோட்டை' என்பதாகும். இருபுறமும் பவானி, காவிரி ஆறுகளையுடைய பவானிக்கு அரணாக, கோட்டையாக விளங்குவது அம்மலை. சங்க இலக்கியமான பதிற்றுப் பத்தில் 'நன்றா' என்று குறிக்கப்பட்ட பெயர்தான் கி.பி.ஏழாம் நூற்றாண்டில் 'நணா' என மாறியுள்ளது.

காவிரியும் பவானியும் சங்கமம் ஆகும் இடத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் பெயர் 'சங்கமேசுவரன்' என்று வழங்கப் பெற்றாலும் அதன் பழம்பெயர் நண்ணாவுடையார் என்பதாகும். செல்வக்கடுங்கோ வாழியாதன் கபிலருக்குக் கண்ணில் கண்ட நாடெல்லாம் காட்டிக் கொடுத்த நன்றா என்னும் குன்று இன்றைய ஊராட்சிக்கோட்டை மலையேயாகும்.

சிலர் நன்றா என்ற குன்றும், சம்பந்தர் தேவாரம் பாடிய திருத்தலமும் பவானி அல்ல. கபிலமலை என்பர். கபிலமலைக்கு நன்றா, நணா என்னும் தொடர்புடைய எந்தப் பெயரும் வழக்கில் இல்லாத காரணத்தால் அது பொருந்தாது[41] என்று தெளிவான வரையறை தருகிறார்.

இவ்வழியாக கா.அரங்கசாமி வலிந்து திணிக்கும் பறம்புமலை என்பது பாரியூர் அல்லது பர்கூரே என்பதே என்னும் கருத்துக்கும் ஒரு தெளிவான விளக்கத்தைத் தந்திருக்கிறார் தெய்வசிகாமணிக் கவுண்டர். பாரியூர் பாரியின் ஊரா என்னும் வினாவிற்கு அவர்தம் குறிப்புகளிலிருந்து எடுக்கப்பட்ட சான்றுகள் கீழ்வருமாறு அமைகின்றன.

கொங்கு, காஞ்சிக்கோயில் நாட்டில் அமைந்துள்ள ஊர்கள் பன்னிரண்டு. அவற்றுள், நான்காவது ஊராகத் திகழ்வது பாரியூர். கோபிசெட்டிபாளையம் அருகில் இருக்கும் இவ்வூர் மிகவும் தொன்மையானது.[42]

காஞ்சிக்கோயில் நாட்டு ஊர்தொகைப் பாடல்,

**பன்னு தமிழின்பம் சிறந்ததென் காஞ்சி நகர்**
**பண்பான கூகலூரும்**
**பார்புகழ்ந் தருள்கவுந்தப் பாடியுடன்**
**அதிகப்பழனம்உள பாரியூரும்[43]**

என்று கூறுகிறது.

**இப்பாரியூர் என்ற பெயரை வைத்துக் கொண்டு வள்ளல் பாரி கொங்கு நாட்டவர் என்றும், இந்தப் பாரியூர் பாரியின் நினைவாக ஏற்பட்ட ஊர் என்றும் சிலர் கூறி வந்தனர்.[44]**

**ஆனால், தெய்வசிகாமணிக் கவுண்டர் அவர்கட்கு இதில் உடன்பாடு இல்லை. பாரி பற்றிப் பேசும் சந்தர்ப்பந்தம் கிடைக்கும்போதெல்லாம் கோபியை அடுத்துள்ள பாரியூர் பாரியின் நினைவுகூறும் ஊர் அல்ல; பாரியின் பறம்புமலை பாண்டிய நாட்டில் உள்ளது. திருப்பத்தூர் வட்டம், சிங்கம்புணரி என்ற ஊரை அடுத்துள்ள பிரான்மலை என்னும் கொடுங்குன்றமே பாரியின் பறம்புமலை என்று மு.இராகவையங்கார் கூறியுள்ள சான்றுகளை[45]** எடுத்துக்காட்டிக் கூறுவார்.

**அங்குள்ள மலைநாதர் கோயில் பாரீசுவரம் என்றும், இறைவன் பெயர் பாரீசுவரர் என்றும் கல்வெட்டில் காணப்படுவதாக மு. இராகவையங்கார் எழுதியுள்ளார். அங்கு ஓடும் ஆறு தேனாறு. தேனாற்றை மையமாக வைத்து நாட்டின் பகுதிகள் வடபறப்பு நாடு, தென்பறப்பு நாடு என்று வழங்கப்படுகிறது[46]**

**பறம்பு நாடு என்பதே வலித்தல் விகாரம் பெற்றுப் பறப்பு நாடு ஆயிற்று[47]** என்று ஆய்வறிஞர்கள் எடுத்துக் கூறியவற்றை எடுத்துக்காட்டிக் கொங்கு நாட்டுப் பாரியூருக்கும் பாரிக்கும் தொடர்பு எதுவும் இல்லை என்பதை நிலை நிறுத்துவார்.

இதன்மூலம் பறம்புமலைக்கும் கபிலமலை, பர்கூர் - பாரியூர், ஆகியவற்றுக்கும் எவ்விதத்தொடர்புமில்லை என்பது உறுதிப்படுத்தப் பெறுகிறது.

மூன்றாவது மறுப்புக் கருத்து

*ஆசிரியர் இரா. ஜெகதீசன் அவர்கள் ஓம்சக்தி மாத இதழ் வழியாக பாரியின் பறம்பு நாடு என்னும் தலைப்பில் ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார். இக்கட்டுரையில் பாரியின் பறம்புமலை மதுரை மாவட்டத்திலுள்ள மேலவளவுதான் என்று சான்று காட்டி நிறுவ முற்படுகிறார்.* ***இதனைத் தனது இணைய தளத்திலும் பதிவு செய்திருக்கிறார்.[48]***

> ***பறம்பு நாடு பற்றிப் பல கருத்து வேறுபாடுகள் உள்ளன. சிலர் சிவகங்கை மாவட்டம் பிரான்மலையே பாரியின் பறம்புமலை என்றும், இப்பகுதியே பாரியின் பறம்புநாடு என்றும் குறிப்பிடுகின்றனர். மற்றும் சிலர் ஈரோடு மாவட்டம் கோபிச்செட்டிபாளையத்திற்கு அருகில் உள்ள பர்கூர் மலையே பாரியின் பறம்புமலை என்றும், இப்பகுதியே இவன் ஆட்சி செய்த பறம்பு நாடு என்றும் கருதுகின்றனர்[49]***

*எனக் குறிப்பிடும் இவர் பறம்புமலை ஈரோட்டின் அருகில் உள்ள பர்கூர் மலை இல்லை என்பதை முதலில் தெளிவுபடுத்திவிடுகிறார். அதனுடன் பறம்புமலை பிரான்மலை இல்லை என்பதற்கான காரணங்களையும் முன்வைக்கிறார்.*

> ***பிரான்மலையே என்று கருத்துக் கூறுபவர்கள் பறம்புமலை என்ற பெயர் பிற்காலத்தில் மருவி பிரான்மலை என்று அழைக்கப்படுகின்றது என்கின்றனர். மதுரை மாவட்டம் மேலூர் வட்டம் திருமோகூர், திருவாதவூர், மேலவளவு ஊர்க் கல்வெட்டுகள் இப்பகுதி தென்பறப்பு நாடு, வடபறப்பு நாடு ஆகிய நாட்டுப் பிரிவுகளில் இருந்ததாகக் குறிப்பிடுகின்றன. எனவே இம்மேலூரைச் சுற்றி இருந்த பகுதிகளோடு பிரான்மலை வரை பாரியின் பறம்பு நாடு பரவி இருந்தது என்று குறிப்பிடுகின்றனர். பாண்டிய மண்டலச்சதகமும் பாரியின் நாடு பாண்டிய நாட்டுப் பகுதியில் உள்ளதாகக் குறிப்பிடுகிறது என்கின்றனர்.[50]***

*இதுவரையிலும் பறம்புமலை பிரான்மலைதான் என்பதற்கான சான்றுகள் யாவற்றையும் ஒத்துக்கொள்ளும் ஆசிரியர் மேலும் சில சான்றுகளையும் இணைந்தவாறே குறிப்பிடுகிறார்.*

**பிரான்மலை அடிவாரத்தில் உள்ள கொடுங்கைநாதர் கோயில் ஒரு பாடல் பெற்ற தலம். இங்குள்ள மலையை திருஞானசம்பந்தர் (கி.பி.7ஆம் நூற்றாண்டு) கொடுங்குன்றம் என்றே குறிப்பிட்டுள்ளார். பிரான்மலைக் கல்வெட்டுகளும் இவ்வூரைப் புறமலை நாட்டுக் கொடுங்குன்றம் என்றே குறிப்பிடுகின்றன. பறம்பு நாட்டுப் பிரிவு மேலூரைச் சுற்றிய பகுதியில் மட்டுமே அமைந்துள்ளதை இப்பகுதிக் கல்வெட்டுகள் சான்றுகாட்டுகின்றன[51]**

*எனக் குறிப்பிட்டு, பறம்புமலை என்பது பிரான்மலை இல்லை என மறுக்கிறார். இவர், கூடுதலாக முன்னவராகிய கா. அரங்கசாமி கூறிய பர்கூர் மலையே பறம்புமலை என்னும் கருத்தை மேலும் மறுப்பதற்குரிய சான்றுகளை தருகிறார்.*

**கொங்கு நாட்டுப் பிரிவுகளில் ஒன்றான ஒடுவங்க நாட்டிற்குப் பாரி ஒடுவங்க நாடு என்ற பெயர் குறிப்பிடப்பட்டுள்ளதையும், பர்கூர்மலைக்கு வடபால் பாரிஈச்சுரம் என்ற கோயில் உள்ளதாகக் கல்வெட்டுச் சான்றுகள் உள்ளதாகவும் குறிப்பிடுகின்றனர். இவ்வூரின் பழமைக்குச் சான்றாகத் திகழ்பவை இங்குள்ள அமரபணியீசுவரர் கோயில் கல்வெட்டுகளே. இக்கல்வெட்டுகளில் பழமையானது கி.பி. 13-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த வீரபாண்டியனின் கல்வெட்டே. இதற்கு மேலும் இவ்வூர் பழமையான ஊர் என்பதற்குப் பண்டைய சான்றுகள் ஏதுவும் இதுவரை இங்குக் கிடைக்கவில்லை. பாரி ஒடுவங்க நாடு என மிகவும் பிற்காலத்தைச் சேர்ந்த ஒரு கல்வெட்டு மட்டுமே குறிப்பிடுகிறது. ஒடுவங்க நாடும் பிற்காலத்தில் கொங்கு நாட்டின் எல்லையில், கி.பி. 14-ஆம் நூற்றாண்டில் உருவானதே ஆகும். பாரியூர் காஞ்சிக்கூவல் நாட்டுப் பகுதியைச் சேர்ந்ததாகவே கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. பாரி என்பதற்கு பக்கம், பாதுகாப்பு என்ற பொருளை அகராதிகள் குறிப்பிடுகின்றன. பாரிஈச்சுரம் என்ற கோயில் பற்றிச் சரியான கல்வெட்டுச் சான்றைக் கூறாமல் பொதுவாகக் கல்வெட்டுகள் கூறுகின்றன என்கின்றனர்.[52]**

> ***சங்ககால மன்னர்களுக்குக் கோயில்கள் கட்டியதாக இதுவரை சான்றுகள் இல்லை. கொங்கு நாட்டு வரலாற்றைக் கூறும் கொங்குமண்டலசதகங்கள் பாரியின் சமகாலத்தைச் சேர்ந்த அதியமான், குமணன், ஓரி, பேகன் முதலியோர் கொங்கு நாட்டுப் பகுதியை ஆட்சி செய்ததாகக் குறிப்பிடுகின்றன. ஆனால் பாரி கொங்குப் பகுதியை ஆட்சி செய்ததாகக் குறிப்பிடவில்லை. எனவே பாரி கொங்குப் பகுதியில் ஆட்சி செய்யவில்லை என்றே கருதலாம்.***[53]

இவ்வாறு இரா. ஜெகதீசன் குறிப்பிடுவதன்மூலம் கா. அரங்கசாமி கருத்திற்குப் போதுமான சான்றுகள் இல்லை என்பதை உணர்ந்து கொள்ள முடிகிறது.

அதேபோலத்தான் குறிப்பிடும் பாரீச்சுரம் என்னும் பெயருடைய கல்வெட்டு பறம்புமலையாகிய பிரான்மலையின் கோயிலில் இருப்பதை ஏனோ குறிப்பிடவில்லை. பாரியினுடைய நாட்டுப்பிரிவுகளுள் ஒன்று **ஒடுவங்க நாடு** என்பதற்கு எந்தச் சான்றும் குறிப்பிடவில்லை. பாரியினுடைய நாட்டுப் பிரிவுகளைக் குறித்து இதுவரை எந்தச் சான்றுகளும் கிட்டவில்லை. முந்நூறு ஊர்களைக் கொண்ட பறம்புநாடு வடபறம்பு தென்பறம்பு என இருபிரிவுகளாய் இருந்தது என்பது மட்டுமே கிடைக்கின்ற செய்தி. ஒருவேளை பாரியினுடைய நாட்டுப் பிரிவுகளில் ஒடுவங்கம் என்னும் பெயர் இருப்பதாகக் கருதினால் இன்றும் பிரான்மலைக்கு அடுத்துள்ள மற்றொரு மலையாகிய வண்ணார் இருப்பு மலைக்கு முன்னால் அடிவாரத்தில் அமைந்திருக்கும் ஊரின் பெயர் **ஒடுவன்பட்டி** என்பதை அவருக்குச் சான்றாகக் கூற முடியும்.

மேலும், சில கல்வெட்டுச் சான்றுகளைக் காட்டுகிறார். வரலாற்றாசிரியர்கள் முன்பே குறிப்பிட்ட பறம்புநாட்டின் இருபிரிவுக ளாகிய வடபறம்பு நாடு தென்பறம்பு நாடு என்னும் பிரிவுகளை அவரும் குறிப்பிட்டுக் காட்டுகிறார்.

> ***மதுரை மாவட்டம், மேலூர் வட்டத்தில், மேலூரிலிருந்து சுமார் 11 கி.மீ தொலைவில் உள்ளது மேலவளவு என்ற ஊர். இவ்வூருக்கு***

*மேற்கில் அழகர்மலை, முறிமலைக்குன்று, சோமகிரிக்குன்று முதலிய மலைகள் அமைந்துள்ளன. இம்மலைப் பகுதியில் விழும் மழை நீரைத் தேக்கி மாறவர்மன் சுந்தரபாண்டியன் கி.பி.1238-ஆம் ஆண்டு ஏரியையும், அதைப் பாதுகாக்கும் விதத்தில் கலிங்கையும் கட்டிவைத்துள்ளான். இதைப் பற்றிய கல்வெட்டுச் சான்று ஒன்றும் அங்குள்ளது. இதைத் தவிர, இந்த ஏரியின் நீர்நிர்வாகத்தைப் பற்றி கி.பி. 1415-ஆம் ஆண்டைச் சேர்ந்த விஜயநகர மன்னன் மல்லிகார்ச்சுனராயரின் மகன் விருபாக்சராயனின் கல்வெட்டு ஒன்றும் இங்குப் பொறிக்கப்பட்டுள்ளது.*[54]

*இங்குள்ள கல்வெட்டுகளில் இவ்வூர் வடபறப்பு நாட்டு அழகர் திருவிடையாட்டம் பறம்பான திருநாராயணமங்கலம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இதன்படி, இவ்வூரின் பழைய பெயர் பறம்பு என்றும், இது வடபறப்பு நாட்டுப் பிரிவில் அமைந்திருந்தது என்றும், இடைக்காலத்தில் (கி.பி.10-ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 14 ஆம் நூற்றாண்டு வரை) இவ்வூர் பிராமணர்களின் ஊராகவும், திருநாராயணமங்கலம் என்று பெயர்மாற்றம் பெற்றும் அழகர்கோவிலுக்குக் (திருவிடையாட்டம்) கொடை கொடுக்கப்பட்ட ஊராகவும் குறிப்பிடப்பட்டுள்ளது.*[55]

*பாண்டிய நாட்டுப் பிரிவுகளில் ஒன்று பறப்பு நாடு என்பதாகும். இந்நாட்டுப் பிரிவு இவ்வூரின் பெயரில் உருவான பெயராகக் கருதலாம். மேலூருக்கு அருகில் உள்ள பனங்காடி என்ற ஊரில் உள்ள கி.பி. 13-ஆம் நூற்றாண்டின் தொடக்ககாலக் கல்வெட்டில் பறப்பு நாடு என்றும், பின்னர் இந்நாட்டுப் பிரிவு வடபறப்பு நாடு என்றும், தென்பறப்பு நாடு என்றும் இருபிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன*[56]

எனக் குறிப்பிடும் ஆசிரியர் எந்தச் சான்றுகளும் இன்றி இதில் மேலவளவிற்குத் தெற்கே உள்ள பகுதி தென்பறப்பு நாடு என்றும், இவ்வூரும், இவ்வூருக்கு வடக்குப் பகுதியும் வடபறப்பு நாடு என்றும் பிரிக்கப்பட்டுள்ளன எனப் பொதுவான செய்தியாகவே குறிப்பிடுகிறார். அவர் குறிப்பிட்டுள்ள அத்தனை

சான்றுகளும் உண்மையே. ஆனால் சற்றும் பொருத்தமில்லாமல் அந்தக் கல்வெட்டுகள் கிடைத்த இடத்தைக் கொண்டு இதிலிருந்து இது வடக்கு என்றும் அதற்கு எதிர்த்திசை தெற்கு என்றும் கூறுவது பொருத்தமானதாக இல்லை.

நிறைவாக

1. காலந்தோறும் பறம்புமலை குறித்த விமர்சனங்களும் மறுப்புகளும் தொடர்ந்து கொண்டே இருக்கின்றன என்பதற்குக் காரணம் பாரியின் புகழும் பறம்பின் வளமுமேயாகும்.

2. இத்தகு வரலாற்றுச் சிறப்பு மிக்க பெருமையைத் தங்களுடையது எனக் கொள்வதற்கே ஒவ்வொருவரும் முயல்கின்றனர் என்பது அவர்தம் சான்றுகள் மூலம் மெய்ப்பிக்கப் பெறுகிறது.

3. ஆனால், அவர்கள் குறிப்பிடும் சான்றுகள் தங்களின் உறுதிப் பாட்டை நிலைநிறுத்தவில்லை என்பதை இவ்வியல் எடுத்து மொழிகிறது.

4. காலந்தோறும் பறம்புமலை ஆய்வுக்கும், பதிவுகளுக்கும் உட்படுகிறது என்பதை இதன்மூலம் ஆழமாக உணர்ந்து கொள்ள முடிகிறது.

## இயல் நான்கு : சான்றெண் விளக்கம்


1. https://ta.wikipedia.org/wiki பிரான்மலை ஊராட்சி
2. https://groups.yahoo.com/neo/groups/agathiyar/conversations/messages/54981
3. பாரதியார், பாரதியார் கவிதைகள், சீட்டுக்கவி.
4. கிருஷ்ணவேணியம்மாள், பறம்புநாடும் பாரிமகளிரும், ப.1
5. இராகவையங்கார், ரா., பாரிகாதை, முகவுரை, ப.4
6. ஜகந்நாதன்., கி.வா., பாரிவேள், முன்னுரை ப.V
7. பரமகுரு. மரு., பறம்புமலை திருக்கொடுங்குன்ற வரலாறு, பக்.102-104
8. சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப. 1058
9. https://ta.wikipedia.org/wiki/பாரியூர்_கொண்டத்துக் காளியம்மன் கோயில்.
10. அரங்கசாமி. கா., கபிலர், ப.56
11. ஜெகதீசன், இணையதளம். http://melavalavu.blogspot.in/2015/01/history-of-melavalavu.html
12. முத்துசாமிக் கோனார், தி.அ. கொங்கு மண்டல சதகங்கள், ஊர்த்தொகை, முகவுரை. பக்.205-206
13. மேலது. ப.206
14. மேலது.220
15. https://ta.wikipedia.org/wiki/பாரியூர்_கொண்டத்துக் காளியம்மன் கோயில்.
16. http://melavalavu.blogspot.in/2015/01/history-of-melavalavu.html
17. சிங்காரவேலு முதலியார், ஆ., அபிதான சிந்தாமணி, ப.1058
18. சிங்காரவேலு முதலியார், ஆ., அபிதான சிந்தாமணி, ப.1094
19. அரங்கசாமி, கா. கபிலர், ப.57

20. மேலது, ப.57.

21. மேலது. ப.,58

22. மேலது. ப.,58

23. கபிலர், புறநானூறு, பா.எ.113

24. மேலது. பா.எ.117

25. மேலது. புலியூர்க்கேசிகன் உரை, ப.133.

26. திருவள்ளுவர், திருக்குறள் எண். 1039

27. அரங்கசாமி, கா., கபிலர், ப.58

28. மேலது, ப.58

29. மேலது,

30. மேலது,

31. மேலது.

32. மேலது.

33. மேலது.

34. மேலது, ப.59

35. மேலது.

36. மேலது.

37. சதகம், தமிழ் இணையப் பல்கலைக் கழக இணையப் பக்கம்.

38. மேலது.

39. துரைசாமிபிள்ளை, ஔவை. சேரமன்னர் வரலாறு, ப.256

40. தெய்வசிகாமணிக் கவுண்டரின் ஆய்வுகள், அச்சில் வராத முனைவர் பட்ட ஆய்வேடு, ப.178.

41. கொங்கு மண்டல சதகம், ஊர்த்தொகைப் பாடல், காஞ்சிக்கோயில் நாடு, ப.231

42. தெய்வசிகாமணிக் கவுண்டரின் ஆய்வுகள், அச்சில் வராத முனைவர் பட்ட ஆய்வேடு, ப.178.

43. இராகவையங்கார், சாசனத் தமிழ்க்கவி சரிதம், ப.7.

44. கவ்வெட்டு ஆண்டறிக்கை 1932 எண்:17, 1916 எண் 100 / தெய்வசிகாமணிக் கவுண்டரின் ஆய்வுகள், அச்சில் வராத முனைவர் பட்ட ஆய்வேடு, ப.178.

45. தெய்வசிகாமணிக் கவுண்டரின் ஆய்வுகள், அச்சில் வராத முனைவர் பட்ட ஆய்வேடு, ப.178.

46.http://melavalavu.blogspot.in/2015/01/history-of-melavalavu.html

47. மேலது,

48. மேலது,

49. மேலது,

50. மேலது,

51. மேலது,

52. மேலது,

53. மேலது,

54. மேலது,

55. மேலது,

56. மேலது,

57. மேலது,

# முடிவுரை

காலந்தோறும் பறம்புமலை என்னும் தலைப்பில் செய்யப்பட்ட ஆய்வின் முடிவுகள் பின்வருமாறு

பாரி மன்னன் ஆண்ட நாடு பறம்பு நாடு என்பதும், அது முந்நூறு ஊர்களை உடையதாக விளங்கியது.

பறம்புநாடு பாண்டியநாட்டின் எல்லைப் பகுதியை ஒட்டியதாக அமைந்திருந்ததைச் சான்றுகளின்வழி நிறுவ இயலுகிறது.

பாரியாண்ட முந்நூறு ஊர்களுக்கும் தலைமையிடமாக விளங்கியது பறம்பு எனும் பெயருடைய மலையேயாகும். பறம்புமலை பின்னாளில் புறமலை எனவும், பறம்புநாடு புறமலை நாடு எனவும், பக்தி இலக்கியக் காலத்தில் திருக்கொடுங்குன்றம் எனவும் தற்காலத்தில் பிரான்மலை எனவும் பல பெயர்களில் வழங்கப் பெறுகிறது.

பறம்பின் வளத்தையும் பாரியின் வள்ளன்மையையும் விரிவாகப் பாடிய கபிலர் பாரியின் மரணத்தைக் குறித்து எவ்விதத் தகவலையும் தம் பாடலில் புலப்படுத்தவில்லை. மாறாக, பாரியின் மறைவுக்குப் பின்னர் அவர் பாடும் கையறுநிலைப் பாடல்களிலும், பறம்பினைப் பிரிந்து செல்லும் வருத்தம் தோய்ந்த பாடல்களிலும் ஒருவாறு ஊகித்தறிவதற்கான செய்திகள் சில உண்டு. அவையும் ஆய்வுக்குட்பட்டவையே.

பாரி ஆண்ட பறம்பு நாட்டின் எல்லைகளாக,

| | |
|---|---|
| **தென்னெல்லை** | **திருமோகூர் முதல் கீழ் மேலோடிய வையையாற்றங்கரை- பறம்புக்குடி** |
| **கிழக்கெல்லை** | **பறம்புக்குடி- காளையார் கோயில் - முத்து நாடு - அனுமந்தக்குடி- பறம்பு வயல்** |

| | |
|---|---|
| **வடவெல்லை** | **பறம்பு வயல் - கானாடுகாத்தான், சோனாபட்டு - திருக்கோளக்குடி - பூலாங்குறிச்சி - இடையாற்றூர் குடுமியான்மலைப்புறம் - பறம்பூர்** |
| **மேற்கெல்லை** | **பறம்பூர் - மருங்காபுரி - துவரங்குறிச்சி - நத்தம் மலைகளின் கிழக்குப் பகுதி - அழகர் மலைக் கிழக்குப் பகுதி - பறம்புக் கண்மாய் - திருமோகூர்** |

என்பன அமைந்திருந்தன.

கபிலரே பறம்புமலையை அதிகப் பாடல்களில் பாடியுள்ளார். அவருடைய பாடல்கள் புறத்திணைப் பாடல்களில்பெயர் சுட்டியும், அகத்திணைப் பாடல்களில் வளங்களைச் சுட்டியும் பறம்பின் வளத்தைப் புலப்படுத்துகின்றன.

கபிலர் பாடியனவாகப் புறநானூற்றில் இருபத்தெட்டுப்பாடல்கள் இடம்பெற்றுள்ளன. இவை நேரடியாகவே பறம்பின் வளத்தைப் புலப்படுத்துவனவாக அமைகின்றன. இவை தவிர, கபிலரால் பாடப்பட்ட நற்றிணைப் பாடல் (253) பறம்பின் வளத்தை நேரிடையாக வெளிப்படுத்துகிறது.

கபிலர் தவிர பறம்பின் வளத்தைப் பாடியோர் ஔவையார், பரணர், நக்கீரர், நல்லூர் நத்தத்தனார், புறத்திணை நன்னாகனார், பெருஞ்சித்திரனார் ஆகிய இன்னும் பலராவர்.

கபிலர் தம் பாடல்களில் சுட்டிய பறம்புமலையின் இயற்கை வளங்கள் யாவும் திருஞானசம்பந்தர் பாடிய திருக்கொடுங்குன்றத் தேவாரப் பாடல்களிலும் பதிவு செய்யப்பெற்றுள்ளன. பல நூற்றாண்டுகள் கடந்தும் இம்மலை இயற்கை வளம் குன்றாமல் விளங்கியது என்பதனை இது உறுதிப்படுத்துவதாக அமைகிறது.

பறம்புநாட்டின் தலைநகராக விளங்கிய பறம்புமலை பிற்கால ஆலய அமைப்புமுறைகளின்வழி, பாண்டி நாட்டோடு இணைந்ததாகவும் பாண்டி நாட்டுத் திருத்தலங்களில் திருஞான சம்பந்தரால் முதலில் பாடப்பட்டதாகவும் சான்றுகள் உறுதி செய்கின்றன.

திருஞான சம்பந்தர் மட்டுமின்றி, திருநாவுக்கரர், சுந்தரர், மாணிக்கவாசகர், கபிலதேவர், சேக்கிழார், அருணகிரி நாதர், வள்ளலார் போன்றோரும் திருக்கொடுங்குன்றத்தைத் தங்களது பாடல்களால் பதிவு செய்துள்ளனர்.

திருக்கொடுங்குன்ற ஆலயத் தோற்றத்திற்குக் காலந்தோறும் பல மன்னர்கள் தங்களது பங்களிப்பினை அளித்துள்ளனர். பாண்டிய, சோழ மன்னர்களும், நாயக்க சிற்றரசர்களும், வேளிர் குறுநில அரசர்களும், சிவகங்கை, இராமநாதபுரச் சீமை அரசர்களும் இவர்களுள் குறிப்பிடத் தக்கவர்கள் ஆவர். அருவியூர் நகரத்தான் என்னும் வணிகப் பிரிவினைச் சேர்ந்த மக்களும் இதற்கு உறுதுணை புரிந்துள்ளனர் என்பதைக் கல்வெட்டு மற்றும் செப்பேட்டு ஆவணங்கள் உறுதி செய்கின்றன.

பக்தி இலக்கிய காலத்திற்குப் பின்னால் பறம்புமலை குறித்த பதிவுகள் அருகியே கிடைக்கின்றன. எனினும் இம்மலை பிற்காலப் பாண்டியப் பேரரசின் ஆளுகையிலும், சோழப் பேரரசின் ஆளுகையிலும் தொடர்ந்து மாறி மாறி இருந்து வந்துள்ளது.

பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதி ஆங்கிலேயரின் ஆளுகைக்கு உட்பட்டதாகத் தமிழகம் விளங்கிற்று. இக்காலத்தில் பாண்டிநாட்டுப் பகுதிகள் பாளையங்களின் பிரிவுகளுக்குட்பட்டன. அவ்வகையில், இக்காலத்தில் இம்மலை புதுக்கோட்டை அரசோடும், சிவகங்கைச் சீமையோடும், இராமநாதபுரச் சீமையோடும் இணைந்து விளங்கியிருக்கிறது.

ஆங்கிலேயரின் ஆதிக்கத்துக்கு எதிராகப் போராடிய புரட்சி வீரர்களுக்குப் பிரான்மலை அரணாகவும் பாதுகாப்பு மிகுந்த கோட்டையாகவும் விளங்கியுள்ளது.

பிரான்மலையில் ஆயுதச் சாலையும் பீரங்கி செய்யும் தொழிற்சாலையும் இருந்திருக்கின்றன. ஆயுதங்களைப் பாதுகாக்கின்ற கிடங்குகளும் இருந்திருக்கின்றன என்பதும் அங்கிருந்து கைப்பற்றப் பெற்ற ஆயுதங்களின் பட்டியல்களும், அங்கு நடந்த முதல் இராக்கெட் போர் குறித்த செய்திகளும் இதனை உறுதிசெய்கின்றன.

பின்னாளில் இது ஆங்கிலேயருக்கும் உரிய கோட்டையாகவும் மாறிற்று என்பதை அவ்வக்கால ஆங்கிலேய அதிகாரிகளின் இராணுவக் குறிப்புகளின் மூலம் உணர்ந்து கொள்ள முடிகிறது.

வீரபாண்டியக் கட்டபொம்மன் இறுதியில் ஆங்கிலேயரின் பிடியில் அகப்பட்ட இடமாகப் பிரான்மலைப் பகுதி விளங்குவதோடு, மருதுபாண்டியர்களின் இறுதிப்போரும் பிரான்மலை சார்ந்த பகுதிகளிலேயே நிகழ்ந்திருக்கிறது என்பதும், ஊமைத்துரை இறுதியாகப் பதுங்கி-யிருந்த ஊமையன் குடம்பு என்னும் இடம் பிரான்மலையின் உச்சியில் அமைந்துள்ளது என்பவற்றின் வழியாக இம்மலையின் அரசியல் தொடர்பு தெரிய வருகிறது.

இந்நாளில் பிரான்மலையில் மறச்சூழலை மாற்றி அறச்சூழலை ஏற்படுத்த மருதுபாண்டியர் முனைந்தனர்., ஆதலால் திருவண்ணாமலையில் இருந்து இயங்கி வந்த திருக்கயிலாய பரம்பரை திருவண்ணாமலை ஆதீனத்தின் அறப்பணிகளைப் பிரான்மலையில் இருந்து செய்யும்படி வேண்டிய உதவிகளைச் செய்தனர். இதனால் இங்கு திருமடம் உருவானது என்பதும், பின்னாளில் (இன்றுவரை) இத்திருமடம் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம் என்ற பெயரில் குன்றக்குடியில் இருந்து இயங்கி வருகிறது.

பறம்புமலையில் (பிரான்மலையில்) நடைபெறுகிற திருவிழாக்களும், பாரிவிழாவும் பிற சிறப்பு விழாக்களும் முந்தைய வரலாற்றோடு தொடர்புடையனவாகும்.

கபிலர் தொடங்கி மகாகவி பாரதியார் தொடர்ந்து, கவிஞர் மரு.பரமகுரு உள்ளிட்ட தற்காலக் கவிஞர்கள் வரையிலும் பறம்புமலை என்னும் பிரான்மலை குறித்துப் பாடியிருக்கின்றனர்.

தற்கால இலக்கியங்களிலும் பறம்பு குறித்த பதிவுகள் தொடர்ந்து நிலவி வருகின்றன என்றாலும், பறம்பின் அமைவிடம் குறித்த ஐயங்கள் மிகுதியாக எழுந்துள்ளன.

பிற்காலத்தில் ஏற்பட்ட தரவுத் தடுமாற்றங்களால் பறம்புமலை இதுதான் எனப் பலரும் பலவிடங்களை சுட்டிக் காட்டுகின்றனர்.

பறம்புமலை என்பது தற்போதுள்ள பிரான்மலையே என்பதை இவ்வாய்வு கல்வெட்டு, இலக்கிய நிகழ்வுச் சான்றுகளால் உறுதிப்படுத்துகிறது.

இதனைத் தொடர்ந்து, வரலாற்று நோக்கில் பறம்புமலை, தமிழ் இலக்கியங்களில் பறம்புமலை என்பதான பொருண்மைகளில் மேலாய்வுகள் நிகழ்த்த இவ்வாய்வு வழிகோலுகிறது.

# துணைநூற்பட்டியல்


| ஆசிரியர் | நூல் விவரம் |
|---|---|
| **அப்பாதுரைப் பிள்ளை, கா.,** | **குமரிக்கண்டம் அல்லது கடல் கொண்ட தென்னாடு**, *திருநெல்வேலி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட் வெளியீடு. மு.ப., மார்ச் 1941.* |
| **அருணாசலம். மு., (ப.ஆ.)** | **பிரபந்த மரபியல்,** *அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம், சென்னை - 5. 1976.* |
| **ஆசிரியர்குழு,** | **தொல்காப்பியம்,** *சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை, (மர்ரே பதிப்பின் மறு பதிப்பு), இரண்டாம் பதிப்பு, ஜுன், 1978.* |
| **இரகுநாதன்,ம.,** | **பண்டைத் தமிழர் பண்பாட்டுத் தடங்கள்,** *எஸ்எஸ்ஆர் பிறிண்டேர்ஸ், 72, பலாலி வீதி, யாழ்ப்பாணம், மு.ப. 2009.* |
| **இராகவையங்கார், மு.,** | **பெருந்தொகை,** *செந்தமிழ்ப்பிரசுரம், மதுரைத் தமிழ்ச்சங்க முத்திராசாலை, மதுரை, மு.ப., 1935.* |
| **இராகவையங்கார், மு.,** | **பெருந்தொகை,** *செந்தமிழ்ப்பிரசுரம், மதுரைத் தமிழ்ச்சங்க முத்திராசாலை, மதுரை, மு.ப., 1935.* |
| **இராகவையங்கார், மு.,** | **சாசனத் தமிழ்க்கவி சரிதம்,** ......, *மானாமதுரை 1958.* |

| | |
|---|---|
| **இராகவையங்கார், ரா.,** | **தமிழக குறுநில வேந்தர்கள்,** *பாரதி பதிப்பகம், உஸ்மான் சாலை, தி.நகர், சென்னை. மு.ப. 1994.* |
| **இராகவையங்கார் சுவாமிகள்உ.வே.ரா.,** | **அகநானூறு, (மூலமும் உரையும்)** *சென்னை மயிலாப்பூர் கம்பர் விலாஸம் வெளியீடு, ருத்தோத்காரிஆண்டு.* |
| **இராசமாணிக்கம், மா.,** | **தமிழ்நாட்டு வடஎல்லை,** *எடுகேஷனல் பப்ளிக் கம்பெனி, நுங்கம்பாக்கம், சென்னை, மு.ப.1948.* |
| **இராசமாணிக்கனார், மா. டாக்டர்,** | **தமிழக ஆட்சி,** *மெட்ரோபாலிடன் பிரிண்டர்ஸ், சென்னை - 2 இ.ப. 1972.* |
| **இராசமாணிக்கனார், டாக்டர்.,** | **நாற்பெரும் புலவர்கள்,** *பூரம்பதிப்பகம், 59, ராஜூநாயக்கர்தெரு, மேற்குமாம்பலம், சென்னை - 33, மு.ப. 1944.* |
| **இராசமாணிக்கனார், மா. டாக்டர்,** | **பல்லவர் வரலாறு,** *திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிட்., 522, டி.டி.கே. சாலை, சென்னை-18 மு.ப., 1944.* |
| **இராசமாணிக்கனார், மா. டாக்டர்,** | **பெரியபுராண ஆராய்ச்சி,** *அலமுபதிப்பகம், 9 அய்யா தெரு, இராயப்பேட்டை, சென்னை-14., மு.ப. நவம்பர் 2002.* |
| **இராசமாணிக்கனார், மா.,** | **சைவ சமயம்,** *செல்விபதிப்பகம், காரைக்குடி, இரண்டாம்பதிப்பு, 1959.* |

**இராசமாணிக்கனார், மா.,** **சைவ சமய வளர்ச்சி,** *பூங்கொடிபதிப்பகம், 14, சித்திரைக்குளம் மேற்குத்தெரு, மயிலாப்பூர், சென்னை - 600 004, மு.ப. 1958.*

**இராசமாணிக்கனார், மா.,** **சோழர் வரலாறு, (***3 பாகங்கள்), பூரம் பதிப்பகம், 2-59. ராஜுநாயக்கர் தெரு, மேற்குமாம்பலம், சென்னை - 600 033. ம.ப.2005.*

**இராசமாணிக்கனார், மா.,** **தமிழக ஆட்சி,** *மெட்ரோபாலிடன் பிரிண்டர்ஸ், சென்னை, இ.ப. 1972.*

**இராசமாணிக்கனார், மா.,** **தமிழ்மொழி– இலக்கியவரலாறு,** *சங்ககாலம், பூங்கொடி பதிப்பகம், 14, சித்திரக்குளம் மேற்கு, மயிலாப்பூர், சென்னை - 4, ஐந்தாம் பதிப்பு டிசம்பர் 1996.*

**இராசமாணிக்கனார்., மா., டாக்டர்.,** **கால ஆராய்ச்சி,** *அலமுபதிப்பகம், 9, அய்யாமுதலிதெரு, இராயப்பேட்டை, சென்னை - 600014, மு.ப.டிசம்பர் 2003.*

**இராசு. செ,** **ஈரோடு மாவட்டக் கல்வெட்டுக்கள்,** *தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை, சென்னை. மு.ப.2007*

**இராசு. செ,** **ஈரோடு மாவட்ட வரலாறு,** *கொங்கு ஆய்வு மையம் ஈரோடு. மு.ப.2007*

**இராசு. செ,** **கொங்கு வேளாளர் செப்பேடு பட்டயங்கள்,** *கொங்கு ஆய்வு மையம் ஈரோடு. மு.ப.2007*

| | |
|---|---|
| **இராசு. செ,** | **எங்கள் பவானி,** *ஈரோடு வரலாற்றுச் சங்கம், ஈரோடு, மு.ப.1967* |
| **இராசு. செ,** | **கொங்கு வேளாளர் கல்வெட்டும், காணிப்பாடலும்** *கொங்கு ஆய்வு மையம் ஈரோடு. மு.ப.2007* |
| **இராமச்சந்திர செட்டியார், சி.எம்.,** | **கொங்குநாட்டு வரலாறு,** *பேரூர் சாந்தலிங்க மட வெளியீடு. மு.ப.1929* |
| **இராமச்சந்திரதீட்சிதர், வி.ஆர்., (மூ.ஆ) கோவிந்தன், கா.,(மொ.பெ.ஆ.)** | **தமிழர் தோற்றமும் பரவலும்,** *திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிட், 142, டி.டி.கே. சாலை, சென்னை - 18, மு.ப. 1947.* |
| **இராமன், கே.வி.,** | **பாண்டியர் வரலாறு,** *தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, மு.ப. 1977.* |
| **உலகநாதபிள்ளை, எல்.,** | **முதலாவது கரிகாலன் என்கிற சோழன் கரிகாற் பெருவளத்தானைப் பற்றிய ஆராய்ச்சி,** *லாலி எலெக்டிரிக் அச்சுக்கூடம், கருணாநிதி வைத்தியசாலை, தஞ்சாவூர், மு.ப. 1913.* |
| **எட்வார்ட்., ஸ்ரீ சுவர்னம்** | **பாண்டியவம்ச பாரம்பரை,** *விவேகபாநு அச்சியந்திர சாலை வெளியீடு, மதுரை, மு.ப.1911* |
| **கண்ணப்பமுதலியார், பாலூர், வித்துவான்,** | **பாண்டிநாட்டுக் கோயில்கள்,** *ஸ்டார்பிரசுரம் 66, பெரியதெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5, மு.ப. டிசம்பர் 1957.* |
| **கண்ணப்பமுதலியார், பாலூர், வித்துவான்,** | **சங்க கால வள்ளல்கள்,** *அம்மையப்பர் அகம், 77, அவதானம் பாப்பையா தெரு, சூளை, சென்னை, மு.ப. 1951.* |

| | |
|---|---|
| **கண்ணப்பமுதலியார், பாலூர்,,** | **தமிழ்ப் புலவர் அறுவர்,** *வேங்கடராமா அண்டு கம்பெனி, ஆண்டர்சன்தெரு, ஜார்ஜ்டவுன், சென்னை. மு.ப. 1953.* |
| **கண்ணப்பமுதலியார், வித்துவான், பாலூர்,** | **கட்டுரைக்கொத்து,** *அம்மையப்பர் அகம், 43, விஜய விக்னேஸ்வரர் கோவில் தெரு, சூளை, சென்னை - 7, மு.ப. 1966.* |
| **கந்தசுவாமி முதலியார், வே.,** | **சங்ககாலத் தமிழ்நாடு,** *ஒற்றுமைஆபீஸ், தியாகராய நகர், சென்னை, மு.ப. 1945.* |
| **கந்தையா, ஆ.,** | **செவ்வேள்,** *நடனாலயம், 4, 40ஆவது ஒழுங்கை, கொழும்பு - 6, மு.ப. 1985.* |
| **கந்தையா, ந.சி.,** | **தென்னிந்தியக் குடிகளும் குலங்களும்,** *வெளியீடு உதயம் அச்சகம் சென்னை, மு.ப. அக்டோபர் 1999.* |
| **கந்தையா., ந.சி.,** | **தமிழர் சரித்திரம்,** *ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம், பவழக்காரத் தெரு, சென்னை - 1, மு.ப. 1964.* |
| **கந்தையாபிள்ளை, ந.சி.** | **வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட பழந்தமிழர்,** *புரொகிரசிவ் அச்சகம், சென்னை, இ.ப., 1948.* |
| **கந்தையாபிள்ளை, ந.சி.,** | **சரித்திர காலத்திற்கு முற்பட்ட தமிழகம்,** *ஒற்றுமை ஆபீஸ், தியாகராய நகர், மதராஸ், மு.ப.1943.* |

**கமால், எஸ்.எம், டாக்டர்,** **மறவர் சீமை வீரன் மயிலப்பன்,** *சர்மிளா பதிப்பகம், 21, ஈசாபள்ளிவாசல் தெரு, இராமநாதபுரம் - 623501, மு.ப.2001.*

**கமால், எஸ்.எம், டாக்டர்,** **மாவீரர் மருதுபாண்டியர்,** *சர்மிளா பதிப்பகம், 21, ஈசா பள்ளிவாசல் தெரு, இராமநாதபுரம் - 623501. மு.ப.1989.*

**கமால், எஸ்.எம்.,** **சீர்மிகு சிவகங்கைச் சீமை,** *பசும்பொன் மாவட்டகலை, இலக்கிய வரலாற்று ஆய்வுமையம், மன்னர் மேனிலைப்பள்ளி வளாகம், சிவகங்கை - 630561, மு.ப. பிப்ரவரி 1997.*

**கமால், எஸ்.எம்.,** **சேதுபதி மன்னர் கல்வெட்டுக்கள்,** *சர்மிளா பதிப்பகம், 21, ஈசா பள்ளிவாசல் தெரு, இராமநாதபுரம், 623 501, மு.ப., 2002.*

**கமால், எஸ்.எம்.,** **சேதுபதி மன்னர் செப்பேடுகள்,** *சர்மிளாபதிப்பகம், 21, ஈசா பள்ளிவாசல் தெரு, இராமநாதபுரம், 623 501, மு.ப. டிசம்பர் 1992.*

**கமால், எஸ்.எம்.,** **சேதுபதி மன்னர் வரலாறு,** *சர்மிளா பதிப்பகம், 21, ஈசா பள்ளிவாசல் தெரு, இராமநாதபுரம், 623 501, மு.ப., டிசம்பர் 2003.*

| | |
|---|---|
| **கமால், எஸ்.எம்.,** | **விடுதலைப்போரில் சேதுபதி மன்னர்,** *ஷர்மிளா பதிப்பகம், 21, ஈசா பள்ளிவாசல் தெரு, இராமநாதபுரம் - 623501, மு.ப. - மார்ச் 1987.* |
| **கமால்., எஸ்.எம்., முகம்மதுசெரீபு,** | **இராமநாதபுரம் மாவட்டம் – வரலாற்றுக் குறிப்புகள்,** *லெனின் சமூக வரலாற்று ஆராய்ச்சி நிறுவனம், பரமக்குடி - 623707, மு.ப. ஜுன் 1984.* |
| **கலைமணி, என்.வி., (தொ.ஆ)** | **உலக வரலாற்றில் விடுதலை வீரர்கள்,** *மெய்யம்மை நிலையம், புதியஎண் 36, தியாகிகள் ரோடு, தேவகோட்டை, சிவகங்கை மாவட்டம், மு.ப. - செப்டம்பர் 2002.* |
| **கனகசபை, வி. (ஆங்கில நூலாசிரியர்), அப்பாத்துரை, கா.,** | **ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம்,** *திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம், லிமிடெட், திருநெல்வேலி-6, மு.ப.- 1962.* |
| **கிருங்கை சேதுபதி,** | **இந்திய இலக்கியச் சிற்பிகள்– குன்றக்குடி அடிகளார்,** *சாகித்திய அகாதெமி, புதுதில்லி-110001. - இ.ப, 2013.* |
| **கிருஷ்ண வேணியம்மாள், எஸ், பண்டிதை.,** | **பறம்புநாடும் பாரிமகளிரும்,** *கே.பழனியாண்டிப் பிள்ளை கம்பெனி, சென்னை - மு.ப., 1936* |
| **குருசாமி, ம.ரா.போ.** | **கபிலம்,** *நியூ செஞ்சுரி புக்ஹவுஸ், சென்னை, ம.ப. 2010.* |

**குன்றக்குடிஅடிகளார், தவத்திரு.,** **ஆலயங்கள் சமுதாய மையங்கள்,** *வானதி பதிப்பகம், 13, தீனதயாளுதெரு, தியாகராயநகர், சென்னை - 600017, நான்காம்பதிப்பு- ஏப்ரல் 2000.*

**குன்றக்குடிஅடிகளார், தவத்திரு., பொன்னம்பல அடிகளார், தவத்திரு (ப.ஆ.)** **குன்றக்குடி அடிகளார் நூல்வரிசை, தொகுதி 5,** *மணிவாசகர் பதிப்பகம், 31, சிங்கர்தெரு, பாரிமுனை, சென்னை - 600108, மு.ப. - 2001.*

**குன்றக்குடிஅடிகளார், தவத்திரு., பொன்னம்பல அடிகளார், தவத்திரு (ப.ஆ.)** **குன்றக்குடி அடிகளார் நூல்வரிசை, தொகுதி 6,** *மணிவாசகர் பதிப்பகம், 31, சிங்கர்தெரு, பாரிமுனை, சென்னை - 600108, மு.ப. - 2001.*

**குன்றக்குடிஅடிகளார், தவத்திரு., பொன்னம்பல அடிகளார், தவத்திரு (ப.ஆ.)** **குன்றக்குடி அடிகளார் நூல்வரிசை, தொகுதி 10,** *மணிவாசகர் பதிப்பகம், 31, சிங்கர்தெரு, பாரிமுனை, சென்னை - 600108, மு.ப. - 2001.*

**குன்றக்குடிஅடிகளார், தவத்திரு., பொன்னம்பல அடிகளார், தவத்திரு (ப.ஆ.)** **குன்றக்குடி அடிகளார் நூல்வரிசை, தொகுதி 11,** *மணிவாசகர் பதிப்பகம், 31, சிங்கர்தெரு, பாரிமுனை, சென்னை - 600108, மு.ப. - 2001.*

**குன்றக்குடிஅடிகளார், தவத்திரு., பொன்னம்பல அடிகளார், தவத்திரு (ப.ஆ.)** — **குன்றக்குடி அடிகளார் நூல்வரிசை, தொகுதி 16,** *மணிவாசகர் பதிப்பகம், 31, சிங்கர்தெரு, பாரிமுனை, சென்னை - 600108, மு.ப. - 2002.*

**கோவிந்தனார், கா.** — **காலந்தோறும் தமிழகம்,** *எழிலகம், திருவத்திபுரம், மு.ப.1998.*

**கோவிந்தனார், கா., புலவர்,** — **புலாஅம் பாசறை,** *எழிலகம், 46, செல்வ வினாயகர் கோயில் தெரு, திருவத்திபுரம் (செய்யாறு) 604407, மு.ப. - ஏப்ரல் 1997.*

**கோவிந்தனார், கா.,** — **குறுந்தொகைக் கோவை,** *நாதன் பதிப்பகம், சென்னை - 35, மு.ப. செப்டம்பர் 1959.*

**கோவிந்தன் கா.,** — **ஆரியர்க்கு மூத்த தமிழ்ப் பண்பாடு,** *சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, மு.ப. 1999.*

**கோவிந்தன், கா.** — **சங்ககாலப் புலவர் வரிசை – 1,** *திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட், திருநெல்வேலி, வெளியீட்டுஎண்- 140,*

**கோவிந்தன், கா.,** — **சுடர்வீ வேங்கை,** *எழிலகம் வெளியீடு, செய்யாறு 604407, மு.ப. 1990.*

**கோவிந்தன், கா.** — **தமிழகத்தில் கோசலர்கள்,** *அருணா பப்ளிகேஷன்ஸ், தியாகராய நகரம், சென்னை. மு.ப.1960.*

| | |
|---|---|
| **கோவிந்தன், கா.** | **பெண்பாற் புலவர்கள்,** *திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், திருநெல்வேலி 6 மு.ப.1956.* |
| **கோவிந்தன்,** | **வள்ளல்கள்,** *திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், திருநெல்வேலி 6, மு.ப.1961* |
| **சஞ்சீவி, ந.,** | **சங்ககாலச் சான்றோர்கள்,** *59, பாரிநிலையம், பிராட்வே, சென்னை - 1, மூன்றாம் பதிப்பு, 1958.* |
| **சஞ்சீவி, ந., பேராசிரியர்,** | **மானம் காத்த மருதுபாண்டியர்,** *காவ்யா வெளியீடு, 14, முதல் குறுக்குத்தெரு, டிரஸ்ட்புரம், கோடம்பாக்கம், சென்னை - 600024. மு.ப. ஆகஸ்ட் 2004* |
| **சண்முகதாஸ், அ., (தொ.ஆ.)** | **சங்க இலக்கிய ஆய்வுகள்,** *தேசிய கலை இலக்கியப் பேரவை, கொழும்பு, மு.ப., டிசம்பர் 2002.* |
| **சத்தியமூர்த்தி, அ.ம.,** | **சதாசிவ பண்டாரத்தார் ஆய்வுக் கட்டுரைகள்,** *உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சி.ஐ.டி.வளாகம், தரமணி, சென்னை - 13. மு.ப.1998.* |
| **சதாசிவப் பண்டாரத்தார். தி.வை.,** | **புறநானூற்றுச் சொற்பொழிவுகள், புறநானூறும் கல்வெட்டுகளும்,** *தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை மு.ப. 1944* |

| | |
|---|---|
| **சதாசிவப் பண்டாரத்தார். தி.வை.,** | **இலக்கிய ஆராய்ச்சிகளும் கல்வெட்டுகளும்,** *தொல்காப்பியர் நூலக வெளியீடு, 202, ஜானிஜான் கான் தெரு, சென்னை மு.ப., சூன், 1961* |
| **சதாசிவப் பண்டாரத்தார். தி.வை.,** | **பிற்காலச் சோழர் சரித்திரம்,** *பகுதி-1, அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடு, மூன்றாம் பதிப்பு, 1958* |
| **சதாசிவப் பண்டாரத்தார். தி.வை.,** | **முதற்குலோத்துங்க சோழன்,** *சென்னை ஜுபிடர் அச்சுக்கூட வெளியீடு மூன்றாம் பதிப்பு 1941.* |
| **சதாசிவம்பிள்ளை., அ.** | **பாவலர் சரித்திர தீபகம்,** *ஏசியன் எடுகேஷனல் சர்வீஸஸ், புதுதில்லி- 16, மு.ப. 1886.* |
| **சாமிநாதையர், உ.வே. டாக்டர்,** | **புறநானூறு மூலமும் உரையும்,** *சென்னை லாஜர்னல் அச்சுக்கூடம், சென்னை. மூன்றாம் பதிப்பு 1935.* |
| **சாமிநாதையர், உ.வே.,** | **சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும்,** *ஆனந்தா அச்சுக்கூடம், சென்னை, மு.ப., 1929.* |
| **சாமிநாதையர், உ.வே.,** | **பதிற்றுப்பத்து மூலமும் பழையவுரையும்,** *வைஜயந்தி அச்சுக்கூடம், சென்னபட்டணம், மு.ப., 1904.* |
| **சாமிநாதையர், உ.வே.,** | **பத்துப்பாட்டு மூலமும் மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியருரையும்,** *கேசரி அச்சுக்கூடம், சென்னை, மூன்றாம்பதிப்பு, 1931.* |

***சாமிநாதையன், வே., (உ.ஆ.)*** — **குறிஞ்சிப்பாட்டு, -----,** *சென்னை, மு.ப., ஜுலை 1908.*

**சிதம்பரநாதன் செட்டியார், அ.,** — **செங்கோல் வேந்தர்,** *பிலோமினா பதிப்பகம், 5,25, புதுத்தெரு, சென்னை - 600 004, மு.ப. 1977.*

**சிதம்பரனார்., அ.,** — **சேரர் வரலாறு,** *திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட், திருநெல்வேலி. மு.ப. 1954.*

***சீனிவாச ஐயங்கார், பி.டி., (மு.ஆ.)*** **கோவிந்தன் (*மொ. பெ.ஆ.*)** — **தமிழர் வரலாறு, முதற்பாகம்,** *திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், திருநெல்வேலி 6, மு.ப.1989*

***சீனிவாச ஐயங்கார், பி.டி., (மு.ஆ.)*** **கோவிந்தன் (*மொ. பெ.ஆ.*)** — **தமிழர் வரலாறு, இரண்டாம் பாகம்,** *திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், திருநெல்வேலி 6, மு.ப.1989*

***சீனிவாச ஐயங்கார், பி.டி., (மு.ஆ.)*** **கோவிந்தன் (*மொ. பெ.ஆ.*)** — **தமிழர் வரலாறு,** *மூன்றாம் பாகம், திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், திருநெல்வேலி 6, மு.ப.1989*

***சீனிவாசன், ரா.,*** — **தமிழ் இலக்கிய வரலாறு,** *அணியகம், 5, செட்டியார் தெரு, சென்னை - 600 030, மு.ப. 1978.*

| | |
|---|---|
| **சுப்பிரமணியபிள்ளை, ஜி.,** | **திராவிட மக்கள் வரலாறு (ஆதிகாலம் தொடக்கம் கி.பி. 1800 வரையும்)** *ஜெனரல் பப்ளிஷர்ஸ் லிமிடெட் வெளியீடு, கொழும்பு, மு.ப., 1946.* |
| **சுப்பிரமணியபிள்ளை, கா.,** | **தமிழ் இலக்கிய வரலாறு** *ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம், பவழக்காரத் தெரு, சென்னை - 1, மு.ப., 1953.* |
| **சுந்தர், பா., முனைவர்** | **குன்றக்குடி அடிகளார் பணிகள்,** *சுமன் வெளியீடு, 293,அகமது வணிக வளாகம், இரண்டாவது தளம், இராயப்பேட்டை நெடுஞ்சாலை, சென்னை -14. மு.ப.2003* |
| **சூரிய நாராயண சாஸ்திரியார், வி.கோ.,** | **தமிழ்ப் புலவர் சரித்திரம், ........,** *மு.ப.1933* |
| **சேதுப்பிள்ளை, ரா.பி.,** | **தமிழகம் ஊரும்பேரும்,** *பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, மு.ப. - 1946.* |
| **சேதுப்பிள்ளை, ரா.பி.,** | **தமிழர் வீரம்,** *பழனியப்பா பிரதர்ஸ், கோனார் மாளிகை, 14, பீட்டர்ஸ்சாலை, சென்னை - 14, மு.ப. - 1947.* |
| **சேதுப்பிள்ளை, ரா.பி.,** | **தமிழ் விருந்து,** *பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, மு.ப. 1945.* |
| **சோமலெ** | **செட்டி நாடும் செந்தமிழும்,** *வானதி பதிப்பகம், பாண்டி பஜார், தி.நகர், சென்னை இ.ப.1999* |

**ஞானசம்பந்தன், அ.ச., பேராசிரியர்,** **பெரியபுராணம் ஓர்ஆய்வு,** *கங்கை புத்தக நிலையம், 13, தீனதயாளு தெரு, தியாகராயநகர், சென்னை - 600017, மு.ப. மார்ச், 1999.*

**ஞானசம்பந்தன், அ.ச, பேராசிரியர்,** **அகமும் புறமும்,** *கங்கை புத்தக நிலையம், 13, தீனதயாளு தெரு, தியாகராயநகர், சென்னை - 600017, மு.ப. - ஜுன் 1991*

**தங்கவேலு. கோ. ப.ஆ.,** **தமிழ்நில வரலாறு,** *தமிழக வரலாற்று வெளியீட்டகம், குறளகம், சென்னை மு.ப.1976*

**துரைசாமிபிள்ளை, ஔவை, சு,** **தமிழ் நாவலர் சரிதை,** *திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், திருநெல்வேலி, மு.ப. ஜனவரி 1949.*

**துரைசாமிபிள்ளை, ஔவை. சு. (உ.ஆ.) கோவிந்தன். கா., (ப.ஆ.)** **ஐங்குறுநூறு மூலமும் விளக்கவுரையும்,** *ஸ்ரீஇலக்ஷ்மிபிரஸ், திருவந்திபுரம், மு.ப. - ஜுன் 1938.*

**துரைசாமி, ஔவை.** **சேரமன்னர் வரலாறு,** *வள்ளுவர்பண்ணை, 10-31, இரண்டாவது முதன்மைச்சாலை, சி.ஐ.டி.நகர், சென்னை - 600 035, மு.ப. 2002.*

**துரைசாமிபிள்ளை, ஔவை.** **சைவ இலக்கிய வரலாறு (கி.பி.7 முதல் 10 ஆம்நூற்றாண்டுவரை)** *அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலைநகர், மு.ப. 1958.*

**தொல்காப்பியர்,** **தொல்காப்பியம்,** *அகத்திணையியலும் புறத்திணையியலும், இளம்பூரணர் உரை, வ.உசிதம்பரம் பிள்ளை (ப.ஆ.) இராமசாமி சாஸ்திரலு அண்ட் சன்ஸ், சென்னை. மு.ப.1928*

**தொல்காப்பியர்,** **தொல்காப்பியம், எழுத்ததிகார மூலமும் நச்சினார்க்கினியருரையும்,** *திருமகள் அழுத்தகம், கன்னாகம், மு.ப. 1937.*

**தொல்காப்பியர்,** **தொல்காப்பியம்,** *சொல்லதிகார மூலமும் சேனாவரையருரையும், திருமகள் அழுத்தகம், கன்னாகம், மு.ப. 1938.*

**தொல்காப்பியர்,** **தொல்காப்பியம்,** *பொருளதிகார மூலமும் நச்சினார்க்கினியருரையும், திருமகள் அழுத்தகம், கன்னாகம், மு.ப. 1948.*

**நவநீதகிருட்டிணன், அ.க.,** **ஔவையார் கதை வில்லுப்பாட்டு,** *சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகவெளியீடு, ப.ஆ.....*

**நாகசுவாமி, ரா.,** **கலைச்செல்வங்கள்,** *அரசினர் பொருட்காட்சி சாலை வெளியீடு, சென்னை அரசாங்கம், மு.ப., 1961.*

**நீலகண்ட சாஸ்திரி, கே.ஏ., (மொ.ஆ) ராமன். கே.வி.,** **சோழர்கள்,** *இந்தியன் கவுன்சில் ஆப் ஹிஸ்டாரிகல் ரிசர்ச் வெளியீடு மு.ப.1989*

**நீலகண்டசாஸ்திரி, கே.ஏ.,** **தென்இந்திய வரலாறு,** *ஒக்சுபோர்டு யூனிவேசிற்றி அச்சகம், இலங்கை அரசு வெளியீடு, மு.ப. 1966.*

| | |
|---|---|
| **பத்மநாபன், சி., (ப.ஆ.)** | **சங்க இலக்கியமும் சமூகமும்,** *இந்து சமய கலாசார அலுவல்கள் திணைக்களம், 248, 1,1 காலிவீதி, கொழும்பு-4, இலங்கை. ப.ஆ.2007* |
| **பரமகுரு. மரு.,** | **பறம்புமலை திருக்கொடுங்குன்ற வரலாறு,** *கபிலன் பதிப்பகம், 321, மூன்றாம் முதன்மைச்சாலை, இலாசுப்பேட்டை, புதுச்சேரி - 605008. மு.ப. - 2007.* |
| **பரமகுரு. மரு.,** | **குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீன வரலாறு,** *குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீன வெளியீடு. குன்றக்குடி.* |
| **பரமசிவானந்தம், அ.மு.,** | **தமிழக வரலாறு,** *தமிழ்க் கலைப் பதிப்பகம், சென்னை, மு.ப. 1993.* |
| **பரமசிவானந்தம், அ.மு.,** | **தமிழர் வாழ்வு,** *தமிழ்க் கலைப்பதிப்பகம், சென்னை, மு.ப. 1990.* |
| **பா. து. க.,** | **சங்ககால வள்ளல்கள்,** *அம்மையப்பர்அகம், 77, அவதானம் பாப்பையர்தெரு, சூளை, சென்னை. மு.ப., நவம்பர் 1951.* |
| **பாலசுப்பிரமணியன், கி.,** | **சங்ககால மகளிர்,** *பாரிநிலையம், 184, பிரகாசம் சாலை, சென்னை மு.ப. 1982.* |
| **பாரதியார்., மகாகவி** | **பாரதியார் கவிதைகள்,** *பூம்புகார் பதிப்பகம், சென்னை மு.ப. 1992.* |

*பாஸ்கரத் தொண்டைமான், தொ.மு.,* **இந்தியக் கலைச்செல்வங்கள்,** *கலைஞன் பதிப்பகம், 10, கண்ணதாசன்சாலை, தியாகராய நகர், சென்னை - 6000017, இரண்டாம்பதிப்பு - டிசம்பர் - 1999.*

*புலியூர்க்கேசிகன்,* **புறநானூறு மூலமும் உரையும்,** *சாரதாபதிப்பகம், சென்னை - 600 014. மு.ப.டிசம்பர் 2010*

*பூலோகசிங்கம், பொ., கலாநிதி, (ப.ஆ.) ஆ.* **சதாசிவப்பிள்ளை அவர்களின் பாவலர் சரித்திர தீபிகம்,** *கொழும்பு தமிழ்ச்சங்க வெளியீடு, கொழும்பு, மு.ப. - 1976.*

*மறைமலையடிகள்,* **முற்காலத் தமிழ்ப்புலவோர்,** *திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட், திருநெல்வேலி, மு.ப., செப்டம்பர், 1936*

*மனோன்மணி சண்முகதாஸ்,* **பண்டைத் தமிழர் வாழ்வியற்கோலம் இருப்பிடம்,** *குமரன் புத்தக இல்லம், கொழும்பு - சென்னை, மு.ப. 2002.*

*மாணிக்கம்பிள்ளை இராசமாணிக்கம்,ம்* **மொஹஞ்சதாரோ அல்லது சிந்துவெளி நாகரிகம்,** *திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், திருநெல்வேலி, மு.ப., மார்ச் 1941*

*முத்துச்சாமிச் சாமிக் கோனார், தி.அ.,* **கொங்கு மண்டல ஊர்த்தொகை, .....,** *திருச்செங்கோடு, மு.ப., 1923.*

**மௌனகுரு, சி.,** **தமிழர் வரலாறும் பண்பாடும் தெரிந்ததும் தெரியாததும்,** *குமரன்அச்சகம், 361, 1-2, டாம்வீதி, கொழும்பு - 12, மு.ப. 2005.*

**மௌனகுரு, சி.,** **பண்டைத் தமிழர் வரலாறும் இலக்கியமும்,** *அலைகள் வெளியீட்டகம், சென்னை-24, மு.ப. டிசம்பர் 2006.*

***ராகவையங்கார், ரா.,*** **தமிழ் வரலாறு,** *அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலைநகர், இரண்டாம்பதிப்பு, 1952.*

***ராகவையங்கார், ரா.,*** **தமிழக குறுநில வேந்தர்கள்,** *பாரதி பதிப்பகம், உஸ்மான் சாலை, தி.நகர், சென்னை - 17, மு.ப, 1994.*

***ராகவையங்கார், ரா.,*** **பாரிகாதை, *அண்ணாமலைப்*** *பல்கலைக் கழகத் தமிழ்நூல் வரிசை, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், மு.ப., 1937.*

***ராய.சொ.,*** **திருத்தலப்பயணம்,** *சி.வி.சிடி.வி. அறக்கட்டளை வெளியீடு, சென்னை, 600 085, மு.ப. 1966.*

**ராஜாமுகம்மது, ஜெ., கோவிந்தராஜ்,** **புதுக்கோட்டை தொண்டைமான் செப்பேடுகள்,** *முதன்மைசெயலர், அருங்காட்சியகங்களின் ஆணையர், அரசு அருங்காட்சியக வெளியீடு, சென்னை - 8, மு.ப. - 2009.*

***ராஜாமுகம்மது, ஜெ., டாக்டர்,*** **புதுக்கோட்டை மாவட்ட வரலாறு,** *அரசு அருங்காட்சியகம், எழும்பூர் சென்னை, 600 008. மு.ப. 2004.*

**வாலசுந்தரக்கவிராயர்,** **கொங்குமண்டலச் சதகவரலாறு,** *நல்லதம்பிச்செட்டித்தெரு, சென்னை - 2, மு.ப.அக்டோபர் 1960.*

**வானமாமலை, நா., (தொ.ஆ.)** **தமிழ்நாட்டுப் பாமரர் பாடல்கள்,** *என்சிபிஎச் பிரைவேட்லிமிடெட், சென்னை -6, மு.ப 1950.*

**வானமாமலை, நா.,** **கட்டபொம்மு கூத்து,** *மதுரைப் பல்கலைக்கழகம், மதுரை, மு.ப.1972*

**வானமாமலை, நா.,** **தமிழர் நாட்டுப் பாடல்கள்,** *நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சிட்கோ இண்டஸ்ட் ரியல் எஸ்டேட், சென்னை, மு.ப. 1954,*

**வானமாமலை, நா.,** **மக்களும் மரபுகளும்,** *நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், 41, பி. சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், சென்னை, மு.ப. 1976.*

**வெள்ளைவாரணனார், க.,** **சைவசித்தாந்த சாத்திர வரலாறு,** *தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் - 613005, மு.ப. திசம்பர் 2002.*

**வெள்ளைவாரணனார், க.,** **திருத்தொண்டர் வரலாறு (சுருக்கம்)** *திருமணவிழா வெளியீடு, மு.ப. 1986.*

**வெள்ளைவாரணனார், க.,வித்துவான்,** **சங்ககாலத் தமிழ்மக்கள்,** *நேஷனல் பப்ளிஷிங் கம்பெனி, 6, கொண்டி செட்டித் தெரு, சென்னை - 1, மு.ப. - 1950.*

| | |
|---|---|
| **வெள்ளைவாரணனார், க.,வித்துவான்,** | **பன்னிரு திருமுறை வரலாறு,** *அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்நூல் வெளியீடு, மு.ப., 1972.* |
| **வெற்றி குப்பபுசாமி** | **பறம்புமலை பாரி: நாடகம்,** *பவுனாம்பாள் பதிப்பகம், 1992* |
| **வேங்கடசாமி நாட்டார், ந.மு.,** | **சோழர்சரித்திரம் (முதற்பாகம்)** *ஜெகம் அண்டுகோ., டாட்ஸன்பிரஸ், திருச்சிராப்பள்ளி, மு.ப. 1928.* |
| **வேங்கடசாமி நாட்டார், ந.மு.,** | **வேளிர் வரலாற்றின் ஆராய்ச்சி,** *கரந்தைத் தமிழ்ச் சங்க வெளியீடு, மு.ப. 1915.* |
| **வேங்கடசாமி நாட்டார்., ந.மு.,** | **கட்டுரைத் திரட்டு பகுதி – 2,** *நாட்டார் பதிப்பகம், சென்னை - 14, மு.ப., 1949* |
| **வேங்கடசாமி நாட்டார்., ந.மு.,** | **கபிலர்,** *கரந்தைத் தமிழ்ச் சங்க வெளியீடு,ஜெகம் அண்ட்கோ பிரஸ், திருச்சினாப்பள்ளி, மு.ப., 1921* |
| **வேங்கடசாமி மயிலை., சீனி,** | **பண்டைத் தமிழக வரலாறு, சேரர், சோழர், பாண்டியர்,** *இளங்கணி பதிப்பகம், சென்னை- 600017* |
| **வேங்கடராமையா, கா.ம., பேராசிரியர்,** | **கல்வெட்டில் தேவார மூவர்,** *சேகர்பதிப்பகம், 66, பெரியார் தெரு, எம்.ஜி.ஆர். நகர், சென்னை - 600076, மு.ப., 2005.* |
| **வேலுப்பிள்ளை, ஸி.வி.** | **நாடற்றவர் கதை,** *ஐலண்ட் அறக்கட்டளை வெளியீடு, மு.ப., ஜுலை 1987* |

**ஜகந்நாதன், கி.வா.,** **அறப்போர்,** *அமுதநிலையம் பிரைவேட் லிமிடெட், தேனாம்பேட்டை, சென்னை - 18, மு.ப. - 1952*

**ஜகந்நாதன், கி.வா.,** **எழுபெரு வள்ளல்கள்,** *அமுத நிலையம் பிரைவேட் லிமிடெட், தேனாம்பேட்டை, சென்னை - 18, மு.ப. -நவம்பர், 1959.*

**ஜகந்நாதன், கி.வா.,** **பாண்டியன் நெடுஞ்செழியன்,** *அமுத நிலையம் பிரைவேட் லிமிடெட், தேனாம்பேட்டை, சென்னை - 18, மு.ப. -நவம்பர், 1956.*

**ஜகந்நாதன், கி.வா.,** **பாரிவேள்,** *அமுதநிலையம், பிரைவேட் லிமிடெட், தேனாம்பேட்டை, சென்னை - 18, மு.ப., 1968.*

**ஜகந்நாதன், கி.வா.,** **பெரும்பெயர் முருகன்,** *அமுதநிலையம் லிமிடெட், 1-45, இராயப்பேட்டை, ஹைரோடு, சென்னை - 14. இ.ப.1968.*

**ஜகந்நாதன், கி.வா.,** **வீரர் உலகம்,** *மணிவாசகர் நூலகம், சிதம்பரம், மு.ப. நவம்பர் 1966.*

**ஜெயதேவ், சி.ஜே., இரகுபதி. மு.,** **பழங்கால பண்பாடும் பழங்குடிகள் பண்பாடும்,** *அருங்காட்சியகங்களின் முதன்மை ஆணையர், அரசாங்கப் பொருட்காட்சிச் சாலை, சென்னை. மு.ப. 1962.*

**ஸ்ரீதர், தி.ஸ்ரீ., (ப.ஆ.)** **மதுரை மாவட்டக் கல்வெட்டுகள், முதல் தொகுதி,** *தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை, சென்னை - 8, மு.ப. 2005.*

## நிகண்டுகள் - அகராதிகள்


- **கதிரைவேற்பிள்ளை நா,** தமிழ்மொழி அகராதி, சாரதா பதிப்பகம், சென்னை 2003.(ம.ப)
- **சிங்காரவேலு முதலியார். ஆ.,** அபிதான சிந்தாமணி, ஆசியன் எஜூகேஷன் சர்வீஸஸ், நியூ டெல்லி, முதற்பதிப்பு 2005
- **முத்துத்தம்பிப்பிள்ளை. ஆ.,** அபிதானகோசம், ஆசியன் எஜுகேஷனல் சர்வீஸஸ், நியூடெல்லி, முதற்பதிப்பு - 1997
- ..... சூடாமணி நிகண்டு, தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின் சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர், மு.ப. 1999.


## ஆய்வுக் கோவை / இதழ்கள் / மலர்கள்


- **இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம். ஐந்தாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை.**
- **கல்வெட்டு, காலாண்டிதழ்**
- **பறம்புமலைச் சிறப்பு மலர், 1992**
- **தொடரும் சிறப்பு மலர், 1993.**
- **தொல்லியல் ஆய்வுத் தொகுதி.**
- **மக்கள் சிந்தனை, ஏப்ரல் மாத இதழ், 1997,**
- **மஹாகவிதை, இலக்கியக் காலாண்டிதழ், இதழ் 2, ஏப்ரல் 2014.**


## இணைய தளங்கள்


- http://temple.dinamalar.com
- http://www.thevaaram.org
- http://www.shaivam.org
- https://ta.wikipedia.org
- https://groups.yahoo.com/neo/groups/agathiyar
- http://www.tamilheritage.org
- https://theekkathir.in
- http://kadaramnet.blogspot.in

- Aravamuthan T.g., The Kaveri The Maukharis And The Sangam Age, The University of Madras, 1925.
- Chakravarti, N.P., Epigraphia Indica, Vol. XXV., ……., 1939
- David West Rudner, Caste and Capitalism in Colonial India The Nattukottai Chettiars, UNIVERSITY OF CALIFORNIA PRESS,
- Edgar Thurston and K. Rangachari, Castes and Tribes of Southern India Vol. 7, Madras : Government Press, 1909.
- George Hart (Editor, Translator), Hank Heifetz (Editor, Translator)The Four Hundred Songs of War and Wisdom, Columbia University Press, 1999
- George L. Hart , Poets of the Tamil Anthologies: Ancient Poems of Love and War, Princeton University Press (April 19, 2016)
- Govindaswamy Rajagopal, Cultural Poetics And Sangam Poetry, Sun international publishers, Janakpuri, New Delhi, 1960.
- Kamil Zvelebil, The Smile of Murugan on Tamil Literature of South India, BRILL, 1973
- Kingsbury, F. (Francis); Phillips, Godfrey Edward, Hymns of the Tamil Saivite saints, LONDON : OXFORD UNIVERSITY PRESS, NEW YORK, TORONTO. MELBOURNE,BOMBAY, CALCUTTA AND MADRAS 1921
- Krishnaswami A. (Professor of History.), Topics in South Indian History: From Early Times Upto 1565 A.D. The University of Michigan, 1975
- Krishnaswami., A., Topics in South Indian history: From early times upto 1565 A.D, Krishnaswami; 2nd edition (1978)
- Nilakanta Sastry, K.A., The Pandya Kingdom, London Luzac & Co, 4 6 , Great Russell Street, W C 1929/
- Ramachandra Dikshitar, Studies in Tamil Literature and History, Read Books, 2007
- Ramanathan, A new account of the history and culture of the Tamils, Chennai : Tirunelveli South India Saiva Siddhantha Works Pub. Society, 1998.
- Ramanujan, A. K., Poems of Love and War: From the Eight Anthologies and the Ten Long Poems of Classical Tamil, Columbia University Press, 2011
- Sharrock, John A, South Indian missions : containing glimpses into the lives and customs of the Tamil people, Westminster : Society for the Propagation of the Gospel in Foreign Parts, Collection robarts; toronto, 1910
- Srinivasa Aiyangar, M. (Muttusvami), Tamil studies, or essays on the history of the Tamil people, language, religion and literature, First Series, Madras at the Guardian Press, 1914.
- Varadarajan M., Treatment of Nature in Sangam Literature, The South India Saiva Siddhanta Works Publishing Society, Tinnevelly, Ltd.1969

# பின்னிணைப்புகள்

## வரைபடங்கள்

தென்னிந்தியா; (கி.மு. 300 - கி.பி.500)

## சங்ககாலத் தமிழகம் - வரைபடம்



## சங்ககாலத் தமிழகம் - வரைபடம் - 2



## தமிழகத்தில் பிராமிக் கல்வெட்டுகள் உள்ள இடங்கள்





சேரநாட்டுப் பகுதிகள்

# சிவகங்கைச் சீமை ஜமீன்தாரி



## மரு.பரமகுரு தமது நூலில் தந்துள்ள பறம்புநாடு உத்தேச வரைபடம்




## பறம்புநாடு உத்தேச வரைபடம்



# பறம்புமலை வான்வெளியிலிருந்து பல கோணங்களில் பருந்துப் பார்வை








பறம்புமலை  சென்று நின்றோர்க்கும் தோன்றும்



ஈண்டு நின்றோர்க்கும் தோன்றும்
(முழுப் பார்வையில் கோயிலோடு கூடிய பறம்புமலை)

## பறம்புமலை இயற்கை வளம் நிறைந்த இனிய காட்சிகள்





## திருக்கொடுங்குன்றம் (பறம்புமலை) திருக்கோயில்







தேனம்மை உடனாய மங்கைபாகர் நிழற்படமும் கோட்டோவியமும்

திருக்கோயில் ஆலய மணி





திருக்கொடுங்குன்றம் (தவத்திரு குன்றக்குடி அடிகளார் அருளாட்சிக் காலத்தில் எழுப்பப் பெற்ற இராசகோபுரம்)



பிரான்மலை (பறம்புமலை) உச்சியில் இருக்கும் பீரங்கி







பிரான்மலை (பறம்புமலை) கல்வெட்டுகளுள் ஒன்று

பிரான்மலை (பறம்புமலை) உச்சியில் இருக்கும் ஷேக் அப்துல்லா அவுலியா தர்கா (பிரான்மலையாண்டவர்) அன்றும் இன்றும்







வாராப்பூர் அரண்மனையின் தற்கால நிலை

பேரில்லா மரம் (பெயரில்லா மரம்)





பாரி முல்லைக்குத் தேரீந்த நிகழ்வை உணர்த்தும் படிமம்





ஊமைத்துரை ஒளிந்திருந்த குகை (ஊமையன் குடம்பு)

மலை உச்சியில் உள்ள பாலமுருகன் ஆலயம் (வேல் வழிபாடு)





பிரான்மலையின் ஆழமிக்க சுனைகளுள் ஒன்று

*பேரில்லா மரமும் பெரிய பிரான்மலையும்*
*வட்டச் சுனையும் வயிரவர் சன்னதியும்*
*குட்டைச் சுனையும் கொடுங்குன்ற நாதரும்*
*சுற்றித் திருமதிலும் சூழ்ந்ததொரு நந்தவனம்*
*நாலுகால் மண்டபமும் நடராசர் சன்னதியும்*
*ஆறுகால் மண்டபமும் அடைய வளஞ்சானும்*
*ஆனைகட்டும் சாவடியும் தேனாடி தீர்த்தமும்*
*தேடிவரும் கோடிசனம்.......*

*(பிரான்மலை வட்டகையில் வழங்கும் கிராமியப் பாடல்)*

---

*ராரி ராரி ராராரோ கண்ணே*
*ராரி ராரி ராராரோ*
*குளங்கலங்க நீராடி உங்கம்மா*
*குயில்போலப் பட்டுடுத்தி*
*மஞ்சன் வரங்கேட்டு மாது*
*மனங்கலங்கி நிற்கயிலே*
*மஞ்சன் கலிதீர்க்க மகுடராய் வந்தீயோ?*
*செம்பொன் கலிநீக்கச் சீமானாய் வந்தீயோ?*
*பிள்ளைக் கலிநீக்கப் பெருமாளாய் வந்தீயோ?*
*மாவிளக்குக் கொண்டு மங்கைநாயகர் கோயிலுக்கு*
*மஞ்சன் வரம்வேண்டி மலையோரம் போகையிலே*
*தென்விளக்குக் கொண்டு செம்பன் வரம்வேண்டி - நல்ல*
*தேனம்மை சிலையோரம் போகையிலே*
*மாவிளக்கைக் கைவாங்கி நல்லமங்கை நாயகர்*
*மணிவிளக்கைத் தந்தாக...*
*தென்விளக்கைக் கைவாங்கி நல்ல தேனம்மாள்*
*திருவிளக்கைத் தந்தாக...*
*எங்களுக்குத் தந்த தங்கம்*
*எழுத்து நூறாக வேணும்*
*வச்சிருக்கத் தந்த தங்கம்*
*வயது நூறாக வேணும்*
*ராரி ராரி ராராரோ கண்ணே*
*ராரி ராரி ராராரோ*

*(தாலாட்டுப் பாடல், பாடியவர்: சொ.சௌந்திரம் ஆச்சி (76),*
*கிருங்காக்கோட்டை)*
*(மஞ்சன்-மைந்தன்: செம்பன்-மகன்)*

# குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம் பறம்புமலை (பிரான்மலை) வள்ளல் பாரிவிழாவில் விருது பெற்ற பெருமக்கள்

| ஆண்டு | அறிஞர் பெயர் | விருது |
|---|---|---|
| 1954 | தெ.பொ.மீனாட்சி சுந்தரனார் | முதுபெரும்புலவர் |
| 1966 | முடியரசன் | கவியரசர் |
| 1967 | க.வெள்ளைவாரணர் | முதுபெரும்புலவர் |
| 1968 | கே.எம்.பாலசுப்பிரமணியம் | அருங்கலைக்கோன் |
| 1968 | ப.இராமநாதபிள்ளை | முதுபெரும்புலவர் |
| 1969 | அருணைவடிவேல் முதலியார் | முதுபெரும்புலவர் |
| 1969 | க.நயினார் முகமது | பெரும்புலவர் |
| 1969 | ந.சுப்புரெட்டியார் | அருங்கலைக்கோன் |
| 1969 | க.தேசிகன் | கவிஞர்கோ |
| 1969 | மதுரை சேதுராமன் பொன்னுசாமி சகோதரர்கள் | ஏழிசைச் செல்வர் |
| 1970 | ச.தண்டபாணி தேசிகர் | முதுபெரும்புலவர் |
| 1970 | கா.கோவிந்தன் | புலவரேறு |
| 1970 | மா.சண்முக சுப்பிரமணியம் | அருங்கலைக்கோன் |
| 1970 | பா. நமச்சிவாயம் | பெரும்புலவர் |
| 1970 | பூ.அமிர்தலிங்கனார் | கவிஞர்கோ |
| 1970 | டி.கே.சண்முகம் சகோதரர்கள் | நடிகர்கோ |
| 1970 | கே.ஆர்.சுப்பிரமணியம் | இசைவேள் |
| 1971 | தேவநேயப்பாவாணர் | செந்தமிழ் ஞாயிறு |
| 1971 | அகிலன் | நற்கதை நம்பி |
| 1971 | கோவை இளஞ்சேரன் | கவிஞர்கோ |
| 1971 | அ.மா. பரிமணம் | பெரும்புலவர் |

| | | |
|---|---|---|
| *1971* | ம.ரா.போ. குருசாமி | நூலறிபுலவர் |
| *1971* | திருமலை முத்துசுவாமி | அருங்கலைக்கோன் |
| *1971* | எஸ்.எஸ். தென்னரசு | சிறுகதை மன்னர் |
| *1971* | கே.கிருஷ்ணன் | ஏழிசைச் செல்வர் |
| *1972* | தா.ஏ.ஞானமூர்த்தி | நூலறிபுலவர் |
| *1972* | நாரண துரைக்கண்ணன் | நற்கதை நம்பி |
| *1972* | டி.என்.சுகிசுப்பிரமணியம் | எழுத்துவேந்தர் |
| *1972* | ஏ.கே.சி.வேணுகோபால் | ஏழிசைச்செல்வர் |
| *1972* | புத்தனேரி சுப்பிரமணியம் | கவிஞர்கோ |
| *1972* | தமிழண்ணல் | கணக்காயர் |
| *1972* | சி.நயினார் முகம்மது | பெரும்புலவர் |
| *1972* | சி.பாலசுப்பிரமணியம் | புலவரேறு |
| *1972* | இரா.காந்திமதி | செந்தமிழ் விறலி |
| *1972* | அரு.சோமசுந்தரம் | கவிஞர்கோ |
| *1972* | ரம்போலா மாஸ்கரனேஸ் | பெரும்புலவர் |
| *1973* | ந.சஞ்சீவி | நூலறிபுலவர் |
| *1973* | கே.என்.தண்டபாணிபிள்ளை | தலைக்கோலாசான் |
| *1973* | ஜெகசிற்பியன் | நற்கதைநம்பி |
| *1973* | க.மாடசாமி | கருணை மறவன் |
| *1973* | பத்மாசுப்பிரமணியன் | தலைக்கோலரிவை |
| *1973* | நீ.கந்தசாமிபிள்ளை | முதுபெரும்புலவர் |
| *1973* | வ.சுப.மாணிக்கனார் | முதுபெரும்புலவர் |
| *1974* | ஞா.மாணிக்கவாசகம் | கவிஞர்கோ |
| *1974* | இராசராசேசுவரி | செந்தமிழ்விறலி |
| *1974* | ஷேக்சின்னமௌலானா | ஏழிசைச்செல்வன் |
| *1974* | கலைஞர் மு.கருணாநிதி | செந்தமிழ்க்காவலர் |
| *1978* | பூ.சாம்பசிவம் | நூலறிபுலவர் |
| *1980* | ஆ.பழநி | கவிஞர்கோ |

| | | |
|---|---|---|
| *1980* | கோ.பா.தாமரை | கவிஞர்கோ |
| *1981* | இரா.சாரங்கபாணி | பெரும்புலவர் |
| *1981* | சாரதாநம்பியாரூரன் | செந்தமிழ்விறலி |
| *1982* | கவிஞர் சுரதா | கவியரசர் |
| *1983* | சிலம்பொலி செல்லப்பன் | நூலறிபுலவர் |
| *1985* | கா.காளிமுத்து | தமிழவேள் |
| *1985* | ஔவை நடராஜன் | நூலறிபுலவர் |
| *1986* | அப்துல் ரகுமான் | கவியரசர் |
| *1989* | விஜயலட்சுமி நவநீதகிருஷ்ணன் | செந்தமிழ்விறலி |
| *1992* | சிற்பிபாலசுப்பிரமணியம் | கவிஞர்கோ |
| *1992* | நல்லிஜெயலட்சுமி குப்புசாமி | தலைக்கோலரிவை |
| *1993* | பூமிபாலகன் | வள்ளல் |
| *1993* | சு.குழந்தைநாதன் | நூலறிபுலவர் |
| *1993* | புலவர் பூங்கோதை | செந்தமிழ்த் திலகம் |
| *1993* | க.ப.அறவாணன் | நூலறிபுலவர் |
| *1994* | சரளா ராசகோபாலன் | செந்தமிழ்த் திலகம் |
| *1998* | மு.தமிழ்க்குடிமகன் | நூலறிபுலவர் |
| *1998* | முனைவர் நா.பாலுசாமி | பெரும்புலவர் |
| *1998* | பொன்னீலன் | எழுத்து வேந்தர் |

## காலந்தோறும் பறம்பு மலையின் பெயர்கள்

| காலம் | பெயர் |
|---|---|
| சங்க காலம் | அண்ணல் நெடுவரை |
| | இனியோன் குன்று |
| | தண்பறம்பு நன்னாடு |
| | திணிநெடுங்குன்றம் |
| | நெடியோன் குன்று |
| | பறம்பு |
| | பாரி பறம்பு |
| பக்தி இலக்கியக் காலம் - 1 | கொடுங்கிரி |
| | கொடுங்குன்றம் |
| | கொழுங்கொடுந்திண்குன்றம் |
| | தண்கொடுங்குன்றம் |
| | திருக்கொடுங்குன்றம் |
| | திருநெடுங்குன்றம் |
| | திருநெலக்குன்றம் |
| | திருமலை |
| | பறநாடு |
| | பறமலை |
| | பறம்பூர் நாடு |
| | பாரீச்சுரம் |
| | பிரமநாடு |
| | பிரம்பூர் |
| | புறநாடு |
| | புறமலை |
| பக்தி இலக்கியக் காலம் - 2 (புராணம்) | கடோரகிரி |
| | கொடுமுடி |
| | சிவாசலம் |
| | தட்சிணமேரு |
| | தென்கயிலாயம் |
| | பிரசண்டகிரி |
| விடுதலைப் போராட்டக் காலம் | பிராய்மலை |
| | பிரான்மலைச் சீமை |
| | பிரான்மலை |
| | பிறமலை |
| தற்காலம் | திருக்கொடுங்குன்றம் |
| | பறம்புமலை |
| | பிரான்மலை |





# சங்கப்புலவர் மாண்புகள்

சொ. அருணன்



உலகையே ஊராகவும், மக்களையெல்லாம் உறவுகளாகவும் எல்லைகளைத் தகர்த்து பெருமைகளையும், சிறுமைகளையும் புறந்தள்ளிப் பொதுமையை நிலை நாட்டி மானுடம் பேணியவர்கள்தான் புலவர்கள். மன்னர்களைக் கும்பிட்டு விழுந்து கூத்தாடி வெறும் போற்றி பாடி புகழ் துதி செய்து பொரு ளீட்டிக் குவிப்பதற்காக வாழ்ந்தவர்களல்லர் தமிழ்ப்புலவர்கள்.

மக்களோடு மக்களாக வாழ்ந்து மானுடத்தையும், மொழியையும், இலக்கியத்தையும் பேணி வளர்த்தவர்களே புலவர்கள். அரசன் மேற்கொள்ளும் நன் முயற்சிகளுக்கு ஊக்கம் தந்து பாராட்டிய அதேவேளையில், மக்கட்கும் சமுதாயத்திற்கும் தீமை பயக்கும் செயல்களில் ஈடுபடும் கொடுங்கோன்மைக்கு அவன் முயலும் வேளையில் தலைகுட்டித் திருத்தும் பண்பினைப் பெற்றிருந்தனர் பண்புடைப் புலவர்கள். வாழ்த்துதற்கு வாழ்த்தியல் என்னும் துறை இருப்பதைப்போல அறிவு புகட்டுதற்குச் செவியறிவுறூஉத்துறை என்றே ஒன்று உண்டு. காதிற்குள் சென்று அறிவுறுத்துவது. புலவன் கூற அரசன் கைகட்டி வாய் மூடி அதைக்கேட்டுக் கொண்டிருக்கும் காட்சியைப் பாடல்களின் வழி உய்த்துணர்கிறோம். இது புலவர்களுக்கு, தமிழுக்குக் கிடைத்த பெருமை. அறமாண்பு.

நாட்டையே ஆளும் பேரரசன் ஆயினும், அடுத்தவேளை உணவுக்கு வழியில்லாத புலவர் ஆயினும் இலக்கியத்தில் சுட்டப் பெறும்போது இவனை (அரசனை) இவர் (புலவர்) பாடியது என்னும் மரபு பின்பற்றல் வியக்கத்தக்கது. இது தமிழுக்குக் கிடைத்த மாண்பு.

### பெருமை கண்டு பேணுந் தகைமையாளர்கள்

நரிவெரூஉத்தலையார், சேரமான் கருவூரேறிய ஒள்வாட்கோப்பெருஞ்சேரலை, "அருளும் அன்பும் நீங்கி நீங்கா நிரயங் கொள்பவரோடு சேராதே" என அறிவுறுத்தி, நாட்டை ஆளும் தகுதி பெறுவது எளிதன்று எனச் சுட்டி, "தாய் குழந்தையைப் பேணுவது போல் உனது நாட்டைப் பேணிப் பாது காப்பாயாக" என வாழ்த்தவும் செய்கிறார்.

காரிகிழார் என்னும் புலவர், பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடும்பொழுது, "நீ பேரரசனாக விளங்கியபோதும், உனது தலை கோயிலை வலம் வரும்போதும், ஆன்றோர்கள் வாழ்த்தும்போதும் தாழட்டும்" என்று வாழ்த்துவதோடு அறிவுறுத்தவும் செய்கிறார்.

### அறஞ்சுட்டும் அமைச்சர்கள் புலவோர்

உறையூர் முதுகண்ணன் சாத்தனார், சோழன் நலங்கிள்ளி போர்ப் பெருமையில் மூழ்கிக்கிடந்தபோது, "நல்லதன் நலனும் தீயதன் தீமையும் இல்லை என்போர்க்கு இனன் ஆகிலியர்" எனச் சுட்டி, "விழாவிலே ஆடும் கூத்தரைப் போல் விதம் விதமாக ஆடிக் கழிவதுதான் இவ்வுலக வாழ்க்கை. ஆயினும் போர் முடிவுற்றதும் நாட்டு நல் வாழ்விலே ஈடுபடவேண்டும்" எனக் குட்டிக் காட்டுகிறார்.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனுக்கு அரசநெறியைப் புகட்ட விரும் பிய வெள்ளைக்குடி நாகனார், "செங்கோல் ஆட்சியென்பது ஒருவர் அறம் வேண்டும்போது அவருக்கு எளிதில் காட்சியுடையவனாக அரசன் விளங்க வேண்டும். உன் புகழைச் சுமந்து விளங்கும் வெண்கொற்றக்குடை வெயிலை மறைப்பதற்காக இல்லை. அது குடிகளின் வருத்தத்தைப் போக்குவதாக அமைய வேண்டும். போரிலே நீ அடைந்த வெற்றிகூட கொழுமுனை கிழித்த விளைவயலின் சாலிடத்தே விளைந்த நெற்பயிரின் பயன் என்பதை மறவாதே! ஆதலால், உழவர் குடியினரை முதற்கண் பாதுகாத்து, ஏனைக் குடியினரையும் பசியின்றி நீ காப்பாயாக!" என அறமாண்பைப் புலப்படுத்துகிறார்.

**உட்பொருள் உணர்த்தும் வன்மையாளர்கள் புலவர்கள்**

புலவர்கள் நாவில் தமிழ் தவழும்போது அது பல அற்புதங்களைச் செய்துவிடுகிறது. அவர்கள் வாழ்த்துகிறார்களா? பழிக்கிறார்களா என உணர்ந்து கொள்ளமுடியாத சூழலில், அரசன் மருள்கிறான்.

புலவர் நெட்டிமையார், பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடும்பொழுது, "பாணர்களுக்குப் பொற்றாமரை தருகிறாய்; புலவர்களுக்குத் தேரும் யானையும் தருகிறாய்; ஆனால் வேற்றரசர்களின் நிலத்தை மட்டும் பறித்துக் கொள்கிறாயே? அதுஏன்?" என்று இரு பொருள்பட அவர் வினவும் வினாவில் மறைந்துள்ளது புகழ்ச்சியா? இகழ்ச்சியா என்பது தமிழுக்கே வெளிச்சம்.

நக்கீரர் பாண்டியன் நன்மாறனை, "வெற்றிவாள் ஏந்திய மாறனே! யவனர்கள் தங்கள் கலங்களில் கொண்டுவந்த குளிர் நறுமதுவைப் பணிப்பெண்டிர் பொற்கலங்களில் ஏந்த, அவ்வினிய நறா மாந்திக் களிப்புடனும் அமைதியுடனும் உன் நாட்கள் கழிவன ஆகுக" என்று கூறுவது வாழ்த்தா? சாபமா? என்று உற்றுக்கவனித்தால் தெளிவுபடும்.

**போரும் அமைதியும்**

போர்ப் பெருமை பாடுமிடத்துக் கூடப் புலவர்கள் மறைபொருள் தொனிக்கப் போரை இகழ்ந்தே பாடியிருக்கிறார்கள் என்பதை ஆழ்ந்து நோக்கின் அறியலாம். ஐயூர் முடவனார் (கிழார்) பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன்வழுதியின் போர்த்திறத்தை அவ்வாறே சுட்டுகிறார். "தண்தமிழ்ப் பொது எனப் பொறாஅன் ஆகிப் போர் எதிர்த்து நின்றாய்; நீரை விடவும் சிறையில்லை: தீச் சுடும்போது நிழலுமில்லை; புயற்காற்றைப் போல வேறு வலியில்லை; இதுபோல போருக்கு வயப் பட்டாரும் அவ்வாறே புற்றி லிருந்து எழுந்த ஈசலைப்போல ஒரு பகலுக்குள்ளாகவே அழிந்துவிடுவார்" என்று அறிவுறுத்துவது போர்க்கெதிரான தமிழின் உணர்வு நிலையாகவே பிரதிபலிக்கிறது.

கபிலரிடம், சேரன் செல்வக்கடுங்கோ வாழியாதன், "ஏன் உங்கள் கைகள் மென்மையாகஇருக்கின்றன?" எனக்கேட்டவினாவுக்கு அவர் அளித்த விடை மானுட - சமுதாயச் சார்புடையது. "போர்த் தொழிலாகிய கொலைத் தொழிலையே செய்வதால் உனது கரங்கள் வன்மையாகவும், ஊனும், கறியும், துவையும், சோறும் எடுத்து உண்ணுவதைத் தவிர வேறு எத்தொழிலும் செய்யாததால் எனது கரங்கள் மென்மையாகவும் உள்ளன" என்பதே அது.

போர்ப் பெருமையில் புரண்டிருந்த பாண்டியன் இலவந்திகைப்பள்ளி துஞ்சிய நன்மாறனை மதுரைமருதன் இளநாகனார் தடுத்து நிறுத்தி, "தேரும், போரும் பெருமை தருவதுதான்; எனினும், அறநெறியை முதலாவதாகக் கருதுவதே அரசனின் சிறப்பு. நம்மவர் என அறம் வழுவாதும், அயலார் என வெறுக்காதும் பொதுமைநிலை பேணுக" என அறிவுறுத்துவது தந்தை மகற்காற்றும் நன்றி போலெழுந்த பண்பன்றோ?

**ஒன்றிவாழும் வாழ்வே வாழ்வு**

ஒற்றுமை கண்ட விடத்துத் தமிழ்ப் புலவர்கள் மகிழ்ந்ததைப் போல வேறு எவரும் மகிழ்ந்திருப்பார்களா என்பது தெரியவில்லை. உலகைக்காக்கும் அமைதியும் ஒற்றுமையும் தமிழர் இலக்கியமும் வாழ்வும் வேண்டும் தவம் எனினும் பொருந்தும்.

காவிரிப் பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனாரின் பார்வையில் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவச் சோழனும், வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதிப் பாண்டியனும் இணைந்திருந்த காட்சி மகிழ்ச்சியை நல்குகிறது. "நீங்கள் இருவரும் ஒன்றுபட்டிருந்தால் கடல் சூழ்ந்த உலகம் முழுதும் பயன் எய்தும். நீங்கள் ஒருவருக்கொருவர் உதவுக" என்று வாழ்த்து கிறார்.

இவ்வாறு சங்கப்புலவர்கள் அமைதியும், அன்பும், ஒற்றுமையும் தழைக்கப் பாடல்களைப் பாடினர். இப்பாடல்கள் தமிழ்ப்புலவர்களுக்கு முன்னோடிகளாக அமைவன. இத்தகைய செந்நெறிகள் தமிழ்க் கவிதை மரபில் தொடர்வது தமிழ்ப்புலவர் வரிசைக்குப் புகழ் சேர்க்கும்.

# எங்கே புலவர்கள்?

By dn | Published on : 26th June 2016 12:57 AM | அ+அ அ- |





சங்க காலத்திலிருந்து தமிழகத்தை ஆண்டு வந்தவர்கள் அரசர்கள் என்று நினைத்தால் அது பொய். உண்மையாகவே தமிழகத்தை ஆண்டவர்கள் புலவர்கள்தாம். மூவேந்தர் காலம் என்று சொல்லுகிற மரபு இல்லை. சங்ககாலம் என்று சொல்லும் வழக்கே உண்டு. அரியணையை விடவும் சங்கப்பலகை உயர்ந்து நிற்பது இதற்கு எடுத்துக்காட்டு.

÷அரசர்களின் ஆளுமையும், ஆட்சி எல்லைகளும், அரண்மனைகளும், மாட மாளிகைகளும், கூட கோபுரங்களும் மக்கி மண்ணாகிப் போய்விட்டன. ஆனால், அவர்கள் ஆண்ட திறமும் முறையும் இன்றைக்கும் பாடமாக விளங்குகின்றன. அதற்கும் காரணம் புலவர்கள்தாம்.

÷பாணர், கூத்தர், பொருநர், விறலியர் இவர்கள் வரிசையில் சேர்பவர்களல்லர் புலவர்கள். அவர்கள் மக்களை மகிழ்விப்பதற்காகப் பொழுதுபோக்காகக் கலை நிகழ்த்துபவர்கள். ஆனால், வாழ்வியலோடு தங்களைப் பிணைத்துக்கொண்டு, பொறுப்புடன் சமுதாயத்தைக் கட்டமைத்தவர்கள்தான் புலவர்கள்.

÷உழுவார்கள் உலகத்தார்க்கு ஆணி என்றால், புலவோர்கள் வரலாற்றுக்கும் பண்பாட்டுக்கும் ஆணியானவர்கள். இவர்களுள் பெண்பாலரும் உண்டு.

÷சங்ககால ஆட்சியாளர்களில் மூவேந்தர்கள் மட்டும் புலவர்களால் போற்றப் பெற்றவர்கள் இல்லை. குறுநில மன்னர்கள், வள்ளல்கள், வேளிர்கள், நிலக்கிழார்கள், படைத்தலைவர்கள் என அறமும் தமிழும் வளர்த்த அனைவருமே பாடற் பேறு பெற்ற பெருமைக்குரியவர்கள்.

÷உலகையே ஊராகவும், மக்களையெல்லாம் உறவுகளாகவும் எல்லைகளைத் தகர்த்து பெருமைகளையும், சிறுமைகளையும் புறந்தள்ளிப் பொதுமையை நிலைநாட்டி மானுடம் பேணியவர்கள்தான் புலவர்கள்.

÷மன்னர்களைக் கும்பிட்டு விழுந்து கூத்தாடி போற்றிப்பாடி பொருளீட்டிக் குவிப்பதற்காக வாழ்ந்தவர்களல்லர் தமிழ்ப் புலவர்கள். மக்களோடு மக்களாக வாழ்ந்து மானுடத்தையும், மொழியையும், இலக்கியத்தையும் பேணி வளர்த்தவர்கள். அவர்களே இன்று வானுறையும் தெய்வங்களுக்கு இணையாகப் போற்றப் பெறுகின்றனர்.

÷அறத்தை முதலாகக்கொண்டு அரசர்களுக்கே அறிவுரை கூறும் தலைமைப் பொறுப்பினில் புலவர்கள் தங்களை நிறுத்திக் கொண்டனர். வாளுக்கும் வேலுக்கும் அஞ்சாத செங்கோல் வேந்தர்கள் இந்தப் புலவர்களின் எழுதுகோலுக்குப் பணிந்தே நடந்தனர் என்பது தமிழக வரலாறு உணர்த்தும் உண்மை.

÷அரசன் மேற்கொள்ளும் நன்முயற்சிகளுக்கு ஊக்கம் தந்து பாராட்டிய அதே வேளையில், மக்கட்கும் சமுதாயத்திற்கும் தீமைபயக்கும் செயல்களில் ஈடுபடும் கொடுங்கோன்மைக்கு அவன் முயலும் வேளையில் தலையில் குட்டித் திருத்தும் பண்பினைப் பெற்றிருந்தனர் புலவர்கள்.

÷வாழ்த்துதற்கு வாழ்த்தியல் என்னும் துறை இருப்பதைப் போல அறிவு புகட்டுதற்குச் செவியறிவுறூஉத் துறை என்ற ஒன்று உண்டு. காதிற்குள் சென்று அறிவுறுத்துவது. புலவன் கூற, அரசன் கைகட்டி வாய்மூடி அதைக் கேட்டுக் கொண்டிருக்கும் காட்சியைப் பாடல்களின் வழி உய்த்துணர்கிறோம். இது புலவர்களுக்கு, தமிழுக்குக் கிடைத்த பெருமை அறமாண்பு.

÷அக இலக்கியங்களில் தோய்ந்து காதலையும், இயற்கையின்பத்தையும் மட்டுமே புலவர்கள் பாடிக் கொண்டிருக்கவில்லை. புறத்திலும் கூடப் போர்வெறியைத் தூண்டிப் பாடினாரில்லை. சமுதாயத்திற்குத் தேவையான ஆழ்ந்த அறக்கருத்துகளை மக்களுக்கும் மன்னனுக்கும் சமத்துவமாகப் புகட்டியே வந்திருக்கின்றனர். அவர்கள் தம் வறுமை நீங்க மன்னனை வேண்டிப் பாடினாரில்லை. உலக வறுமையும் உலகத் துன்பங்களும் நீங்கவே பாடினர்.

÷நாட்டையே ஆளும் பேரரசன் ஆயினும், அடுத்தவேளை உணவுக்கு வழியில்லாத புலவர் ஆயினும் இலக்கியத்தில் சுட்டப்பெறும்போது இவனை (அரசனை) இவர் (புலவர்) பாடியது என்னும் மரபு பின்பற்றல் வியக்கத்தக்கது. இது தமிழுக்குக் கிடைத்த மாண்பு.

÷புறநானூற்றில் பாடாண்திணைகளையும் அரசவாகைகளையும்விடப் பொருண்மொழிக் காஞ்சியும் முதுமொழிக் காஞ்சியும் சிறந்து விளங்குகின்றன. இவ்விரு காஞ்சிகளும் உயர்ந்த தத்துவங்களை வெளியிடுவதற்குப் புலவர்களுக்கு வாய்ப்பாக அமைந்தன. அரசர்களே கூடப் பலபேர் தங்களைப் புலவர்களாகவே மாற்றிக் கொண்டதும் தமிழ் வரலாறு உணர்த்தும் உண்மை.

÷கடவுளையே புலவனாக வரச்செய்து, அவரோடு வாதிட்டுப் பேசியது தமிழுணர்வுதானே! நடந்து வந்த பயணக் களைப்பில் அறியாது முரசு கட்டிலில் துயின்ற புலவருக்கு மன்னனே கவரி வீசினான் என்றால், அது தமிழுக்குக் கிடைத்த மரியாதையல்லவா?

÷வில்லேர் உழவர் பகைகொளினும், சொல்லேர் உழவர் பகையைக் கொண்டு விடாதே என்று மன்னர்களுக்கெல்லாம் அறிவுறுத்தியதுதானே புலவர்களுக்கான அறம்.

÷ நாயன்மார்களிலும் ஆழ்வார்களிலும் பலரும் புலவர்களே. சித்தர்களும் புலவர்களே! இளங்கோவடிகளும், கம்பரும், தாயுமானவரும், வள்ளல் பெருமானும், பாரதியாரும், பாரதிதாசனும்கூட தமிழ்ப் புலவர்களே!

÷இவ்வழி வந்த பல்லாயிரம் புலவர்களிலே ஒருசிலரை மட்டுமே இங்கே எடுத்துரைக்க முடிந்தது.

÷இந்நாளில் அப்படியொரு புலவர் உள்ளாரா எனக் கேட்கும் நிலை வந்துவிட்டது! "புலவர்' என்பவர் "கவிஞர்' என மாற்றம் பெற்ற பின்னால் வீட்டுக்குள்ளேயே எல்லாரும் கவிஞராகும் பொதுப் பெயராயிற்றே! தானும் நிலைத்துத் தான் சார்ந்த சமுதாயத்தையும் நிலைநிறுத்தவல்ல எங்கே (அந்தப்) புலவர்கள்?

-சொ.அருணன்

# பறம்பின் முல்லை

By -சொ. அருணன் | Published on : 26th February 2017 02:24 AM | அ+ அ அ- | □

□





கடவுளோடு மலருக்கு உள்ள தொடர்பை எப்படிப் பிரிக்க முடியாதோ அதேபோல் இலக்கியத்தோடு மலருக்கு உள்ள தொடர்பையும் பிரிக்க முடியாது. காரணம், சங்க இலக்கியங்கள் எங்கும் மலர்களின் மணம் கமழும். திணைகளே பூக்களின் பெயர்களால் அமைந்தவைதானே.

அத்தகு மலர்களுள் சிறப்புடையது முல்லை மலர். இந்த முல்லை மலர் சிரிக்கும், பேசும். என்றாலும் அமைதியாகவும் இருக்குமா என்னும் கேள்வியும் எழுகிறது.

தலைவன் இளம் வயதிலேயே பொருள்தேடிப் பிரிந்து சென்று விட்டான். தனிமையில் இருக்கும் தலைவிக்குப் பேச்சுத் துணையாக இதுநாள் வரை முல்லைக்கொடி இருந்தது. தன் தலைவன் கார்காலத்திற்குள் வந்து விடுவான் என்று பேச்சுவாக்கில் தன் தோழியிடம் சொல்லி வைத்திருந்தாள் தலைவி. ஆனால், தான் வந்து விட்டதன் அறிவிப்பாய் முல்லைக்கொடியில் அரும்பு தோன்றச் செய்துவிட்டது கார்காலம். இதைக் கண்ட தலைவிக்கு வெட்கமும், தனிமைத் துயரும் தோன்ற, அதை வெளிப்படுத்த முல்லையைத் துணைக்கு அழைக்கிறாள். அந்த முல்லை சிரிக்குமாம். எப்படி? கார்காலத்தின் பற்களாய் மாறிச் சிரிக்குமாம். ""நீ பெருமையாகப் பேசிக் கொண்டிருந்தாயே உன்

கணவன் நான் (கார்காலம்) வருவதற்குள் வந்து விடுவான் என்று... ஆனால், நான் வந்து விட்டேன் இன்னும் உன் கணவன் வரவில்லையே?'' என்று ஏளனம் செய்து தன்னுடைய பற்களாகிய முல்லையின் அரும்பு மடல்கள் விரிய மலர்ந்து சிரிக்கப் போகிறது என்கிறாள் தலைவி.

""பெயல்புறந் தந்த பூங்கொடி முல்லைத்

தொகுமுலை இலங்கெயிறாக நகுமே தோழி

நறுந்தண் காரே''

இது குறுந்தொகையில் ஒக்கூர் மாசாத்தியார் காட்டுகின்ற முல்லை. முல்லைக்கு இருக்கின்ற அரும்பினைச் சுட்டி அதை அம்மலரின் பற்கள் என்கிறார்கள் கவிஞர்கள். இது கற்பனையேயானாலும் பல் இருப்பதனால் அம்மலர் பேசும்
தன்மையுடையது எனக் கருத இடமுண்டு. இதற்கு என்ன சான்று என்று கேட்கிறீர்களா?
பறம்பிற் கோமான் பாரியின் நாட்டில் பூத்த முல்லைப் பூ தனக்குப் பேசுவதற்கு வாயிருந்தும் பேசாமல் அமைதியாய் இருந்ததாம். ஏனாம்?
முல்லை மலர் பெண்மையின் குணம் வாய்ந்தது. தான் பற்றிப் படர்வதற்குக் கொழுகொம்பை விரும்புவது. பறம்பு மலையில் வேர்விட்ட ஓரறிவு உடைய அந்த உயிர்ப்பான முல்லைக் கொடி பற்றிப் படரத் துணையில்லாத தன் துயரத்தை மற்றவர்களிடம் சொல்லலாமோ என்று எண்ணி நாணி நின்றது. அவ்வேளையில் எதிர்வருபவன் மாவண்மையுடை பாரிவள்ளல். கேட்டார்க்கும் கேளார்க்கும் வாரி வாரி வழங்குகின்ற மாரி போன்றவன். பெண்களின் தந்தை. அவனிடமா கேட்பது என்று தனது அரும்புகளாகிய பற்கள் இருப்பினும் அமைதியாக இருந்ததாம். ஆனால், வந்தவன் வள்ளலல்லவா? வாய் திறந்து கேட்பதற்கு முன்னரே அந்த முல்லைக்குத் தன் தேரைத் தந்து விட்டான். அமைதியாக இருந்து சாதித்துக் கொண்ட அந்தப் பறம்பின் முல்லை வரலாற்றிலும் அழியாப் புகழைப் பெற்று விட்டது. கபிலர் விச்சிக்கோவிடம் பாரியின் பெருமை பற்றி (புறநானூற்றில்) இப்படிப் பாடுகின்றார்.

""பூத் தலைஅறாஅப் புனைகொடி முல்லை

நாத்தழும் பிருப்பப் பாடா தாயினும்

கறங்குமணி நெடுந்தேர் கொள்கவெனக்

கொடுத்த பரந்தோங்கு சிறப்பின் பாரி''

"நாத்தழும்பிருப்பப் பாடாது' என்பது இருவகைப் பொருளைத் தரும். தனக்கு நாக்கு என்னும் உறுப்பு இருந்தாலும் பேசாது என்று ஒரு பொருளும், தனது தேரைக் கொடுத்தால் தன்னைப் புலவரைப் போலப் புகழ்ந்து பாடாது என்று மற்றொரு பொருளும் கொள்ளலாம்.
எப்படியோ, பறம்பு முல்லை பாரியோடு நிலைபெற்று விட்டது தமிழுக்குக் கிடைத்த கொடையல்லவா?